# பொருளடக்கம்

## பொது :

மொழிப் பயிற்சி

## சிறப்புப் பகுதி:

# சந்திரன் தமிழ் இலக்கணமும் கட்டுரையும்

ஆறும் படிவம்

◆◆◆◆◇

பொது

---

கடவுள் வாழ்த்து

கண்ணவனைக் காண்கவிரு காதவனைக் கேட்கவாய்ப்
பண்ணவனைப் பாட பதஞசூழ்க—எண்ணிறைந்த
நெய்யொத்து நின்றானை நீலமிடற் றானையென்
கையொத்து நேர்கூப்புக.

# I. எழுத்து

## 1. எழுத்தின் இடப்பிறப்பு

நாம் பேசும்பொழுது கொப்பூழடியாகத் தோன்றி எழுகின்ற உதானன் என்னும் காற்று மார்புங் கழுத்துந் தலையும் மூக்குமாகிய நான்கிடங்களையும் பொருந்த உதடும், நாக்கும், பல்லும் மேல்வாயுமாகிய நான்கினுடைய முயற்சிகளால் எழுத்துக்கள் பிறக்கின்றன உச்சரித்துப் பார் :—

(1) அ, ஆ, இ, ஈ............ஔ.
(2) ய், ர், ல், வ், ழ், ள்.
(3) ங், ஞ், ண், ந், ம், ன்.
(4) க், ச், ட், த், ப், ற், ஃ.

(1) & (2) என்னும் பிரிவுகளில் உள்ள உயிரெழுத்துக்களும் இடையின மெய்யெழுத்துக்களும் கழுத்தில் பிறக்கின்றன. மூன்றாம பிரிவில உள்ள மெல்லின மெய்யெழுத்துக்கள் மூக்கில பிறக்கின்றன

நானகாம் பிரிவில் உளள வல்லின மெய்யெழுததுக களும், ஆய்த எழுத்தும் தலையில் பிறக்கின்றன.

எனவே, எழுததுக்கள் மார்பு, கழுத்து, தலை, மூக்கு என்ற நான்கிடங்களிலும பிறக்கும் என அறிகிறோம்

## 2. இன எழுத்துக்கள்

### உயிரெழுத்துககள

| அ-ஆ | இ-ஈ | உ-ஊ | எ-ஏ | ஒ-ஓ | ஐ-இ | ஔ-உ |
|---|---|---|---|---|---|---|

ஒவவொரு அறையில் உளள இரண்டு உயிரகளும ஒன்றற்கொன்று இனமாம

| க-ங | ச-ஞ | ட-ண | த-ந | ப-ம | ற-ன |
|---|---|---|---|---|---|

ஒவ்வொரு அறையில் உள்ள இரண்டு மெய்யெழுத துககளும் ஒன்றற்கொன்று இனமாம்

| ய, ர, ல, வ, ழ, ள |
|---|

இடையின மெய்யெழுத்துக்கள் ஆறும் ஓரினமாம எழுத்துக்கள் பிறப்பு, முயற்சி, அளவு, பொருள், வடிவு முதலியவற்றால் ஒருவாறு ஒத்திருப்பன இனவெழுத்துக்கள் எனப்படும்.

பயிற்சி :

I. (அ) கோடிட்ட இடங்களில் தந்நகரத்தை எழுதிப படி :—

ப—து, ச—தை, ம—தை, ப—தல், த—தை.

(ஆ) கோடிட்ட இடங்களில் றன்னகரத்தை எழுதிப்படி :—
செ—றான் ; ப—றி ; தி—றான் ; க—று , மு—றில்

(இ) கோடிட்ட இடங்களில் டண்ணகரத்தை எழுதிப் படி :—
ந—டு ; ம — டபம் ; ச—டை ; உ—டான் , க—டான்

II. கோடிட்ட இடங்களில் தகுந்த எழுத்துக்களை எழுதிப்படி :—

ச—கு, ப—சு, வ—டு, ச—து, பா—பு, க—று.

III. கீழே கொடுத்துள்ள சொற்களில் அளபெடைகள வந்துள்ளன விட்டுப்போன எழுத்துக்களை எழுதுக :—

ஓ—தல் ; உறா—ா ; உரனசை— ; கெடுப பதூா—ம.

## 3. மொழி முதல் இறுதி எழுத்துக்கள்

### மொழிக்கு முதலில வரும் எழுத்துக்கள்

படி

அடை, ஆடை, இடை, ஈட்டி, உரி, ஊடல், எடு, ஏடு, ஐயம், ஒன்று, ஓட்டம் ஔவியம்.

உயிரெழுத்துக்கள் பன்னிரண்டும் மொழிக்கு முதலில் வந்தன.

கனி, கால், கிளை, கீரி, குளம், கூட்டம், கெண்டை, கேணி, கைதை, கொக்கு, கோட்டை, கௌவை.

ககரமெய் பன்னிரண்டு உயிரோடுங்கூடி மொழிக்கு முதலில் வந்தது.

சட்டி, சாமை, சிரி, சீப்பு, சுக்கு, சூடு, செக்கு, சேவல், சைகை, சொல், சோறு, சௌக்கியம்.

சகர மெய் பன்னிரண்டு உயிரோடுங்கூடி மொழிக்கு முதலில் வந்தது.

தலை, தாழை, திங்கள், தீமை, துக்கம், தூக்கம், தெளிவு, தேன், தையல், தொங்கு, தோப்பு, தௌவை

தகர மெய் பன்னிரண்டு உயிரோடுங்கூடி மொழிக்கு முதலில் வந்தது.

நண்டு, நாக்கு, நிலம், நீர், நுங்கு, நூல், நெய், நேற்று, நைந்து, நொண்டி, நோக்கம், நௌவி.

நகர மெய் பன்னிரண்டு உயிரோடுங்கூடி மொழிக்கு முதலில் வந்தது.

படம், பாடம், பிணம், பீலி, புகழ், பூதம், பெட்டி, பேசு, பையன், பொன், போர், பௌவம்.

பகர மெய் பன்னிரண்டு உயிரோடுங்கூடி மொழிக்கு முதலில் வந்தது.

மனை, மாடு, மின்னல், மீன், முளை, மூங்கில், மெய், மேழி, மைந்தன், மொழி, மோப்பம், மௌவல்

மகர மெய் பன்னிரண்டு உயிரோடுங்கூடி மொழிக்கு முதலில் வந்தது.

வலை, வாழை, விலை, வீடு, வெள்ளம், வேலை, வையம், வௌவால்

வகர மெய் எட்டு உயிரோடுங்கூடி மொழிக்கு முதலில் வந்தது.

யவனர், யானை, யுகம், யூகி, யோகம், யௌவனம்.

யகர மெய் ஆறுயிரோடுங்கூடி மொழிக்கு முதலில் வந்தது.

ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கிற்று.

ஞகரம் நான்குயிரோடுங்கூடி மொழிக்கு முதலில் வந்தது.

அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், எங்ஙனம், யாங்ஙனம்.

ஙகரமெய் அகரவுயிருடன் சேர்ந்து, சுட்டையும் வினவையும் அடுத்து மொழிக்கு முதலில் வந்தது.

இவற்றால் பன்னிரண்டு உயிரெழுத்துக்களும், க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ, ங என்னும் பத்து உயிர் ஏறிய மெய்யெழுத்துக்களும் மொழிக்கு முதலில் வரும் என அறிகிறோம்.

வகரமெய் அ, ஆ, இ, ஈ, எ, ஏ, ஐ, ஔ என்னும் எட்டுயிரோடு கூடி மொழிக்கு முதலில் வரும்.

யகரமெய் அ, ஆ, உ, ஊ, ஒ, ஔ என்னும் ஆறுயிரோடு கூடி மொழிக்கு முதலில் வரும்

ஞகரமெய் அ, ஆ, எ, ஒ என்னும் நான்குயிரோடு கூடி மொழிக்கு முதலில் வரும்.

ஙகர மெய் அகர உயிரோடுகூடி, மூன்று சுட்டெழுத்துக்களுக்கும் எ, யா என்னும் இரண்டு வினாவெழுத்துக்களுக்கும் பின்னே வரும்.

எனவே, மொழிக்கு முதலில் வாராத மெய்யெழுத்துக்கள் ட், ண், ற், ன், ர், ல், ழ், ள் என்னும் எட்டெழுத்துக்கள்.

டங்கா, டமாரம், ரோட், லேட் என்பன தமிழ்ச் சொற்களாகா என அறிக.

## மொழிக்கிறுதியில் வரும் எழுத்துக்கள்

படி :

பல, பலா, இடி, தீ, கதவு, பூ, சே (எருது), சோ (அரண்மனை). அவ்வை, நொ (துன்பப்படு), போ, வெள (கொள்ளையிடு).

பன்னிரண்டு உயிரெழுத்துக்களும் மொழிக்கு முதலில் வந்தன. (எகர உயிர் மெய்யோடு ஈறாகாது).

உரிஞ (உராய்), மண், பொருந் (ஒத்திரு), மரம, பொன், வேய், வோ, வேல், தெவ் (பகை), வீழ், வாள்

மெய்யெழுத்துககளில் ஞ, ண், ந, ம, ன், ய, ர, ல, வ, ழ், ள் என்ற பதினொன்றும மொழிககு இறுதியில் வந்தன

எஃகு, அஃது

குற்றியலுகரம மொழிககு இறுதியில வநதது

எனவே, உயிரெழுததுககள பனனிரண்டும, ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள எனனும மெயயெழுததுககள் பதினொன்றும, குறறியலுகரம ஒனறும ஆக இருபததினனகு எழுததுக்களும மொழிககு ஈறறில் வரும என அறிகிறோம.

# II. சொல்

## 1. இயற்சொல், திரிசொல்

படி :

மண், கல்—பெயரியற் சொல்.
நடந்தான், செய்தான்—வினையியற் சொல்.
அவனுக்கு, அவனால்—கு, ஆல்—இடையியற் சொல்
அழகு, அன்பு—உரியியற் சொல்.

மேலே காட்டப்பட்ட சொற்கள் செந்தமிழ் நாட்டில் வழங்கும் சொற்கள் ; கற்றாரும், கல்லாரும் எளிதில் அறிந்துகொள்ளும் தன்மையை யுடையவை

இவ்வாறு, செந்தமிழ் நாட்டில் வழங்கும் சொல்லாய் யாவர்க்கும் தம் பொருளை விளக்கும் தன்மையுடையவை இயற்சொல் எனப்படும்.

அது பெயரியற் சொல், வினையியற் சொல், இடையியற் சொல், உரியியற் சொல் என நான்கு வகைப்படும்

### திரிசொல்

படி :

1. கிள்ளை, தத்தை, என்பன கிளியைக் குறிக்கும்.
2. வாரணம் என்பது யானை, கோழி, சங்கு முதலிய பல பொருள்களைக் குறிக்கும்.

இவை பெயர்த் திரிசொற்கள்.

1. படர்ந்தான், ஏகினான், சென்றான் என்பன போனான் என்ற பொருளைத் தருகின்றன
2. வரைந்தான் என்பது நீக்கினான், கொண்டான், எழுதினான் எனப் பல பொருள்களைத் தரும்.

இவை வினைத்திரிசொற்கள்.

1. சேறும், வருதும் — றும், தும் விகுதிகள் தன்மைப் பன்மை எதிர்காலத்தைக் குறிக்கும்.

2. 'உம்' என்பது எதிர்மறை, சிறப்பு, ஐயம் முதலிய பல பொருள்களைத் தரும்.

இவை இடைத்திரிசொற்கள்

சால, உறு—என்பன மிகுதி என்ற ஒரு பொருள் குறித்தன. கடி என்பது காவல், அச்சம் முதலிய பல பொருள்களைத் தந்தன.

இவை உரித்திரிசொற்கள்

எனவே, ஒரு பொருளையே தெரிவிக்கின்ற பல சொற்களாயும், பல பொருள்களைத் தெரிவிக்கின்ற ஒரே சொல்லாயும் கற்றவர் மாத்திரம் அரிதில் பொருள் காணும் தன்மையுடையவை திரிசொற்கள் எனப்படும்.

திரிசொல் பெயர்த்திரிசொல், வினைத்திரிசொல், இடைத்திரிசொல், உரித்திரிசொல் என நான்கு வகைப்படும்.

## 2. வடசொல், திசைச் சொல்

### வடசொல்

பழ :

| வடசொல் (சம்ஸ்கிருதச் சொல்) | தமிழ்ச் சொல் |
|---|---|
| கமலம் | கமலம் |
| காரணம் | காரணம் |
| காரியம் | காரியம் |
| மேரு | மேரு |

மேலே காட்டிய சொற்கள் ஸம்ஸ்கிருத மொழியிலும் தமிழ் மொழியிலும் ஒரே மாதிரி உச்சரிக்கக் கூடியவை. இச்சொற்கள் இரு மொழிகளிலும் உள்ள பொது எழுத்துக்களால் அமைந்தவை. இவ்வாறு உச்சரிப்பில் மாறுபடாத சொற்கள் தற்சமம் எனப்படும்.

| | |
|---|---|
| போகி | போகி |
| சுத்தி | சுத்தி |
| ஹரி | அரி |
| ஜலம் | சலம் |

இச்சொற்கள் சம்ஸ்கிருத மொழியிலும், தமிழ் மொழியிலும் உச்சரிப்பில் மாறுபடும். இவை சம்ஸ்கிருதத்திற்கே உரிய சிறப்பெழுத்துக்களாலும் இரு மொழிகளிலும் உள்ள பொது எழுத்துக்களாலும் அமைந்தவை. இவ்வாறு உச்சரிப்பில் மாறுபட்ட சொற்கள் தற்பவம் எனப்படும்.

எனவே, ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொதுவாகிய எழுத்துக்களாலும், ஆரியத்திற்கே உரிய சிறப்பெழுத்துக்களாலும், இவ்விருவகை எழுத்துக்களாலும் செந்தமிழ்ச் சொற்களைப்போல் வட நாட்டிலிருந்து தமிழ் நாட்டில் வந்து வழங்குவன வடசொற்கள் எனப்படும்.

திசைச்சொல்

படி :

போர்த்துகேசியச் சொற்கள் :

சன்னல், சாவி, அலமாரி, பாதிரி.

பாரசீகச் சொற்கள் :

ஜமீன், சிபாய், மேஜை, ரஸ்தா.

அரேபியச் சொற்கள் :

இரிசால், கஜானா, ஜப்தி, மாமூல்.

இந்துஸ்தானிச் சொற்கள் :

பங்களா, லட்டு, ஜவாப், ஜவான்.

ஆங்கிலச் சொற்கள் :

ரோடு, இரயில், பென்ச், மோட்டார்.

தெலுங்குச் சொற்கள் :

வேடிக்கை, வாடிக்கை, பண்டிகை, வாடகை.

கொடுந்தமிழ்ச் சொற்கள் :

பெற்றம் (பசு), தள்ளை (தாய்), கையர் (வஞ்சகர்), பாழி (சிறு குளம்), வெள்ளம் (நல்ல நீர்),

மேலே காட்டப்பட்ட சொற்கள் தமிழ் மொழியில் வழங்கும் பிறமொழிச் சொற்கள்

எனவே, வடசொற்கள் தவிர தமிழ் மொழியில் வழங்கும் பிற மொழிச் சொற்கள் திசைச்சொற்கள் எனப்படும்.

பயிற்சி

கீழே கொடுத்துள்ள சொற்கள் ஒவ்வொன்றும் எம் மொழியைச் சேர்ந்தவை?

அந்தோ, செப்பு, சிப்பந்தி, சுமார், இலாகா, காடிகானா, ஆஜர், ஜல்தி, உஷார், மாகாணம், சவாரி, பந்தோபஸ்து, கிராமபு மாசாநாமா, ஆசாமி, சிக்குதல், ஆய், இருளை, பாழி, அச்சன்

## 3. பெயர்ச் சொல்

(i) தான், தாம், எல்லாம் என்னும் பொதுப் பெயர்கள்

அவன் தான் வெளியே சென்றான்
அவள் தான் அதைச் செய்தாள்.
அது தான் உள்ளே நுழைந்தது.

தான் என்னும் பெயர்ச்சொல் உயர்திணையிலும் அஃறிணையிலும் ஒருமை எண்ணில் வந்தது. இது திணைப் பொதுப்பெயர் எனப்படும்.

வேலைக்காரர் தாம் சென்றனர்
பொம்மைகள் தாம் விழுந்தன.

தாம் என்னும் பெயர்ச் சொல் உயர்திணையிலும், அஃறிணையிலும் பன்மை எண்ணில் வந்தது இதுவும் திணைப்பொதுப்பெயர் எனப்படும்.

நாங்கள் எல்லாம் வெளியே சென்றோம்.
நீங்கள் எல்லாம் உட்காருங்கள்.
அவர்கள் எல்லாம் பாடினார்கள்.
அவைகள் எல்லாம் தண்ணீரில் நீந்தின.

எல்லாம் என்னும் பெயர்ச்சொல் இருதிணைகளிலும் வந்தன. இது இருதிணைப் பொதுப் பெயர் எனப்படும். இது மூவிடங்களிலும் பொதுவாய் வருவதால் இடப் பொதுப் பெயர் எனவும் வழங்கப்படும்.

### (ii) உருபு மயக்கம்

பொருளை அறிக:—

(1) காலத்தினால் செய்த நன்றி.

(2) மனைக்கு ஈன்ற கிழங்கு.

காலத்தினால் செய்த நன்றி—காலத்தில் செய்த நன்றி. 'ஆல்' என்ற மூன்றும் வேற்றுமை உருபு 'இல்' என்ற ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தது. மனைக்கு ஈன்ற கிழங்கு—மனையில் ஈன்ற கிழங்கு. இங்கு நான்காம் வேற்றுமை உருபு, ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தது.

இவ்வாறு ஒரு வேற்றுமை உருபைப் பொருளுக்கு ஏற்ற வாறு வேறொரு வேற்றுமை உருபாகத் திரித்துக் கொள்ளுதல் உருபு மயக்கம் எனப்படும்.

## 4. வினைச் சொல்

### (1) காலம் காட்டும் முறைகள்

#### இடைநிலை

| பகுதி | இடைநிலை | விகுதி | |
|---|---|---|---|
| செய் | த் | ஆன் | செய்தான். |
| உண் | ட் | ஆன் | உண்டான். |
| தின் | ற் | ஆன் | தின்றான். |
| கூடு | இன் | ஆன் | கூடினான். |

த், ட், ற், இன் என்ற இடைநிலைகள் இறந்த காலத்தைக் காட்டின.

| | | | |
|---|---|---|---|
| செய் | கிறு | ஆன் | செய்கிறான். |
| செய் | கின்று | ஆன் | செய்கின்றான். |
| செய் | ஆநின்று | ஆன் | செய்யாநின்றான். |

கிறு, கின்று, ஆநின்று என்ற இடை நிலைகள் நிகழ் காலத்தைக் காட்டின.

| | | | |
|---|---|---|---|
| உண் | ப் | ஆள் | உண்பாள். |
| செய் | வ் | ஆன் | செய்வான். |

ப், வ் என்ற இடைநிலைகள் எதிர்காலத்தைக் காட்டின.

## பகுதி

| பகுதி | | விகுதி | | |
|---|---|---|---|---|
| புகு | + | ஆன் | = | புக்கான். |

புக்கு என இரட்டித்து இறந்தகாலம் காட்டிற்று.

| | | | | |
|---|---|---|---|---|
| நகு | + | ஆன் | = | நக்கான். |

நக்கு என இரட்டித்தது

| | | | | |
|---|---|---|---|---|
| தொடு | + | ஆன் | = | தொட்டான். |

தொட்டு என இரட்டித்து இறந்த காலம் காட்டிற்று

| | | | | |
|---|---|---|---|---|
| விடு | + | ஆன் | = | விட்டான். |

விட்டு என இரட்டித்து இறந்த காலம் காட்டிற்று.

| | | | | |
|---|---|---|---|---|
| உறு | + | ஆன் | = | உற்றான். |

உற்று என இரட்டித்து இறந்த காலம் காட்டிற்று.

| | | | | |
|---|---|---|---|---|
| பெறு | + | ஆன் | = | பெற்றான். |

பெற்று என இரட்டித்து இறந்த காலம் காட்டிற்று

கு, டு, று என்பவற்றை ஈற்றிற் கொண்டுள்ள பகுதிகள் இரட்டித்து இறந்த காலம் காட்டின.

## விகுதி

படி :

சென்று (சென்றேன்), சென்றும் (சென்றோம்)—இறந்த காலம்.

சேறு (செல்வேன்), சேறும் (செல்வோம்)—எதிர் காலம்.

று, றும் என்ற விகுதிகள் இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் காட்டின.

வந்து (வந்தேன்), வந்தும் (வந்தோம்)-இறந்தகாலம்.

வருது (வருவேன்), வருதும் (வருவோம்) - எதிர் காலம்.

து, தும் என்ற விகுதிகள் இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் காட்டின

உண்டு (உண்டேன்), உண்டும் (உண்டோம்)—இறந்த காலம்.

டு, டும் என்ற விகுதிகள் இறந்தகாலத்தைக்காட்டின.

உண்கு (உண்பேன்), உண்கும் (உண்போம்) எதிர் காலம்.

கு, கும் என்ற விகுதிகள் எதிர்காலத்தைக்காட்டின.

உண்மின், உண்ணீர், உண்ணும், உண்ணுய், வாழ்க, வாழிய, வாழியர், சேறி (செல்வாய்), உண்மார் (உண்பார்) —எதிர்காலம்.

மின் விகுதியும், முன்னிலை ஏவல் விகுதிகளும், வியங்கோள் விகுதிகளும், இகர விகுதியும், மார் விகுதி யும் எதிர்காலத்தைக் காட்டின.

உண்ப (உண்டார்), என்ப (என்றார்)—இறந்தகாலம்.

உண்ப (உண்பார்), என்ப (என்பார்)—எதிர்காலம்.

பகர விகுதி இறந்த காலத்தையும், எதிர்காலத்தை யும் காட்டிற்று.

உண்ணும்.

—செய்யும் என்னும் வாய்பாட்டு முற்று விகுதி நிகழ் காலத்தையும், எதிர் காலத்தையும் காட்டிற்று.

உண்ணு.

எதிர்மறை ஆகார இறுதி மூன்று காலத்தையும் ஏற்று வந்தது.

இவற்றால் விகுதிகளும் காலங்காட்டும் என அறிகிறோம்.

எனவே, வினைச் சொற்களில் பகுதி, விகுதி, இடைநிலை என்னும் உறுப்புக்களுள் ஏதேனும் ஒன்று காலங் காட்டும் என அறியலாம்.

### (11) தெரிநிலை, குறிப்பு வினைகள்

### தெரிநிலை வினை

குயவன் குடத்தை வனைந்தான்.

வனைந்தான்—வினைமுற்று. இது வனைதல் தொழிலையும், இறந்த காலத்தையும் காட்டுகிறது.

இவ்வாறு செயலையும், காலத்தையும் வெளிப்படையாகக் காட்டும் வினை தெரிநிலைவினை எனப்படும்.

தெரிநிலை வினை அறிவிப்பன

செய்பவன்—குயவன்
கருவி —மண், சக்கரம் முதலியன.
நிலம் —(செய்த இடம்) வீடு
காலம் —இறந்த காலம்
செய்பொருள்—குடம்.

செயப்படுபொருள் குன்றாத வினை இந்த ஆறுவகைப் பொருள்களையும் காட்டும். செயப்படுபொருள் குன்றிய வினை செய்பொருள் நீங்கலாக ஏனைய ஐந்து பொருள்களையும் காட்டும்.

### குறிப்பு வினை

முருகன் பொன்னன் —(பொருள்)
முருகன் சேலத்தான் —(இடம்)
முருகன் வேனிலான் —(காலம்)

| | | |
|---|---|---|
| முருகன் | செங்கண்ணன் | —(சினை) |
| முருகன் | கரியன் | —(குணம்) |
| முருகன் | கடுநடையன் | —(தொழில்) |

பொன்னன்—வினைமுற்று. இது 'பொன்' என்ற பொருளடியாகப் பிறந்தது. இது 'அன்' விகுதி பெற்றதால் கருத்தா ஆண் என்று அறிகிறோம். இங்கு முருகன் கருத்தாவாகும். இவ் வினைமுற்று செயலையும், காலத்தையும் வெளிப்படையாகக் காட்டவில்லை; குறிப்பாக அறியலாம்.

இவ்வாறு பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற ஆறு பெயர்களின் அடியாகத் தோன்றி கருத்தா ஒன்றை மாத்திரம் காட்டும் வினை குறிப்புவினை எனப்படும்.

(iii) பலவகை வினையெச்சங்களின் வாய்பாடுகள்

இறந்த காலம்

படி :

| விகுதி | வாய்பாடு | வினையெச்சம் |
|---|---|---|
| (1) உ | செய்து | (1) நடந்து வந்தான். |
| (2) பு | செய்பு | (2) உண்குபு போனான் (உண்டு) |
| (3) ஆ | செய்யா | (3) பெய்யாக் கொடுக்கும்(பெய்து) |
| (4) ஊ | செய்யூ | (4) காணூ மகிழ்ந்தான் (கண்டு) |
| (5) என | செய்தென | (5) கண்டெனச் சென்றான். |

செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள் இறந்த காலங் காட்டின.

நிகழ் காலம்

| விகுதி | வாய்பாடு | வினையெச்சம் |
|---|---|---|
| அ | செய | பாடவல்லன் |

செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம் நிகழ்காலத்தைக்காட்டும்.

## எதிர் காலம்

| விகுதி | வாய்பாடு | வினையெச்சம் |
|---|---|---|
| (1) இன் | செயின் | (1) வரின் பெறுவான் (வந்தால்) |
| (2) இய | செய்யிய | (2) ஆடிய வந்தான் (ஆடுதற்கு) |
| (3) இயர் | செய்யியர் | (3) உண்ணியர் வருவான் (உண்ணுதற்கு) |
| (4) வான் | | (4) செய்வான் சென்றான் (செய்தற்கு) |
| (5) பான் | | (5) தின்பான் சென்றது (தின்பதற்கு) |
| (6) பாக்கு | | (6) உண்பாக்கு வந்தான் (உண்ணுதற்கு) |

---

# III. பொது

## 1. செய்யுள் விகாரங்கள்

" குறுந்தாட் டூதம் "

குறுந்தாள் என்பது குறுந்தாட் என வலிந்து நின்றது செய்யுளில் மெல்லின மெய் வல்லின மெய்யாக மாறியது வலித்தல் விகாரம் எனப்படும்

" தண்டை யின் இனக்கிளி கடிவோள் "

தட்டை என்பது தண்டை என மெலிந்து நின்றது. செய்யுளில் வல்லின மெய் மெல்லின மெய்யாக மாறியது. மெலித்தல் விகாரம் எனப்படும

" கற்பக நீழல் "

நிழல் என்பது நீழல் என நீண்டு நின்றது. செய்யுளில் குறில் நெடிலாக நீண்டது நீட்டல் விகாரம் எனப்படும்.

" நன்றென்றேன் தியேன் "

தீயேன் என்பது தியேன் எனக் குறுகி நின்றது. செய்யுளில் நெடில் குறிலாகக் குறுகியது குறுக்கல் விகாரம் எனப்படும்.

"நெல் விளையும்மே "

விளையுமே என்பது விளையும்மே என மகர மெய் விரிந்து நின்றது. இது விரித்தல் விகாரம் எனப்படும்.

" செய்கென "

செய்கவென என்ற சொல்லின் அகரம் தொக்கது. இது தொகுத்தல் விகாரம் எனப்படும்.

" மரையிதழ் "

தாமரை என்பது முதல் குறைந்தது. இது முதற் குறை எனப்படும்.

"ஒதி முதுபோத்து"—ஓந்தி என்பது இடை குறைந்தது. இது இடைக்குறை எனப்படும்.

"நீலுண் துகிலிகை"—நீலம் என்பது கடை குறைந்தது. இது கடைக்குறை எனப்படும்,

ஆதலால், செய்யுள் விகாரங்கள் வலித்தல் விகாரம், மெலித்தல் விகாரம், நீட்டல் விகாரம், குறுக்கல் விகாரம், விரித்தல் விகாரம், தொகுத்தல் விகாரம், முதற்குறை. இடைக்குறை, கடைக்குறை என ஒன்பது வகைப்படும்.

## 2. சொல் உருபு பெயரும் வினையும் புணரும் முறை

படி :

வேற்றுமை கொண்டு முடியும் சொற்கள்.
கருவூரின் கிழக்கு.
கந்தனது கை

எல்லைப்பொருள் தரும் ஐந்தாம் வேற்றுமை 'இன்' னும், ஆறும் வேற்றுமை 'அது'வும் பெயர் கொண்டன.

குடத்தை வனைந்தான்.
வாளால் வெட்டினான்.
நோயின் நீங்கினான்.
அண்ணா, வா.

இரண்டு, மூன்று, ஐந்து, எட்டு என்னும் வேற்றுமைகள் வினை கொண்டன.

| | |
|---|---|
| கண்ணன் அவன் | கண்ணன் வென்றான் |
| பிணிக்கு மருந்து | குருடனுக்குக் கொடுத்தான் |
| மணியின் கண் ஒளி | சேலத்தின் கண் வாழ்ந்தான் |

முதல் வேற்றுமையும், நான்காம் வேற்றுமையும், ஏழாம் வேற்றுமையும் பெயரையும் வினையையும் கொண்டன.

## முற்றுவினை பெயர்கொண்டு முடிதல்

| தெரிநிலை வினைமுற்று | குறிப்பு வினைமுற்று |
|---|---|
| வந்தான் அவன் — பொருட்பெயர் | பெரியவன் அவன் — பொருட்பெயர் |
| குளிர்ந்தது நிலம் — இடப்பெயர் | நல்லது நிலம் — இடப்பெயர் |
| வந்தது வேனில் — காலப்பெயர் | நல்லது கார் — காலப்பெயர் |
| குவிந்தது கை — சினைப்பெயர் | நல்லது கால் — சினைப்பெயர் |
| சிறந்தது மேன்மை — குணப்பெயர் | நல்லது அழகு — குணப்பெயர் |
| நீங்கியது பிறப்பு — தொழிற்பெயர் | நல்லது நீந்துதல் — தொழிற்பெயர் |

வினைமுற்றுக்கள் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் அறுவகைப் பெயர்களையும் கொண்டு முடிந்தன.

## பெயரெச்சங்களின் முடிவு

| தெரிநிலைப் பெயரெச்சம் | குறிப்புப் பெயரெச்சம் |
|---|---|
| படித்த மனிதன் | நல்ல மனிதன் |
| பிறந்த நாடு | நல்ல நாடு |
| பிறந்த நாள் | நல்ல நாள் |
| கொடுத்த கை | நல்ல பல் |
| நிறைந்த புண் | உள்ள பெருமை |
| கற்ற கல்வி | நல்ல நடத்தை |

பெயரெச்சங்கள் அறுவகைப் பெயர்களைக் கொண்டு முடிந்தன

## வினையெச்சங்களின் முடிவு

தெரிநிலை வினையெச்சம் :

பார்த்து வந்தான்—வினைமுற்றைக் கொண்டு முடிந்தது.
பார்த்து வந்த—பெயரெச்சம் கொண்டது.
பார்த்துப் பேசி—வினையெச்சம் கொண்டது.
படித்து வருதல்—தொழிற் பெயர் கொண்டது.
படித்து வந்தவன்—வினையாலணையும் பெயர் கொண்டது.

குறிப்பு வினையெச்சம் :

மெல்லப் பேசினன்—வினைமுற்றைக் கொண்டது.

மெல்ல வந்த—பெயரெச்சம் கொண்டது.

மெல்ல வந்து—வினையெச்சம் கொண்டது.

மெல்ல நடத்தல்—தொழிற்பெயர் கொண்டது

மெல்ல வந்தவன்—வினையாலணையும் பெயர் கொண்டது.

# IV. புணர்ச்சி

## 1. குற்றுகரப் புணர்ச்சி

### பொது விதி

வரகு + அருமை = வரகருமை.
நாடு + ஆண்டான் = நாடாண்டான்.

வருமொழியில் உயிர்வர, நிலைமொழியில் குற்றியலுகரம் தான் ஏறி நின்ற மெய்யை விட்டுக் கெட்டது. குற்றியலுகரம் கெட, நின்ற மெய்யின்மேல் வந்த உயிர் ஏறிற்று.

வரகு + யாது = வரகியாது.
நாகு + யாப்பு = நாகியாப்பு.

நிலைமொழியில் குற்றியலுகரத்தின்முன், வருமொழியில் யகரம் வர, குற்றியலுகரம் இகரமாகத் திரிந்தது.

கதவு + அழகிது = கதவழகிது.
கதவு + யாது = கதவியாது.

முற்றியலுகரத்தின் முன் உயிர் வர, முற்றியலுகரம் கெட, மெய்மேல் வந்த உயிர் ஏறிற்று.

முற்றியலுகரத்தின் முன் யகரம் வர, முற்றியலுகரம் இகரமாகத் திரிந்தது.

### சிறப்பு விதிகள்

ஆறு + தலை = ஆறுதலை—நெடிற்றொடர்.
எஃகு + சிறிது = எஃகு சிறிது—ஆய்தத் தொடர்.
வரகு + தீது = வரகு தீது—உயிர்த்தொடர்.
வந்து + தந்தான் = வந்து தந்தான்— மென்றொடர்.
எய்து + கொன்றான் = எய்து கொன்றான்.— இடைத் தொடர்.

வன்றொடரொழிந்த ஐந்து தொடர்க் குற்றியலுகரத்தின் முன்னும் வருகிற வல்லினம் அல்வழிப் புணர்ச்சியில் இயல்பாயிற்று.

அங்கு + கண்டான் = அங்குக் கண்டான்.
இங்கு + கண்டான் = இங்குக் கண்டான்.
உங்கு + கண்டான் = உங்குக் கண்டான்.
எங்கு + கொண்டான் = எங்குக் கொண்டான்.
ஆங்கு + கொண்டான் = ஆங்குக் கொண்டான்.
ஏங்கு + கொண்டான் = ஏங்குக் கொண்டான்.
ஊங்கு + கொண்டான் = ஊங்குக் கொண்டான்.
யாங்கு + கண்டான் = யாங்குக் கண்டான்.
யாண்டு + சென்றான் = யாண்டுச் சென்றான்.

ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணர்த்தும் மென்றொடர்க் குற்றுகர வீற்றிடைச் சொற்களின்முன் வல்லினம் மிகுந்தது.

அன்று + கண்டான் = அன்று கண்டான்.
இன்று + கண்டான் = இன்று கண்டான்.
என்று + கண்டான் = என்று கண்டான்.
பண்டு + கண்டான் = பண்டு கண்டான்.
முந்து + கண்டான் = முந்து கண்டான்.

ஏழாம் வேற்றுமை காலப் பொருளுணர்த்தும் மென்றொடர்க் குற்றுகர வீற்றிடைச் சொற்களின் முன் வரும் வல்லினம் இயல்பாம.

பார்பு + கடுமை = பார்பு கடுமை—இடைத் தொடர்.
எஃகு + சிறுமை = எஃகு சிறுமை—ஆய்தத் தொடர்.
நாகு + தலை = நாகு தலை—ஒற்றிடையின் மிகா நெடிற்றொடர்.
வரகு + பதர் = வரகுபதர்—ஒற்றிடையின் மிகா உயிர்த்தொடர்.

இடைத்தொடர், ஆய்தத்தொடர், ஒற்று இடையே மிகாத நெடிற்றொடர், ஒற்று இடையே மிகாத உயிர்த் தொடர் குற்றியலுகரங்களின் முன்வரும் வல்லினம் இயல்பாகும்.

வண்டு + கால் = வண்டுக்கால்—மென்றொடர்.
கொக்கு + சிறகு = கொக்குச் சிறகு—வன்றொடர்.

மென்றொடர், வன்றொடர் குற்றியலுகரங்களுக்கு முன் வல்லினம் வர வேற்றுமையில் மிகும்.

ஆடு + கால் = ஆட்டுக்கால்—நெடிற்றொடர்.
பாறு + கால் = பாற்றுக்கால் ,,
முயிறு + கால் = முயிற்றுக்கால்—உயிர்த்தொடர்.
முருடு + கால் = முருட்டுக்கால். ,,

டகர, றகர ஈற்று நெடிற்றொடர், உயிர்த்தொடர் குற்றியலுகரங்கள் வேற்றுமைப் புணர்ச்சியில் பெரும்பாலும் இரட்டித்தன.

மருந்து + பை = மருத்துப்பை.
கரும்பு + வில் = கருப்புவில்
கன்று + ஆ = கற்று

சில மென்றொடர்க் குற்றியலுகர மெய்கள் வேற்றுமையில் வன்றொடராகத் திரிந்தன.

நஞ்சு + பகைமை = நச்சுப் பகைமை.
என்பு + உடம்பு = எற்புடம்பு.

சில மென்றொடர்க் குற்றியலுகர மெய்கள் அல்வழியில் வன்றொடராகத் திரிந்தன.

குரங்கு + மனம் = குரங்கு மனம்
குரக்கு மனம்.
குரங்கு + குட்டி = குரங்குக் குட்டி.
குரக்குக் குட்டி.

சில மென்றொடர் குற்றியலுகர மெய்கள் இரு வழியிலும் விகற்பித்தன.

பண்டு + காலம் = பண்டைக் காலம்.
இன்று + நாள் = இற்றைநாள்.
அன்று + கூலி = அற்றைக் கூலி.
அன்று + நலம் = அற்றைநலம்

மென்றொடர்க் குற்றியலுகர மொழிகள் ஈற்றில் ஐகாரச் சாரியை பெற்றன.

வடக்கு + கிழக்கு = வடகிழக்கு
குடக்கு + திசை = குடதிசை
குணக்கு + கடல் = குணகடல்.

திசைப் பெயருடன் திசைப் பெயரும் பிறவும் சேர, நிலைமொழியில் ஈற்றில் 'கு' என்னும் உயிர் மெய்யும், ககர மெய்யும் கெட்டன.

தெற்கு + கிழக்கு = தென்கிழக்கு.
தெற்கு + குமரி = தென் குமரி.

திசைப் பெயருடன் திசைப்பெயரும் பிறவும் சேர, நிலைமொழியில் கு என்னும் உயிர்மெய்கெட, றகரம் னகரமாயிற்று.

மேற்கு + கடல் = மேல்கடல்.
மேற்கு + வீதி = மேல்வீதி.

மேற்கு என்ற திசைப்பெயர்முன் வேறு பெயர்கள் வர, 'கு' என்னும் உயிர்மெய்கெட, றகரம் லகரமாயிற்று.

தெங்கு + காய் = தேங்காய்.

காய் என்னும் சொல் வருமொழியாய் வந்ததால் 'தெங்கு' என்னும் நிலைமொழியின் முதல் நீள, 'கு' என்னும் உயிர்மெய் கெட்டது.

## 2. தேன், அகம்: இவை புணரும் முறை

தேன் + கடிது = தேன் கடிது.
தேன் + மாண்டது = தேன் மாண்டது.
தேன் + யாது = தேன் யாது.
தேன் + கடுமை = தேன் கடுமை.
தேன் + மாட்சி = தேன் மாட்சி.
தேன் + யாப்பு = தேன் யாப்பு.

தேன் என்ற சொல்லின்முன் மெய்கள் வர இறுதியில் உள்ள னகரமெய் இயல்பாயிற்று.

தேன் + மொழி = தேன்மொழி.
= தேமொழி.

தேன் + மலர் = தேன்மலர்
= தேமலர்

தேன் என்ற சொல்லின்முன் மெல்லினம் வர இறுதியில் உள்ள னகரமெய் இயல்பாதலும் கெடுதலும் உண்டு.

தேன் + குழம்பு = தேன் குழம்பு.
= தேக் குழம்பு.
= தேங் குழம்பு.

தேன் + குடம் = தேன் குடம்.
= தேக் குடம்.
= தேங் குடம்.

தேன் என்ற சொல்லின்முன் வல்லினம் வர, இறுதியிலுள்ள னகரமெய் இயல்பாதலும், னகரமெய் கெட வந்த வல்லினமாவது அதற்கு இனமான மெல்லினமாவது மிகுதலும் உண்டு.

அகம் + செவி = அஞ்செவி.
அகம் + கை = அங்கை.

அகம் என்னும் இடப்பெயர் முன் செவி, கை என்னும் சினைப்பெயர்கள் வர, நிலைமொழியில் இறுதி

மகரம் வன்மைக்கு இனமாகத் திரிதலேயன்றி அதன் நடு நின்ற 'க' என்னும் உயிர்மெய் கெடும்; உயிர்மெய் கெடாது, அகஞ்செவி, அகங்கை என்றும் வரும்.

## 3. ணகர னகர ஈறு, லகர ளகர ஈறு

### ணகர னகர வீறு

மண் + குடம் = மட்குடம்.

பொன் + தகடு = பொற்றகடு.

ணகர னகர ஈறுகள் வேற்றுமையில் வல்லினம்வர டகர றகர ஈறுகள் ஆயின.

மண் + மாட்சி = மண் மாட்சி.

பொன் + மாட்சி = பொன் மாட்சி.

மண் + யாப்பு = மண் யாப்பு.

பொன் + வன்மை = பொன் வன்மை

ணகர னகர ஈறுகள் வேற்றுமையின் மெல்லினமும் இடையினமும வர இயல்பாயின.

மண் + } கடிது = மண் கடிது, பொன் கடிது.
பொன் } மாண்டது = மண் மாண்டது, பொன் மாண்டது.

மண் + } யாது = மண் யாது, பொன் யாது.
பொன் }

ணகர னகர ஈறுகள் அல்வழியில் மூவினமும் வர இயல்பாயின.

தூண் + நன்று.

= தூண் + ணன்று (நகரம் திரிந்தது).

= தூ + ணன்று (ண்....கெட்டது).

= தூணன்று.

தூண் + நன்மை.
= தூண் + ணன்மை (நகரம் திரிந்தது).
= தூ + ணன்மை (ண்....கெட்டது).
= தூணன்மை

கோன் + நல்லன்
= கோன் + னல்லன் (நகரம் திரிந்தது)
= கோனல்லன். (ன்... கெட்டது).
= கோன் + நன்மை.
= கோன் + னன்மை (நகரம் திரிந்தது)
= கோனன்மை (ன்....கெட்டது).

தனிக் குறிலைச் சாராத நிலைமொழிகளின் இறுதியில் உள்ள ணகர, னகர ஈறுகள் வருமொழியில் முதலில் நகரம் திரியக் கெடும்.

### லகர ளகர ஈறு

கல் + சட்டி = கற்சட்டி
கள் + குடம் = கட்குடம்.

லகர ளகரங்கள் வேற்றுமையில் வல்லினம் வர முறையே றகர டகரங்கள் ஆயின.

கல் + குறித்து = கல் குறித்து.
= கற் குறித்து
முள் + குறித்து = முள் குறித்து.
= முட் குறித்து

லகர ளகரங்கள் அல்வழியில் வல்லினம் வர உறழ்ந்து வந்தன.

கல் + மலை = கன் மலை.
வாள் + மாண்பு = வாண் மாண்பு.
கல்—மாட்சி = கன் மாட்சி.
முள் + மாட்சி = முண் மாட்சி.

லகர ளகரங்கள் இருவழியிலும் மெல்லினம் வர னகர ணகரமாகத் திரிந்தன.

கல் + யாது = கல் யாது?
முள் + யாது = முள யாது?
கல் + யாப்பு = கல் யாப்பு.
முள் + யாப்பு = முள யாப்பு.

லகர ளகரங்கள இருவழியிலும் இடையினம வர இயல்பாயின

வேல் + தீது = வேறீது
வாள் + தீது = வாடீது

லகர ளகரங்கள் அல்வழியில் தகரந்திரியக் கெட்டன

தோன்றல் + நல்லன் = தோன்றனல்லன்
வே + நல்லன் = வேணல்லன்
தோன்றல் + நன்மை = தோன்றனன்மை
வேள் + நன்மை = வேணன்மை.

லகர ளகரங்கள இருவழியும தகர திரியுமிடத்துக் கெட்டன.

கால் + சிறிது = கால் சிறிது
மரங்கள் + சிறிய = மரங்கள் சிறிய
கால் + கை = கால் கை
பொருள் + புகழ் = பொருள் புகழ்.

லகர ளகரங்கள் அல்வழியில் வல்லினம வர இயல்பாயின.

வேல் + படை = வேற்படை.
வாள் + படை = வாட்படை.
வேல் + கண் = வேற்கண்.
வாள் + கண் = வாட்கண்.

லகர ளகரங்கள் அல்வழியில் வல்லினம் வர திரிந்

கால்+குதித்து=கால் குதித்து.
வாள்+போழ்ந்து=வாள் போழ்ந்து.

லகர ளகரங்கள் வேற்றுமையில் வல்லினம் வர இயல்பாயின.

கல்+தீது=கஃறீது.
முள்+தீது=முஃடீது.

தனிக் குறிலின் பின்னின்ற லகர, ளகர மெய்கள் முன், வருமொழியில் தகரம் வருமாயின் அல்வழியில் முறையே றகர டகரங்களாகத் திரிதலே யன்றி ஆய்தமாகவும் திரியும்.

## 4. சாரியைகள்

### 1. அகரச் சாரியை

எகின்+புள=எகின்+அ+புள
=எகினப் புள.

அன்னப்பறவையின் பெயராகிய 'எகின்' என்ற சொல்லும் 'புள்' என்ற சொல்லும் சேர, இடையில் அகரச் சாரியை தோன்றிற்று

### 2. அத்துச் சாரியை

மரம்+ஐ=மரம்+அத்து+ஐ
=மரத்தை.

மரம் என்னும் சொல்லுடன் 'ஐ' என்ற உருபு சேர இடையில் 'அத்துச்' சாரியை தோன்றிற்று.

### 3. அம் சாரியை

ஆல்+காய்=ஆல்+அம்+காய்
=ஆலங்காய்.

ஆல், காய் என்ற சொற்கள் சேரும்பொழுது இடையில் 'அம்' என்ற சாரியை தோன்றிற்று.

### 4. அன் சாரியை

செய்தனள் = செய் + த் + அன் + அள்
அன் சாரியை

அஃதனை = அஃது + ஐ
= அஃது + அன் + ஐ
அன் சாரியை.

### 5. இன் சாரியை

ஆவினை = ஆ + ஐ
= ஆ + இன் + ஐ
இன் சாரியை.

### 6 அற்றுச் சாரியை

அவற்றை = அவ் + அற்று + ஐ
அற்று சாரியை

## 5. பல, சில : இவை புணரும் முறை

பல + பல = பல பல.
சில + சில = சில சில.

பல, சில என்ற சொற்கள் தம் முன் தாம் வர இயல்பாயின.

பல + பல = பலப்பல.
சில + சில = சிலச்சில,

பல, சில என்ற சொற்கள் தம்முன் தாம் வர மிக்கன.

பல + பல = பற்பல.
சில + சில = சிற்சில.

பல, சில என்ற சொற்கள் தம்முன் தாம் வர, நிலைமொழியின் இறுதியில் நின்ற அகரம் கெட லகர மெய், றகர மெய்யாகத் திரிந்தது.

பல + கலை = பல கலை.
= பல்கலை.

சில + வளை = சில வளை.
= சில் வளை.

பல + நாள் = பல நாள
= பன்னாள

சில + நாள = சில நாள்.
= சின்னாள்.

பல, சில என்ற சொற்களின் முன் பிற சொற்கள் வர, நிலைமொழி ஈற்றில் நின்ற அகரம் நின்றும், நீங்கியும் விகற்பித்தது.

# V. யாப்பு

## 1. எதுகை மோனையின் பொது இலக்கணம்

### எதுகைத்தொடை

1. துகடீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்
   பகடு நடந்த கூழ் பல்லாரோ டுண்க
   அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம
   சகடக்கால் போல வரும.

2. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
   தன்றே மறப்பது நன்று

மேலே காட்டியுள்ள செய்யுட்களில், முதல் செய்யு ளில் ஒவ்வொரு அடியிலும் முதலெழுத்து அளவெழுத்து நிற்க, இரண்டாம் எழுத்து ஒன்றி வந்தது.

இரண்டாம் செய்யுளில் முதலடியில் முதல் சீரையும், மூன்றும் சீரையும், நான்காம் சீரையும கவனியுங்கள் இம் மூன்று சீர்களிலும் முதல் எழுத்து அளவொத்து நிற்க, இரண்டாம் எழுத்து ஒன்றி வந்தது இரண்டாம் அடியில் முதல் சீரையும, மூன்றும் சீரையும் கவனியுங்கள். இவ்விரண்டு சீர்களிலும முதல் எழுத்ன அளவொத்து நிற்க, இரண்டாம் எழுத்து ஒன்றி வநதது

இவ்வாறு செய்யுளில் ஒவ்வொரு அடியிலும முதல் எழுத்து அளவொத்து நிற்க, இரண்டாம் எழுத்து ஒன்றி வருவ தும், ஓரடியில் முதல் சீரிலும், பின்வரும சீர்களில் ஒன்றிலேனும், பலவற்றிலேனும் முதல் எழுத்து அளவொத்து நிற்ப, இரண்டாம் எழுத்து ஒன்றி வருவதும் எதுகைத்தொடை எனப்படும்.

## 2. மோனைத்தொடை

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

இச்செய்யுளில் முதலடியில் முதலில் வந்த எழுத்தே இரண்டாவது அடியில் முதலில் வந்தது.

*முதலடியில் முதற்சீரின் முதலெழுத்தே பின்னுள்ள இரண்டாவது, நான்காவது சீர்களிலும் முதலெழுத்தாக வந்தது.*

இவ்வாறு ஒரு செய்யுளில் முதலடியின் முதலெழுத்தே அடிதோறும் முதலெழுத்தாகத் தொடுப்பதும், ஓரடியில் முதல் சீரின் முதலெழுத்தே பின்னுள்ள சீர்களில் ஒன்றிலேனும், பல வற்றிலேனும் முதலெழுத்தாகத் தொடுப்பதும் மோனைத்தொடை எனப்படும்.

# VI. அணி

## 1. அணிவகை

### (1) தன்மை நவிற்சி

*நீல மணிமிடற்ற னீண்ட சடைமுடியன்*
*நூலணிந்த மார்ப னுதல்விழியன்—தோலுடையன்*
*கைம்மான் மறியன் கனன்மழுவன் கச்சாலை*
*எம்மா னிமையோர்க் கிறை.*

இச்செய்யுள் திருக்கச்சாலை யென்னும் பதியில் உள்ள இறைவன் தன்மையைக் கூறும். இவ்வாறு ஒரு பொருளின் தன்மையை உள்ளவாறு கூறுதல் தன்மை நவிற்சி யணி எனப்படும்.

### (2) உயர்வு நவிற்சி

*குமுத னிட்ட குலவரை கூத்தரின்*
*திமித மிட்டுத் திரியும் திரைக்கடல்*
*துமித மூர்புக வானவர் துள்ளினார்*
*அமுதம் இன்னும் எழும்என் னும் ஆசையால்.*

குமுதன் எறிந்த மலையின் பெருமை மிகவும் உயர்வாகக் கூறப்பட்டது.

இவ்வாறு ஒரு பொருளினிருந்து மிகுதியான தன்மையைக் கூறுவது உயர்வு நவிற்சியணி எனப்படும்.

### (3) தற்குறிப் பேற்றம்

*ஈண்டுநீ வரினும் எங்கள் எழிலுடை எழிலி வண்ணன்*
*பாண்டவர் தங்கட் கல்லால் படைத்துணை யாக மாட்டான்*
*மீண்டுபோ கென்றென் றந்த வியன்மதிற் குடுமி தோறும்*
*காண்டகு பதாகை யாடை கைகளால் தடுப்ப போன்ற*

இங்கு, மதிலின் மீது கொடியாடுவது தரியோதனை நிறையைத் தடுப்பது போல் இருந்ததெனக் கவி கூறியுள்ளார்.

இவ்வாறு இயல்பாயுள்ள ஒரு பொருளினிடத்துக் கவி தனது குறிப்பை ஏற்றிக் கூறுவது தற்குறிப் பேற்றவணி எனப்படும்.

## 2. அடி வகை

தேம்புனலிடை மீன்றிரிதரும்.

—இவ்வடியில் இரண்டு சீர்கள் உள்ளன. எனவே, இது குறளடி எனப்படும்.

பொய்யா விளக்கே விளக்கு.

—இவ்வடியில் மூன்று சீர்கள் உள்ளன. எனவே, இது சிந்தடி எனப்படும்.

அலகி லாவிளை யாட்டுடை யாரவர்.

—இவ்வடியில் நான்கு சீர்கள் உள்ளன. எனவே, இது அளவடி அல்லது நேரடி எனப்படும்.

செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த
தீ வண்ணனே!

— இவ்வடியில் ஐந்து சீர்கள் உள்ளன. எனவே, இது நெடிலடி எனப்படும்.

ஆழிசூழ் உலக மெல்லாம் பரதனே யாள நீபோய்த்
தாழிருஞ் சடைக டாங்கித் தாங்கருந் தவமேற் கொண்டு
பூழிவெங் கான நண்ணிப் புண்ணியத் துறைக ளாடி
ஏழிரண் டாண்டின் வாவென் றியம்பினன் வேந்த
னென்றாள்.

இதில், ஒவ்வொரு அடியிலும் ஐந்திற்கு மேற்பட்ட சீர்கள் வந்தன. எனவே, இச் செய்யுளில் உள்ள ஒவ்வொரு அடியும் கழி நெடிலடி எனப்படும்.

## 3. இசைப்பாட்டு வகை

தமிழ் நாட்டில் வழங்கும் இசைப் பாடல்கள் பல வகைப்படும். அவற்றுள் கண்ணி, கும்மி, கீர்த்தனை என்பன சில.

### (1) கண்ணி

எல்லோரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே.

கண்ணி என்பது இரண்டடிகளைக் கொண்டது.

### (2) கும்மி

மாமயிலேறி வருவாண்டி அன்பர்
வாழ்த்த வரங்கள் தருவாண்டி
தீமையிலாத புகழான் டி அவன்
கீர்த்தியைப் பாடி யடியுங்கடி.

பெண்கள் பலர் கூடிச் சுற்றிவந்து கைகொட்டிப் பாடும்பாட்டு கும்மி யெனப்படும்.

### (3) கீர்த்தனை

பல்லவி

உன்னடியை நான் என்றுமே நினைக்க
உன்னருள் தருவாய் உத்தமனே (உன்னடி)

அநுபல்லவி

புள்ளி மயில் மேலேவரும் புண்ணியா
வெள்ளி வேலைத் தாங்கும் முருகையா (உன்னடி)

சரணம்

மானீன்ற வள்ளி விரும்பும் மணவாளா
மாதவர் போற்றும் மாண்புள்ள நேசா
தேனார் கடம்பணி தோளா
அன்பர்கள் கண்டு களிக்கும் அழகா. (உன்னடி)

பல்லவி, அநுபல்லவி, சரணம் என்னும் உறுப்புக்களை யுடைய பாட்டுக் கீர்த்தனை எனப்படும்.

# மொழிப் பயிற்சி.

மொழிப் பயிற்சி

## 1. பலவகை வாக்கியங்கள்

1. கண்ணன் பாடம் படித்தான்.—தனி வாக்கியம்
2. கண்ணன் தோட்டத்திற்குச் சென்றுக் குளத்தில் குளித்துவிட்டுப் பூக்களைப் பறித்துக் கொண்டு வீடு திரும்பினான். — தொடர் வாக்கியம்.
3. முருகன் படத்தைக் கிழித்தானென்று நான் எண்ணுகிறேன்.—கலவை வாக்கியம்.
4. பூனை எலியைப் பிடித்தது.—செய்வினை வாக்கியம்.
5. எலி பூனையால் பிடிக்கப்பட்டது.—செயப்பாட்டு வினை வாக்கியம்.
6. "என்னுடைய குடையை உங்கள் வீட்டில் வைத்துவிட்டேன்" என்று கமலம் என்னிடம் கூறினாள்.—நேர்க் கூற்று வாக்கியம்.
7. கமலம் தன்னுடைய குடையை எங்கள் வீட்டில் வைத்துவிட்டதாக என்னிடம் கூறினாள்.—அயற் கூற்று வாக்கியம்.
8. நீ உன் பாடத்தைப் படித்தாயா?—வினா வாக்கியம்.
9. நான் நேற்று சென்னையிலிருந்து வந்தேன்.—செய்தி வாக்கியம்.
10. வெளியே செல்.—கட்டளை வாக்கியம்.
11. இவ்வீடு எவ்வளவு அழகாயிருக்கிறது! — உணர்ச்சி வாக்கியம்.

### பயிற்சி :

I. கீழே கொடுத்துள்ள வாக்கியங்களை ஒரே வாக்கியமாகச் செய் :—

(1) பெரிய புராணத்தை இயற்றியவர் யார்?
நீ அதை எனக்குச் சொல்லுவாயா?

(2) அதிகமாய்ச் சாப்பிடாதே. நீ நோய் வாய்ப் படுவாய்.

(3) அவன் பள்ளிக்கூடத்திற்குச் சரியாய் வரவில்லை. அவன் பரீட்சையில் முதல்வனாய்த் தேறினான்.

(4) அவன் பரம ஏழை அவன் நன்றாய்ப் படிக்கிறான்.

(5) அவர் மெதுவான குரலில் பேசினார். அவர் பேசியதை யாரும் கேட்க முடியவில்லை.

(6) அவர் வயது முதிர்ந்தவர். அவர் ஆரோக்கியமான நிலையில் இருக்கிறார்.

(7) அவர் என் வீட்டிற்கு வந்தார. நான் வெளியே சென்றிருந்தேன்.

(8) அவன் கிழவன். அவன் நடக்க முடியாது.

(9) ஓநாய் பெரியது. நரி சிறியது.

(10) கோபாலன் புத்திசாலி. ராமன், கோபாலன் அவ்வளவு புத்திசாலி.

(11) அவன் இராமாயணம் படித்தான். அவன் அதன் மொழிபெயர்ப்பைப் படித்தான். அவன் அதைத் தன் பன்னிரண்டாவது வயதில் படித்தான். அவன் இதை எங்களுக்குக் கூறினான்.

(12) அவன் ஒரு கடிதம் எழுதினான். ஏதோ காரணம் பற்றி அவன் அதை எழுதினான். அவன் அதைத் தன் மேலதிகாரிக்கு எழுதினான். அவன் அதை எனக்குக் கூறினான்.

(13) அவன் தன் சம்பளத்தைப் பெறுவது நிச்சயம். அது அவனுக்கு உரியது. அவன் ஏன் விசனப் படுகிறான்?

(14) வடையை வாயில் கௌவிக்கொண்டு மரத்தின் மீதிருந்த காக்கையை ஒரு நரி பார்த்தது. நரி

காக்கையின் பாட்டைப் புகழ்ந்தது. காக்கை அதைக்கேட்டு மகிழ்ந்தது. காகம் பாட ஆரம்பித்தது. வடை கீழே விழுந்தது.

(15) அவன் ஒரு பேனவைத் திருடினன். சொந்தக் காரன் பெயர் அதன்மீது எழுதப்பட்டிருந்தது. அதை என்னிடம் கூறினன். அப் பெயர் அவனுக்குத் தெரியும்.

II. தொடர் வாக்கியங்களாக மாற்று :—

(1) மணியடித்தது. இரயில் வண்டி புறப்பட்டது.

(2) நேற்று மழை பெய்தது. ஏரி நிரம்பிற்று.

(3) நான் சென்னை சென்றேன். என் கண்ணைக் கண் வைத்தியரிடம் காட்டினேன். அவர் என்னை ஒரு வாரம் அங்குத் தங்கும்படி சொன்ஞர். நான் தங்கினேன். அவர் மருந்து கொடுத்தார். கண்ணேய் நீங்கிற்று. நான் ஊருக்குத் திரும்பினேன்.

(4) என் தம்பி திருச்சி சென்றன் அவன் பல நண்பர்களிடம் பேசினன். ஒரு பழைய வீட்டை விலைக்கு வாங்கினன்.

(5) சேக்கிழார் குன்றத்தூரில் பிறந்தார். பல தமிழ் நூல்களைப் பயின்றர்.

III. கீழே கொடுத்துள்ள வாக்கியங்களைப் பொருள் மாருதவாறு செய்தி வாக்கியங்களாக்குக :—

(1) ஆண்டுதோறும அழுதாலும் மாண்டார் வருவாரோ ?

(2) நான் ஏன் கற்சிலைபோல் உட்கார்ந்திருக்க வேண்டும் ?

(3) நாயின் வாலை நேராக்க முடியுமா ?

(4) அவ்வளவு அழகிய படத்தை யாரேனும் பார்த்ததுண்டா?

(5) நான் உன் சகோதரன் அல்லவா?

IV. செய்தி வாக்கியங்களை உணர்ச்சி வாக்கியங்களாக மாற்றுக :—

(1) நண்ப உனக்காக நான் அதிகமாகப் பாடு பட்டேன்.

(2) அதனால் அதிக வித்தியாசம் இருக்கிறது.

(3) அது நல்ல யோசனை.

(4) இவை அழகான மலர்கள்.

(5) இப் படத்தில் குதிரையின் வால் அதிக நீளமா யிருக்கிறது.

V. பொருள் கெடாதவாறு எதிர்மறை வாக்கியங் களாக மாற்று :—

(1) அறிவிலிகள்தாம் அவ்வாறு செய்வார்கள்.

(2) அவன் சில சமயங்களில் ஒழுக்கங்கெட்டு நடப் பான்.

(3) அவன் எப்பொழுதும் நேர்வழியில் செல் பவன்.

(4) நீ அக்கதையைச் சொன்னால் ஒவ்வொரு வனும் சிரிப்பான்.

(5) அவன் உண்மையாகவே ஒரு புத்திசாலி.

VI. செய்வினை வாக்கியங்களைச் செயப்பாட்டு வினை வாக்கியங்களாக மாற்று :—

(1) நீ நடிக்கும் மாணவர்களைப் பார்க்கலாம்.

(2) அச்சொல்லைச் சுவரின்மேல் எழுது.

(3) அவள் கடிதம் எழுதிக்கொண்டிருக்கிறாள்.

(4) அவன் மரத்தை வெட்டுகிறான்.

(5) அவர்கள் நாயின்மேல் கற்களை எறிந்தார்கள்.

VII. செயப்பாட்டுவினை வாக்கியங்களைச் செய்வினை வாக்கியங்களாக மாற்றுக:—

(1) அந்த இலக்கணம் யாரால் எழுதப்பட்டது?

(2) கோவலன் கொலையாளர்களால் கொல்லப்பட்டான்.

(3) கண்ணகி யாவராலும் போற்றப்பட்டாள்.

(4) தந்திக் கம்பிகள் துண்டிக்கப்பட்டன.

(5) தேன் ஈக்களால் தயாரிக்கப்படுகிறது.

## 2. வாக்கிய அமைப்பு

படி:

கமலம் மலர்களைப் பறித்தாள்.

இது ஒரு வாக்கியம். கமலம்—எழுவாய். பறித்தாள்—பயனிலை. மலர்களை—செயப்படு பொருள்.

எனவே, ஒரு வாக்கியத்தில் எழுவாய் முதலிலும், பயனிலை இறுதியிலும், செயப்படு பொருள் இடையிலும் வரும்.

படி:

படித்த பையன்.

ஓடிய குதிரை.

இங்குப் படித்த, ஓடிய, என்பன பெயரெச்சங்கள். அவை முதலில் நிற்கின்றன. அவற்றிற்குப் பிறகு அவை

தழுவும் பெயர் சொற்கள் வந்துள்ளன. பெயரெச்ச பெயரைக்கொண்டு முடியும்.

ஓடி வந்தான்—வினையெச்சம் வினை முற்றைக் கொண்டு முடிந்தது.

ஓடி வந்த பையன்—ஓடி என்ற வினையெச்சம் 'வந்த' என்ற பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்தது.

ஓடி வந்து படித்தான்—ஓடி என்ற வினையெச்சம் "வந்து' என்ற வினையெச்சத்தைக் கொண்டு முடிந்தது

ஓடி வருதல்—ஓடி என்ற வினையெச்சம் தொழிற் பெயரைக் கொண்டு முடிந்தது.

ஓடி வந்தவன்—ஓடி என்ற வினையெச்சம் வினையாலணையும் பெயரைக்கொண்டு முடிந்தது.

வினையெச்சம், வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம், தொழிற் பெயர், வினையாலணையும் பெயர் ஆகியவற்றில் ஒன்றைக்கொண்டு முடியும்.

நேற்று வந்த பையன் தோட்டத்தில் அழகிய மலர்களைப் பறித்தான்.

பையன்—எழுவாய்

பறித்தான்—பயனிலை.

மலர்களை—செயப்படு பொருள்.

நேற்று வந்த—எழுவாய் அடைமொழி

அழகிய—செயப்படு பொருள் அடைமொழி.

தோட்டத்தில்—பயனிலை அடைமொழி.

வாக்கியத்தின் முதலில் எழுவாயும், இறுதியில் பயனிலையும், இடையில் செயப்படு பொருளும், அவற்றைச் சார்ந்த அடைமொழிகளோடு நிற்பது நேரான முறையாகும்.

## வாக்கியத்தைப் பிரித்தல்

111.

1. செஞ்சட்டை யணிந்த கிழவன் நடுத்தெருவில் நிற்கிறான்.

2. திருடன் நேற்றிரவு எங்கள் வீட்டில் நுழைந்தான்.

3. முருகன் அழகிய படங்களைக் கிழித்தான்.

| | எழுவாய் | எழுவாய் அடைமொழி | பயனிலை | பயனிலை அடைமொழி | செயப்படுபொருள் | செயப்படுபொருள் அடைமொழி. |
|---|---|---|---|---|---|---|
| | (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| 1 | கிழவன் | செஞ், சட்டை அணிந்த | நிற்கிறான் | நடுத் தெருவில் | — | — |
| 2 | திருடன் | — | நுழைந்தான் | நேற்றிரவு எங்கள் வீட்டில் | — | — |
| 3 | குழந்தை | — | கிழித்தது | — | படங்களை | அழகிய |

குறிப்பு. எச்சங்கள் தழுவும் சொற்களைச்சேர்ந்து அடைமொழிகளாய் நிற்கின்றன.

### பயிற்சி :

கீழே கொடுத்துள்ள வாக்கியங்களைக் கட்டத்தில் அமைத்துப் பிரித்துக் காட்டு.

(1) மாணவர்கள் பழைய பாடங்களைப் படிக்கிறார்கள்.

(2) நீ அவன் செய்த நன்றியை மறக்காதே.

(3) அவன் பட்டுச் சட்டையை அணியவில்லை.

(4) குடியானவன் வயலை நன்றாய் உழுகிறான்

(5) பூனை எலியைப் பிடிக்கிறது.

(6) குழந்தைகள் தோட்டத்தில் மாலையில் விளையாடுகிறார்கள்.

(7) பணக்காரன் பிச்சைக்காரர்களுக்குப் பொருளைக் கொடுத்தான்

(8) அவன் தினந்தோறும் காலையில் கோயிலுக்குப் போகிறான்

(9) பிள்ளைகள் வாசகசாலையிலிருந்து நூல்களைப் பெறுகிறார்கள்.

(10) இப் பந்தை எங்கு வாங்கினாய் ?

## 3. ஒரே கருத்தைப் பல உருவ வாக்கியங்களில் வெளியிடுதல்

### பயிற்சி

I. அயற் கூற்றாக மாற்றுக :—

(1) "நான் உன் தகப்பனைத் தோட்டத்தில் கண்டேன்," என்று நான் கோவிந்தனிடம் கூறினேன்

(2) "ஆசிரியர் இன்று வரவில்லை," என்று நான் என் தகப்பனாரிடம் சொன்னேன்

(3) "உன் பெயர் என்ன ?" என்று ஆசிரியர் அப் பெண்ணைக் கேட்டார்

(4) "நீ பாடசாலைக்குப் போக வேண்டாம்,' என்று அவள் தாயார் அவளிடம் கூறினாள்.

(5) அவன் என்னிடம், "நீ செய்த நன்றியை மறவேன்," என்றான்

II. நேர் கூற்றாக மாற்றுக :—

(1) ஆசிரியர் அவனை உடனே அறையைவிட்டுச் செல்ல உத்தரவிட்டார்.

(2) அவள் தான் கோலம் வரைவதாக என் தாயிடம் கூறினாள்.

(3) கோபாலன் ஆசிரியரைப் பார்த்துத் தன் நோட்டுப் புத்தகம் எங்கே இருக்கிறதெனக் கேட்டான்.

(4) வைத்தியர் நோயாளியைப பார்த்து அவன் குளிக்கக்கூடாதெனக் கூறினார்.

(5) என் அத்தை என்னிடம் தான் காட்சிச் சாலைக்குச் செலவதாகக் கூறினாள்.

III. செய்வினை கொண்ட வாக்கியங்களைச் செயப்பாட்டு வினை கொண்ட வாக்கியங்களாக மாற்றுக :—

(1) இச்சிறு பறவைகள் அக்கூட்டை அமைத்தன.

(2) புலி என்றும் புல்லைத் தின்னாது.

(3) அந்நாய திருடர்களைத் தொடரும்

(4) அவைகளை அங்கே வையுங்கள்.

(5) அக்கதையைச் சொல்லுஙகள்

IV. செயப்பாட்டுவினை கொண்ட வாக்கியங்களைச் செய் வினைகொண்ட வாக்கியங்களாக மாற்றுக :—

(1) அவரால் நாங்கள கேள்விகளை கேட்கப் பட்டோம

(2) இது உன்னாற் செய்யபபடுவதாக

(3) இந்நன்றி உன்னால் என்றும் மறக்கபபடாதிருக் கட்டும்.

(4) இப்புலி எங்களால் நேற்றுக் கொல்லப்பட்டது.

(5) இப்படம் யாரல் வரையப்பட்டது ?

V. கேட்டபடி மாற்றி எழுதுக :—

(1) இராமன் கோபாலனைக் காட்டிலும் உயர்ந் தவன். (கோபாலன்—எழுவாய்)

(2) ஒவ்வொரு ரோஜா மலருக்கும் முள் உண்டு. (எதிர்மறையில் கருத்து மாறாமல் எழுது).

(3) ஒவ்வொருவனும் காந்தியைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறான். (வினா—கருத்து மாறாமல்).

(4) பணக்காரர்கள் எப்பொழுதும் சந்தோஷமாயிருப்பதில்லை (எதிர்மறையை நீக்கிக் கருத்து மாருமல் எழுது)

(5) இமயமலைகள் ஆல்ப்ஸ் மலைகளைக் காட்டிலும் உயர்ந்தவை (எதிர்மறையில் கருத்து மாருமல்.)

## 4. பத்தி அமைப்பு

ஏதேனும் ஒரு பொருளைப் பற்றிக் கட்டுரை எழுத வேண்டுமாயின் அதைப் பல பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொன்றையும் பற்றி ஒரு பத்தி அமைக்கிருேம். ஒவ்வொரு பத்தியிலும் உள்ள வாக்கியங்கள் ஒரே கருத்தை விளக்குகின்றன.

பத்தி அமைப்பதில் நாம் கவனிக்க வேண்டியவை. —

பத்தியை அமைக்கும்பொழுது முதல் வாக்கியத்தை இடப்புறத்தில் சிறிது இடம் விட்டுத் தொடங்க வேண்டும். இதனால், பத்தியின் தொடக்கத்தை நாம் பார்த்த மாத்திரத்திலேயே எளிதில் அறியலாம்.

பத்தியில் உள்ள வாக்கியங்கள் யாவும் ஒரே கருத்தைப் பற்றிக் கூறவேண்டும். ஒரு பத்தி எதைப் பற்றிக் கூறுகிறதோ அக்கருத்தை முதல் வாக்கியம் தெரிவிப்பது முறையாகும்.

பத்தியில் உள்ள வாக்கியங்கள் யாவும் கருத்தை விளக்கஞ் செய்யும் முறையில் வரிசையாய் அமைய வேண்டும். முன் கூறிய வாக்கியத்திற்கும், அதனைத் தொடர்ந்து பின்வரும் வாக்கியத்திற்கும் கருத்தைப் பற்றித் தொடர்பு அமைதல் நல்லது. கருத்தை வெளியிட்டது போலவே, அதன் இறுதிவாக்கியம் பத்தியின் கருத்தைச் சுருக்கிக் கூறவேண்டும்.

பத்தியில் உள்ள வாக்கியங்கள் யாவும் அமைப்பில் ஒரே மாதிரியாய் இராமல் மாறுபட்டிருத்தல் படிப்போருக்கு ஊக்கமளிக்கும். பல உருவ வாக்கியங்களைப் பயன்படுத்த வேண்டும்.

இதை நீங்கள் நான்காம் படிவத்தில் ஏற்கனவே படித்திருக்கிறீர்கள். கவனப்படுத்திக் கொள்ளுங்கள்.

ஒவ்வொன்றைப் பற்றியும் ஒரு பத்தி வரைக :—

(1) ஓர் வீரச் செயல்.
(2) கலியாண ஊர்வலம்.
(3) தீபாவளி இரவு
(4) பொங்கல் பண்டிகை
(5) இரத்தவோட்டம்
(6) தீ விபத்து
(7) ஓர் ஆலயத் திருவிழா
(8) ஒரு கடைத் தெரு
(9) வைத்தியசாலை
(10) மலைகளால் ஏற்படும் நன்மைகள்

### 5. நடை

சொற்களைக் கருவியாகக் கொண்டு கருத்தைக் கூறும் முறை நடை யெனப்படும். இது காலத்திற்கேற்றவாறும், பேசுவோர் கல்வியறிவிற்குத் தகுந்தவாறும் மாறும். இனிப் பண்டைக் காலத்திய உரை நடையைப் பார்ப்போம்.

#### (1) இறையனார் களவியலுரை

அக்காலத்துக்குப் பாண்டியனாடு பன்னீரியாண்டு வற்கடஞ் சென்றது செல்லப் பசி கடுகுதலும், அரசன் சிட்டரையெல்லாங் கூவி, "வம்மின், யான் உங்களைப் புறந்தர இல்லேன்; என் தேயம் பெரிதும் வருந்துகின்றது; நீர் போய் நுமக்கறிந்தவாறு புக்கு, நாடு நாடாயின ஞான்று என்னையுள்ளிவம்மின்" என்றான்.

#### (2) இளங்கோவடிகள் உரைநடை

ஆய்ச்சியர் குரவை

குடாத்துப்பா லுறையாமையுங் குவியிமிலேற்றின்
மடக்கண்ணீர் சோர்தலு முறியில் வெண்ணெ

யுருகாமையு மறிமுடங்கி யாடாமையு மான்மணி
நிலத்தற்று வீழ்தலும் வருவதோர் துன்பமுண்டென
மகளைநோக்கி மனமயங்காதே மண்ணின் மாதர்க்
கணியாகிய கண்ணகியுந் தான்காண வாயர்
பாடியி லெருமன்றத்து மாயவனுடன் றம்முனொடிய
வாலசரிதை நாடகங்களில் வேனெடுங்கட்
பிஞ்ஞையோடாடிய குரவையாடுதும் யாமென்றாள
கறவைகன்று துயர் நீங்குக வெனவே.

## (3) அடியார்க்கு நல்லார் உரைநடை

நாம் திங்களை போற்றுவேம் திங்களைப் போற்று வேம்; அஃது எற்றுக்கெனின், தாது பரத்தல் செய்த மாலையையுடைய சென்னியுடைய குளிர்ச்சியையுடைய வெண்குடை போன்று பொதுவற இவ்வுலகிற்கு அளி செய்தலா னென்க.

## (4) இளம்பூரணர் உரைநடை

அகம் புறம் என்பன காரணப்பெயா அகப பொருளாவது போக நுகர்ச்சியாகலான் அதனுைய பயன் தானே யறிதலின் அகம் என்றார். புறப்பொருளாவது மறஞ் செய்தலும் அறஞ் செய்தலு மாகலான் அவற்று னுய பயன் பிறர்க்குப் புலனாதலின் புறமென்றார்.

## (5) நச்சினார்க்கினியர் உரைநடை

பொருளாவன :—அறம் பொருளின்பமும், அவற்றது நிலையின்மையும், அவற்றினீங்கிய வீடு பேறுமாம். பொரு ளெனப் பொதுப்படக் கூறவே, அவற்றின் பகுதியாகிய முதல் கரு உரியும், காட்சிப் பொருளும், கருத்துப்பொரு ளும், அவற்றின் பகுதியாகிய இயங்குதிணையும் நிலைத் திணையும் பிறவும் பொருளாம்.

## (6) சேனவரையருரை நடை

வழக்கென்பது காரணமின்றி வழங்கற்பாடேபற்றி வருவது. பண்புகொள் பெயராயினும் பண்பு குறியாது

சாதிப்பெயராய், வெள்யாடு வெண்கமளர் கடுங்கள மரென வருவனவும், குடத்துள்ளும் பிறகலத்துள்ளு மிருந்த நீரைச் சிறிதென்றது சில வென்றலும், அடுப்பின்கீழ்ப் புடையை மீயடுப்பென்றலும், பிறவும் வழக்காறும்.

மேலே காட்டிய பண்டைப் புலவரது நடை நமக்குக் கடினமான நடையாகும்.

நாம் கருத்துக்களை வெளியிடும்பொழுது சுருங்கச் சொல்லி விளங்க வைக்கவேண்டும். சொற்களை வீணாகப் பயன்படுத்திப் பயனில்லை. சுருங்கச் சொல்ல எண்ணி அறை குறையாகக் கூறக்கூடாது. தூய தமிழ்ச் சொற்களையே உபயோகிக்கவேண்டும். கொச்சையான சொற்களை ஒழிக்கவேண்டும். தமிழ்ச் சொல்லைவிட்டுவிட்டு வட சொற்களையும், ஆங்கிலச் சொற்களையும் பயன்படுத்த வேண்டாம். படிப்போருக்குச் சந்தேகம் உண்டாகாத வாறு எழுதுவதே சிறந்த முறை.

நீளமான வாக்கியங்களை உபயோகிக்கவேண்டும் எனச் சிலர் விரும்புவர். அவ்வாறு எழுதுவதால் எழுவாய், பயனிலைகளைச் சரியாய் அறிய முடியாது இடர்ப்படுவோம்; எழுவாய்க்கு ஏற்ற பயனிலைகளை அறியாது போவோம். எனவே, சிறிய வாக்கியங்களைப் பிழையின்றி எழுதவேண்டும்.

படிப்போருக்கு இன்பத்தைத் தரும் வண்ணம் நல்ல சொற்களையும், சொற்றொடர்களையும் இடமறிந்து உபயோகிக்கவேண்டும். வழூஉச் சொற்களையும், இழி வழக்குகளையும் நீக்குவதே முறை.

குறித்த பொருளை விளக்குவதற்கு வேண்டிய சொற்களை உபயோகித்து, வேண்டாத சொற்களை நீக்கவேண்டும். சொற்களின் பொருள்களை நன்கு அறிந்து, சமயத்திற்கு ஏற்ற சொல்லையே உபயோகிக்க வேண்டும். வழக்காற்றில் இல்லாத சொற்களை நீக்குதலே நல்லது.

கருத்தை விளக்குங்கால் முன் கூறியவற்றையே பின்னும் கூறுதலும், முன் சொன்ன பொருளுக்கு மாறாகக் கூறுதலும், பொருள் முற்றத் துணியாது மயங்கு மாறு கூறுதலும், சொல் நடையும், பொருள் நடையும் தேய்ந்து முடித்தலும் அறிவுடையோர் செயலன்று

நாம் கூறும் கருத்துக்களை மேற்கோள் காட்டி விளக்குதல் சிறிய முறையாகும் கருத்துக்களைத் திரட்டி வகுத்துக் காட்டல் வேண்டும்

எனவே, எளிய நடையில், பொருள் தெளிவாக விளங்கும்படி, அழகிய சொற்களையுஞ் சொற்றொடர்களை யும் கொண்டு ஆற்றொழுக்குப்போல் எழுதுவது நல்ல நடையாகக் கருதப்படும்

## 6. வழூஉச் சொற்களும் திருத்தமும்

| வழூஉச் சொற்கள் | திருத்தம் |
|---|---|
| சிலவு | செலவு |
| சுவற்றில் | சுவரில் |
| எண்ணை | எண்ணெய் |
| வெண்ணை | வெண்ணெய் |
| காக்ஷி | காட்சி |
| உத்திரவு | உத்தரவு |
| நிகளம் | நீளம் |
| தவக்களை | தவளை |
| அதர்க்கு | அதற்கு |
| பாதுகார்த்தல் | பாதுகாத்தல் |
| பயிர்ச்சி | பயிற்சி |
| காச்சல் | காய்ச்சல் |
| வயறு | வயிறு |
| தோத்தான் | தோற்றான் |
| கன்னுக்குட்டி | கன்றுக் குட்டி |
| ஆப்பை | அகப்பை |

| வழூஉச் சொற்கள் | திருத்தம் |
| --- | --- |
| இளைமை | இளமை |
| ஊரணி | ஊருணி |
| ஒருவள் | ஒருத்தி |
| கத்திரிக்கோல் | கத்தரிக்கோல் |
| கயிறை | கயிற்றை |
| கோர்வை | கோவை |
| சம்மந்தம் | சம்பந்தம் |
| சிறங்கு | சிரங்கு |
| புன்ஜை | புன்செய் |
| நன்ஜை | நன்செய் |
| நிரைய | நிறைய |
| தலைகாணி | தலையணை |
| நிறம்ப | நிரம்ப |
| துடங்கு | தொடங்கு |
| தொப்புள் | கொப்பூழ் |
| பன்னிரெண்டு | பன்னிரண்டு |
| பாராங்கல் | பாறாங்கல் |
| முயர்ச்சி | முயற்சி |
| வயிறு | வயிரு |
| மனமாற | மனமார |
| பத்து வறவு | பற்று வரவு |
| தீத்தம் | தீர்த்தம் |
| அவாள் | அவர்கள் |
| ரொம்ப | நிரம்ப |
| களகம் | கழகம் |
| இப்போ | இப்பொழுது |
| நேத்திக்கு | நேற்றைக்கு |
| இன்னிக்கு | இன்றைக்கு |
| காத்தடிக்குது | காற்றடிக்கிறது |
| முழித்தான் | விழித்தான் |
| வரண்ட | வறண்ட |
| வெங்கலம் | வெண்கலம் |
| தாப்பாள் | தாழ்ப்பாள் |

## 7. விலக்குதற்குரிய இழிவழக்குகள்

| பிழை | திருத்தம் |
|---|---|
| அண்ணாக் கயறு | அரை நாண் கயிறு |
| வாயப்பழம் | வாழைப்பழம் |
| காப்பாத்தனும் | காப்பாற்ற வேண்டும் |
| ஆம்படையான் | அகமுடையான் |
| கடுக்காய கொடுத்தான் | ஏமாற்றினன் |
| கம்பி நீட்டினன் | போய் விட்டான் |
| ஆம்பளைப்பிள்ளை | ஆண்பிள்ளை |
| பொம்பளைப்பிள்ளை | பெண்பிள்ளை |
| அண்ணங்காரன் | அண்ணன் |
| வெந்நித் தண்ணி | வெந்நீர் |
| பச்சைத் தண்ணி | தண்ணீர் |
| அடாஸ் | பயனற்றது |
| ரொம்ப அளக்கிறியே | அதிகமாய்ப் பேசுகிறாய் |
| நாமத்தைச் சாத்திட்டான் | ஏமாற்றினன் |

மாணவர்கள் நீக்க வேண்டிய சொற்றொடர்கள். அண்ணாத்தை, அக்காக்காரி, அலகிவிட்டான், இஸ்துகனு போயிட்டான், கேட்டு வாசல், ஷாப்புக்கடை, வெளுத்து வாரிட்டே, வெட்டி முறிச்சிட்டே, எனக்கா நீ காதுகுத்தறே, வாலை ஆட்டாதே

## 8. நிறுத்தக்குறிப் பயிற்சி

தகுந்த நிறுத்தக் குறிகளை அமைக்க :—

(1) நான் ஓர் சிற்பி என்றேன்.

(2) நான் நினைத்ததை எப்படி அறிந்தாய் என்று வியப்புடன் கேட்டாள்.

(3) நீ கூறுவது விநோதமாக இருக்கிறதே

(4) ஆமாம் உண்மை என்று கூறினேன்.

(5) கந்தனை அனையவர் கலை தெரி கழகம் என்றார் கம்பரும்.

(6) நீயூடன் போஸ் முதலிய பேரறிஞர் கண்ட உண்மைகள் பல.

(7) அழுக்காறு அவா வெகுளி இன்னாச் சொல் முதலிய குணங்களை ஒழித்தல் வேண்டும்.

(8) எனவே தமக்கென வாழாது பிறர்க்காகவே வாழ்ந்தோர் பலர்.

(9) நாட்டு மக்கள் செய்யும தொழில்கள் நெசவு நெய்தல் கயிறு திரித்தல் கூடை முடைதல் தேனீ வளர்த்தல் முதலியன.

(10) பொருள்தனைப் போற்றிவாழ் என்பதை யாவரும் அறிவர்.

(11) செல்வத்தை நன்முறையில் சம்பாதிக்க வேண்டும் நன்ருய்ப் பாதுகாக்கவேண்டும் பயனுள்ள வழிகளில் செலவிடவேண்டும்

(12) இவர் முகவரி கா நமச்சிவாய முதலியார் எம் ஏ 4 கடைத்தெரு சேலம்

(13) செங்குட்டுவன் வாழ்க தமிழ் வாழ்க தமிழ் நாடு வாழ்க.

(14) யாவரும் படித்திருந்தால் எவ்வளவு நன்ருய் இருக்கும்.

(15) பெண்களுக்கு இசையிலுள்ள பற்றுதான் என்னே.

(16) இது வள்ளுவர் வாக்கன்ருே.

(17) என் கடன் பணிசெய்து கிடப்பதே என்பது ஆன்ருேர் வாக்கு.

(18) நம்மவர் யாவரும் விரும்பும் நாள் என் நாளோ.

(19) பேரியாழ் வைத்திருப்பவன் பெரும் பாணன் சிறிய யாழ் வைத்திருப்பவன் சிறு பாணன்.

(20) கொன்றைக் குழல் ஆம்பற் குழல் முல்லைக் குழல் என்று பல குழல்கள் உண்டு.

(21) அந்தோ என்னருமை மைந்தன் இறந்தானே.

(22) நீ என்ன எண்ணம்

(23) இவர்களில் தலையாயவன் பெயர் செந்தா பாண்டி சுந்தர பாண்டியன் என்பதாம்.

(24) கதிரவனே நீ யறிய என் கணவன் கள்வனோ என்றாள் கண்ணகி

(25) ஆயினும் அவருடைய கவித்திறனைப் போற்றினேன்

## 9. மரபு

படி :

(1) குதிரைக் குட்டி
பூனைக் குட்டி
யானைப் பாகன்
ஆட்டு இடையன்

இவ்வாறு எந்தப் பொருளை எந்தச் சொல்லால் அறிவுடையோர் சொன்னார்களோ அப்பொருளை அச்சொல்லால் சொல்லுதல் மரபு எனப்படும்.

(2) அடிசில் அயின்றார்
அணி அணிந்தார்
படை வழங்கினார்

பொதுச் சொற்களைப் பொது வினை கொண்டு முடிப்பது மரபு

(3) அவர் முடியும் குழையும் மோதிரமும் அணிந்தார்
அவர் வாளும், வேலும் வழங்கினார்.

சிறப்புச் சொற்களை எண்ணும்பொழுது பொது வினைகொண்டு முடிப்பது மரபு.

(4) பாய்மா ஏறினான் (குதிரை)
மாமரம் ஏறினான் (மரம்)

பல பொருள் ஒரு சொல்லைச் சிறப்புச் சொல்லோடு கூட்டிச் சொல்லுவது மரபு.

(5) பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி சென்றான்.

ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் கூறினார்.

ஒரு பொருளைக் குறிக்கும் பல பெயர்கள் ஒரு வினையைப் பெற்று வருதல் மரபு.

(6) கந்தன் வந்தான்.

அவனுக்குச் சோறுபோடு.

பெயருக்குப்பின் சுட்டுப் பெயர் வருதல் மரபு.

(7) குழிந்தாழ்ந்த கண்.

மீமிசை ஞாயிறு.

ஒருபொருட் பன்மொழி வருதல் மரபு.

(8) குறைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர்
—பெருஞ் செல்வமுடையோர்.

இவ்வாறு குறிப்பால் பொருள் தரும் சொற்களைக் கூறுதல் மரபாகும்.

## 10. உவமைகளும், பழமொழிகளும் வைத்தெழுதுதல்

அவன் தன் தாய் இறந்த செய்தியைக் கேட்டதும் நெருப்பிலிட்ட புழுப்போல் துடித்தான்.

"முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார்" என்ற பழமொழிக்கிணங்க அவன் பன்முறை படித்துப் பரீட்சையில் தேறினான்.

கீழே கொடுத்துள்ள உவமைகளை வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக:—

அடியற்ற மரம் போல

இஞ்சி தின்ற குரங்கு போல

உள்ளங்கை நெல்லிக் கனிபோல்

கற்றுவின் மனம் போல்
குரங்கின் கையில் அகப்பட்ட பூமாலை போல்
குடத்துக்குள் வைத்த விளக்கு போல்
குளிக்கப்போய் சேற்றைப் பூசிக்கொண்டது போல்
கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தது போல்
சர்க்கரைப் பந்தலில் தேன் மாரி பெய்தது போல்
பழம் நழுவிப் பாலில் விழுந்தது போல்
பசுமரத்தாணிபோல்
பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறுவதுபோல்
பொன் மலர் நாற்ற முற்றது போல்
வெந்த புண்ணில் வேல் நுழைந்தது போல்
இருதலைக் கொள்ளி எறும்பு போல்
இலவு காத்த கிளிபோல்
கல்லில் நார் உரித்தாற் போல
சூரியனைக் கண்ட பனி போல
பாம்புக்குப் பால் வார்த்தது போல
முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டது போல
விழலுக்கு இறைத்த நீர் போல
வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அலைந்தது போல
யானை தன் தலைமேல் மண்ணை வாரிப் போட்டுக் கொண்டதுபோல்

II. கீழ்க்காணும் பழமொழிகளை வாக்கியங்களில் அமைக்க:—

அகத்தின் அழகு முகத்தில் தெரியும்.
அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம.
அளவுக்கு மிஞ்சினல் அமுதமும் நஞ்சாம்.
அஞ்சிலே வளையாதது ஐம்பதில் வளையுமா ?
அன்னமிட்ட வீட்டில் கன்னமிடலாமா ?

அரசன் அன்று கொல்லும்; தெய்வம் நின்று கொல்லும்.
ஆடையில்லா மனிதன் அரை மனிதன்.
ஆனை வரும் பின்னே; மணியோசை வரும் முன்னே.
ஈட்டி எட்டின மட்டும் பாயும்; பணம் பாதாளம் வரையும் பாயும்.
ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.
உண்ட வீட்டுக்கு இரண்டகம் பண்ணலாமா?
உப்பில்லாப் பண்டம் குப்பையிலே.
உப்பிட்டவரை உள்ளளவும் நினை.
ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.
ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவுமா?
ஐந்தில வளையாதது ஐம்பதில் வளையுமா?
கடவுளை நம்பினோர் கைவிடப் படார்.
கடுகு சிறுத்தாலும் காரம் போகுமா?
கந்தையானாலும் கசக்கிக் கட்டு
காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு.
குப்பையிற் கிடந்தாலும் குன்றிமணி நிறம் மாறுமா?
குறை குடம் தளும்பும், நிறை குடம் தளும்பாது.
கூழானாலும் குளித்துக் குடி.
கைப் புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா?
கொட்டினால் தேள்; கொட்டா விட்டால் பிள்ளைப் பூச்சி
சிறு துரும்பும் பல் குத்த உதவும்.
சுவரை வைத்தல்லவோ சித்திரம் எழுதவேண்டும்.
துள்ளுகிற மாடு பொதி சுமக்கும்.
தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்.
முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார்.
போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து.

## 11. உவமை உருவக மாற்றம்

### (1) உவமை

பால் போலும் இன் சொல்

பால்—உபமானம்

சொல்—உபமேயம்

இனிமை—பொதுத் தன்மை

போலும்—உவம உருபு

இவ்வாறு ஒரு பொருளை மற்றொரு பொருளோடு ஒப்புமை தோன்றக் கூறுவது உவமையணி எனப்படும். இதில் உபமானம், உபமேயம், பொதுத் தன்மை, உவம உருபு என்ற நான்கு உறுப்புக்கள் வருவதால் விரியுவமை எனப்படும். இவ்வுறுப்புக்களில் சில குறைந்து வருவதும் உண்டு. அவ்வாறு வருவது தொகை உவமை எனப்படும்

| விரியுவமை | தொகையுவமை |
|---|---|
| மதி போன்ற வட்ட முகம | மதிமுகம |
| பவளம போல் செவ்வாய | பவளவாய் |

### (2) உருவகம்

துன்பக் கடல்

உபமானத்தின் தன்மையை உபமேயத்தின மேல ஏற்றி, இரண்டையும் ஒன்றுபடுத்திக் கூறுவது உருவகம எனப்படும்.

| விரியுருவகம் | தொகையுருவகம |
|---|---|
| துன்பமாகிய கடல் | துன்பக் கடல் |
| பிறவியாகிய கடல் | பிறவிக் கடல் |
| அடியாகிய புணை | அடிப்புணை |

| உவமையணி | உருவகஅணி |
|---|---|
| மலர்ப்பாதம் | பாதமலர் |
| பவளவாய் | வாய்ப்பவளம் |
| தளிர் அடி | அடித்தளிர் |

உவமை அணியில் உபமானம் முன்னும், உபமேயம் பின்னும் நிற்கும். உருவக அணியில் உபமானம் பின்னும் உபமேயம் முன்னும் தோன்றும்.

### பயிற்சி

1. பின் வரும் உவமைகளை உருவகமாக மாற்றுக:
   - (i) சேல் போல் பிறழும் கண்
   - (ii) புயல் போல் கொடைக் கை
   - (iii) தாமரை வாண் முகம்
   - (iv) தண்டரளம் போல் முறுவல்
   - (v) கனிவாய்

2. பின் வரும் உருவகங்களை உவமைகளாக மாற்றுக.
   - (i) அங்கை மலா
   - (ii) அடித் தளிர்
   - (iii) கண் வண்டு
   - (iv) கண் மலர்
   - (v) நகையாகிய முல்லை

## 12. வல்லெழுத்து மிகும் இடங்களும், மிகா இடங்களும்

### வல்லெழுத்து மிகும் இடங்கள்

(1) இரண்டாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமை உருபுகளுக்குமுன் க, ச, த, ப மிகும்.

(உ - ம்) பாடத்தைப் படித்தேன். வீட்டிற்குச் சென்றேன்.

(2) அ, இ, உ என்ற சுட்டெழுத்துக்களுக்கும், எ என்ற வினாவெழுத்துக்கும் முன் வலி மிகும்.

(உ - ம்) அக்குடம், எக்குடம்?

(3) அந்த, இந்த என்ற சுட்டுத் திரிபின் முன்னும் எந்த என்ற வினாத்திரிபின் முன்னும் வலி மிகும்.

(உ - ம்) அந்தக் குடம், எந்தக் குடம்.

(4) தீ, பூ, ஈ முதலிய ஓரெழுத்து ஒரு மொழிக்கு முன் வலி மிகும்.

(உ - ம்) தீச்செயல்.

(5) ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சத்துக்கு முன் வலி மிகும்

(உ - ம்) தேடாப் பொருள்

(6) அப்படி, இப்படி, எப்படி, அங்கு, இங்கு, எங்கு என்னும் சொற்களுக்கு முன் வலி மிகும்.

(உ - ம்) அப்படிப் பார், அங்குச் செல்

(7) இனி என்னும் இடைச் சொல்லுக்கு முன் வலி மிகும்.

(உ - ம்) இனிக் காண்பேன்

(8) இகர விகுதி கொண்டு முடியும் வினையெச்சங்களுக்கு முன் வலி மிகும்.

(உ - ம்) தேடிப் பார்த்தேன்

(9) செய, செய்ய என்னும் வாய்பாட்டு வினையெச்சங்களுக்குமுன் வலி மிகும்.

(உ - ம்) தேடச் சொல், பார்க்கச் சொல்

(10) வன்றொடர்க் குற்றுகரத்திற்கு முன் வலி மிகும்.

(உ - ம்) பத்துப்பாட்டு

(11) ட, ற என்னும் ஒற்றுக்கள் இரட்டித்து வரும் நெடிற்றொடர், உயிர்த்தொடர் குற்றுகரங்களுக்கு முன் வலி மிகும்.

(உ - ம்) காட்டுப்பற்று, வயிற்றுப்பசி

(12) அன்றி, இன்றி என்ற வினையெச்சங்களுக்கு முன் வலி மிகும்.

(உ - ம்) உணவு இன்றிச் சென்றான்.

(13) சால, தவ என்னும் உரிச்சொற்களுக்கு முன் வலி மிகும்.

(உ - ம்) சாலப் பேசினான்; தவப்பிஞ்சு.

(14) இரு பெயரொட்டுப் பண்புத் தொகையில் வலி மிகும்

(உ - ம்) சாரைப் பாம்பு.

(15) இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகைக்குமுன் வலி மிகும்.

(உ - ம்) தயிர்ச் சட்டி.

(16) ஐகாரச் சாரியை பெற்ற குற்றியலுகரச் சொற்களுக்குமுன் வலி மிகும்

(உ - ம்) பண்டைக்காலம்.

வலி மிகா இடங்கள்

(1) வினைத்தொகை, உம்மைத் தொகைகளுக்கு முன் வலி மிகா

(உ - ம்) உயர்திணை, சேர சோழர்.

(2) இரண்டாம வேற்றுமைத் தொகையில் வலி மிகா.

(உ - ம்) கனி தின்றான்

(3) முதல் வேற்றுமைக்குமுன் வலி மிகா

(உ - ம்) புலி சென்றது.

(4) மூன்று, ஐந்து, ஆறும் வேற்றுமை விரிகளில் வலி மிகா.

(உ - ம்) இராமனோடு சென்றான்.
கோபுரத்திலிருந்து குதித்தாள்.
இராமனது புத்தகம்.

(5) விளித்தொடரில் வலி மிகா
(உ - ம்) கண்ணு, கேள்.

(6) பெயரெச்சத்திற்குமுன் வலி மிகா.
(உ - ம்) பாடின பையன்.

(7) அது, இது என்னும் சுட்டுப பெயர்களின் முன்னும், எது, ஏது, யாது என்னும் வினைப்பெயர்களின் முன்னும் வலி மிகா.

(உ - ம்) இது பார. எது சென்றது?

(8) அத்தனை, இத்தனை, எத்தனை, அவவளவு, இவ்வளவு, எவ்வளவு என்ற சொற்களின்முன் வலி மிகா

(உ - ம்) எத்தனை பழஙகள்?

(9) 'படி' என்று முடியும் வினையெசசஙகளுக்கு முன் வலி மிகா

(உ - ம்) பாாககுமபடி சொனனேன.

(10) ஏ, ஓ, எனனும இடைச சொற்களுக்குமுன் வலி மிகா

(உ - ம்) அவனே செய்தான
இவனோ செய்தான்

பயிற்சி

தேவையான இடஙகளில் வல்லின ஒற்றுக்களை அமைத்தெழுதுக :—

(1) அவன் இதெரு வழியாக செனறான
(2) நீ அப்படி சொன்னால் நான் வரமாட்டேன்.
(3) அகுளம் இசோலைக்கு எபக்கத்திலிருக்கிறது?
(4) ஓடிபோன திருடனை பிடித்து கொடுத்தவன் யார்?
(5) அவன் இபடத்தை பார்தது சிரித்தான்.
(6) வந்த சிறுவனுக்கு சோறு போடு.
(7) செய்தி குறிப்புக்களை தயார் செய்தாயா?

(8) கருத்தை விளக்குவதற்கு பழமொழிகள் பயன்படும்.

(9) இகாலத்தில் சினிமாவை பார்க்காதவன் உண்டா?

(10) நான் அவனைப் பார்த்து பத்து வருடங்கள் ஆயின.

(11) கதையை படிக்கபடிக்க உற்சாகம் உண்டாகும்.

(12) ஏழைகட்கு சோறு போடு.

(13) அவன் கடவுளை தொழுதான்

(14) இலக்குவன் இராமரோடு காடு சென்றான்.

(15) வந்த சிறுவனை பார்த்தாயா?

(16) கைதிகள் உணவின்றி செத்தனர்.

(17) பண பையை பெட்டியில் வை.

(18) அவனை பாட சொல்.

(19) நாட்டு பற்றில்லாதவன் யார்?

(20) எந்த பொருளையும் அற்பமாக கருதாதே

## 13. இடம் விட்டெழுதுதலும் சேர்த்தெழுதுதலும்

நாம் எழுதும்பொழுது காகிதத்தில் மேல் ஓரத்திலிருந்து கீழ் ஓரம் வரையிலும், இடப்பக்கம் ஓரத்திலிருந்து வலப்பக்கம் ஓரம் வரையிலும் எழுதக்கூடாது. இடப் பக்கம் ஒரு அங்குலம் தள்ளியே கோடு கிழித்து எழுத வேண்டும் மேலோரத்திலும், கீழோரத்திலும் ஒரு அங்குலம் இடம் விட்டு விடவேண்டும்.

கட்டுரையின் தலைப்பை முதலில் குறிக்க வேண்டும். அடுத்த வரியில் கட்டுரையை எழுதத் தொடங்கவேண்டும். ஒவ்வொரு பத்தியைத் தொடங்கும்பொழுதும் இடப்பக்கம் வரம்புக் கோட்டிற்கு ஒரு அங்குலம் தள்ளியே தொடங்க வேண்டும். ஒருவரியின் இறுதியில்

ஒரு சொல்லை எழுதுதற்குரிய இடம் இல்லாவிட்டால அச்சொல்லைப் பிளந்து எழுதுவதற்குப் பதிலாக அச் சொல்லை அடுத்த வரியில் எழுதுவதே நல்லது. சொற் களுக்கு இடையிலும், வரிகளுக்கு இடையிலும் இடம் விட்டு எழுதுவதே சிரிய முறையாகும்

## 14. சொற்களை இடம்விட்டு எழுதுதலும், சேர்த்து எழுதுதலும்

படி :

(1) சுக்குமி ளகுதிப் பிலி—பிழையான முறை
சுக்கு மிளகு திப்பிலி—பிழையான முறை
சுக்கு, மிளகு, திப்பிலி—நேரான முறை.
சொற்களைப் பொருளுக்கு ஏற்றவாறு பிரித்தெழுத வேண்டும்.

(2) தலைவி திவசம்
தலை விதி வசம்
சொற்றொடர்களைப் பொருளுக்கேற்றவாறு பிரித்தெழுத வேண்டும்.

(3) நீயென்னிருப்பை யவனுக்கறிவிப்பது நல்லது.
நீ என் இருப்பை அவனுக்கு அறிவிப்பது நல்லது.
கடினமான சந்திகளைப் பிரித்து எளிய சந்திகளைச் சேர்த்தெழுதுவதே முறை.

(4) உடையார் முன் னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

செய்யுளில் சீர்களுக்கிடையே இடம்விட்டு எழுத வேண்டும்.

# சிறப்புப் பகுதி

# I. எழுத்து

## 1. ஐகார, ஔகார, மகர ஆய்தக் குறுக்கங்கள்

### (1) ஐகாரக் குறுக்கம்

உச்சரித்துப் பார் :

ஐப்பசி, இடையன், தவளை.

*ஐகாரம் மொழிக்கு முதலிலும், இடையிலும், கடையிலும் தனக்குரிய இரண்டு மாத்திரையில் குறைந்து ஒலிக்கிறது.*

தனக்குரிய இரண்டு மாத்திரையில் குறைந்து ஒலிக்கும் ஐகாரம், ஐகாரக் குறுக்கம் எனப்படும்.

### (2) ஔகாரக் குறுக்கம்

உச்சரித்துப் பார் :

ஔவை, நறுமலர் வெளவினார், அங்கௌ

*ஔகாரம் தனிமொழியில் முதலிலும், தொடர்மொழியில் இடையிலும், கடையிலும் தனக்குரிய இரண்டு மாத்திரையில் குறைந்து ஒலிக்கிறது*

தனக்குரிய இரண்டு மாத்திரையில் குறைந்து ஒலிக்கும் ஔகாரம், ஔகாரக் குறுக்கம் எனப்படும்

*ஔகாரம் மொழி முதலில் மாத்திரம் குறுகுமென்பர் நன்னூலார். யாப்பருங்கல விருத்திக்காரர் தொடர்மொழியிடையிலும், இறுதியிலும் குறுகு மென்று கூறுவர்.*

### (3) மகரக் குறுக்கம்

(1) மருண்ம் (மருளும்)
(2) போன்ம் (போலும்)
(3) வரும் வளைகாரன்

'ள'கரம் திரிந்த ணகர மெய்யின் முன்னும், 'ல'கரம் திரிந்த னகர மெய்யின் முன்னும், வருமொழி முதலில் நின்ற வகர உயிர்மெய்யின் பின்னும் மகரமெய் தனக்குரிய அரை மாத்திரையில் குறைந்து ஒலிக்கிறது.

இவ்வாறு தனக்குரிய அரை மாத்திரையில் குறைந்து ஒலிக்கும் மகரம், மகரக் குறுக்கம் எனப்படும்.

### (4) ஆய்தக் குறுக்கம்

அல் + திணை = அஃறிணை.
முள் + தீது = முஃடீது.

தனிக் குறிலைச் சேர்ந்த லகர ளகர ஈற்றுச் சொற்களின் முன் தகரம் வர, இடையில் தோன்றும் ஆய்தம் தனக்குரிய அரை மாத்திரையில் குறைந்து ஒலிக்கிறது.

இவ்வாறு தனக்குரிய மாத்திரையில் குறைந்தொலிக்கும் ஆய்தம், ஆய்தக் குறுக்கம் எனப்படும்.

## 2. பிறப்பு எழுத்துக்களின் முயற்சிப் பிறப்பு

**I. உயிரெழுத்துக்கள் :**

அண்ணத்தின் முயற்சியால் வாயைத் திறக்க அ, ஆ என்ற எழுத்துக்கள் பிறக்கும்.

இ, ஈ, எ, ஏ, ஐ என்னும் ஐந்தெழுத்துக்களும் அங்காப்புடனே மேல்வாய்ப் பல்லை நாக்கடியினது ஓரமானது பொருந்தப் பிறக்கும்.

உ, ஊ, ஒ, ஓ, ஔ என்னும் ஐந்தெழுத்துக்களும் அங்காப்புடனே உதடுகள் குவிதலால் பிறக்கும்.

**II. மெய்யெழுத்துக்கள் :**

ககரமும், ஙகரமும் அங்காப்புடனே, நாக்கின் அடி மேல்வாய் அடியைச் சேரப் பிறக்கும்.

அங்காப்புடனே நாக்கின் நடு மேல்வாய் நடுவைப் பொருந்த சகர ஞகரங்கள் பிறக்கும்.

அங்காப்புடனே நுனிநா மேல்வாய் நுனியைச் சேர்தலால் டகர ணகரங்கள் பிறக்கும்.

அங்காப்புடனே மேல்வாய்ப் பல்லினது அடியை நாக்கு நுனி பொருந்த தகர நகரங்கள் பிறக்கும்.

அங்காப்புடன் மேலுதடும் கீழுதடும் பொருந்த பகர மகரங்கள் பிறக்கும்.

வாய் திறந்து, நாக்கின் அடியானது மேல்வாய் அடியைப் பொருந்த யகரம் பிறக்கும்.

வாய் திறந்து மேல்வாயை நாக்கு நுனியானது தடவ ரகர ழகரங்கள் பிறக்கும.

வாய் திறந்து, மேல்வாய்ப பல்லினடியை நாவின் ஓரம் தடித்து நெருங்க லகரமும், மேல வாயை நாவின் ஓரம் தடித்துத் தடவுதலால் ளகரமும் பிறக்கும

வாய் திறந்து, மேல்வாய்ப் பல்லைக் கீழுதடு பொருந்த வகரம் பிறக்கும

வாய் திறந்து, மேல்வாயை நாக்கு நுனி மிகப் பொருந்தினால் றகர னகரங்கள் பிறக்கும்.

III ஆய்த எழுத்து.

வாயைத் திறக்க, ஆய்தம தலையிடமாகப் பிறக்கும்.

IV. சார்பெழுத்துக்கள்.

ஆய்தம் தவிர, பிற சார்பெழுத்துக்கள் தத்தம் முத லெழுத்துக்களைப் போலப் பிறக்கும்.

## 3. மெய்ம்மயக்கம்

### I. உடனிலை மெய்ம்மயக்கம்

பக்கம், இங்ஙனம், அச்சம், மஞ்ஞை, புட்டு, அண் ணம், அத்தை, வெந்நீர், அப்பம், அம்மை, வெய்யர், அல்லி, அவ்வை, அள்ளல், முற்றம், அன்னை.

இவ்வாறு ரகர, ழகர மல்லாத பதினாறு மெய்களும தம்முன் தான் கூடி நிற்கும் கூட்டத்திற்கு உடனிலை மெய்ம் மயக்கம் என்று பெயர்.

## II. வேற்றுநிலை மெய்ம்மயக்கம

தங்கம், தெவ்யாது, பஞ்ச, பந்து, வெட்கம், கற்பு, வெண்கலம், சன்று, கம்பம், பொய்கை, மார்பு, வாழ்தல், செல்வம், சேள்வி.

இவ்வாறு க, ச, த, ப என்னும் நான்கும் அல்லாத பதினொன்கு மெய்களும் பிற மெய்களோடு கூடும் கூட்டம வேற்றுநிலை மயக்கம் எனப்படும்.

(1) கங்கன், தங்சம்.
ஙகர மெய்யின் முன் ககரம் மயங்கும்

(2) தெவ்யாது
வகர மெய்யின் முன் யகரம் மயங்கும்.

(3) பஞ்சம், கந்தன், உரிஞயாது, பொருந்யாது

ஞகர, நகர மெய்களின்முன் அவற்றின இனமாகிய சகர தகரங்களும் யகரமும் மயங்கும்.

(4) வெட்கம, கட்சி, திட்பம், சற்க, பயிற்சி, கற்பு.

டகர, றகர மெய்களின்முன் க, ச, ப என்ற மூன்று மெய்களும மயங்கும்

(5) வண்டு, வெண்சலம், வெண்சோறு, வெண் ஞமலி, வெண்பல், வெண்மை. மண்யாது, கண் வலி, கன்று, புன்கண், புன்செய், புன் ஞமலி, துன்பம், நன்மை, பொன் யாது, பொன் வலிது

ணகர னகரங்களின்முன் டகரமும், றகரமும், க, ச, ஞ, ப, ம, ய, வ என்ற மெய்களும் மயங்கும்.

(6) கம்பன், அறம் யாது, கலம் வலிது.

மகரத்தின்முன் ப, ய, வ என்ற மூன்று மெய்களும் மயங்கும்.

(7) செய்கை, கொய்சகம், நெய்தல், சேர்நாடு, மார்பு, கூர்மை, வாழ்வு, கீழ்யாறு, வாழ்ஞெண்டு.

ய, ர, ழ என்னும் மூன்று மெய்களின்முன் மொழிக்கு முதலாய் வரும் மெய்கள் மயங்கும்.

(3) செல்க, வல்சி, சொல்ப, செல்வம, நூல் யாது, கொள்க, வாள் சிறிது, நாள் பார், கள்வர், வாள் யாது.

ல, ள என்ற மெய்களுடன் க, ச, ப, வ, ய என்ற மெய்கள் மயங்கும்.

# II. சொல்

## 1 ஓரெழுத்தொரு மொழி

ஓரெழுத்து மொழிகள்

(1) ஆ - பசு
(2) ஈ
(3) ஊ - இறைச்சி
(4) ஏ - அம்பு
(5) ஐ - கோழை
(6) ஓ - மதகுநீர் தாங்கும் பலகை
(7) கா - சோலை
(8) கூ - இறைந்து சொல்
(9) கை
(10) கோ - அரசன்
(11) சா
(12) சீ - இலக்குமி
(13) சே - எருது
(14) சோ - அரண்
(15) தா
(16) தீ
(17) தூ - சுத்தம்
(18) தே - கடவுள்
(19) தை
(20) நா
(21) நீ
(22) நே - அன்பு
(23) நை - வருந்து
(24) நோ - வியாதி
(25) பா
(26) பூ
(27) பே - நுரை
(28) பை
(29) போ
(30) மா
(31) மீ - மேல்
(32) மூ - மூப்பு
(33) மே - மேன்மை
(34) மை
(35) மோ - மணம் பிடி
(36) யா - மரம்
(37) வா
(38) வீ - பூ
(39) வை
(40) வௌ - பற்றிப்பிடி
(41) நொ - துன்பப்படு
(42) து - உண்

மேலே காட்டியுள்ள நாற்பத்திரண்டு எழுத்துக்களும் பொருள் தருகின்றன. எனவே, ஓரெழுத்தாய்ப் பொருள் தருவது ஓரெழுத்தொரு மொழி எனப்படும்.

## 2. இலக்கணை

படி :

சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெருந்துணையு
நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி—முன்றின்
முழங்குங் கடாயானை மொய்ம்ப மலர்தார் மாறற்
குழந்துபின் சென்றவென் னெஞ்சு.

இங்கு மருங்கும், கையும், ஊன்றுதலும் முதலிய இலக்கணங்கள் நெஞ்சிற்கு இல்லை. ஆனால், அவை அதற்குத் தந்துரைக்கப்பட்டன இது விட்ட இலக்கணை எனப்படும்

புளி தின்றான் .

—இங்குப் புளியினது பழத்தைத் தின்றது உண்மை. ஆகையால், இது விடாத இலக்கணை எனப்படும்.

பாயிருள் பருகிப், பகல்கான் றெழுதரும்
பல்கதிர்ப் பருதி

—இருளைப் பருகுதலும், பகலைக் காலுதலும் பருதிக்கு இல்லை ஆனால், இருளைப் போக்குதலும் பகலைத் தருதலும் அதற்கு உண்டு இது விட்டும் விடாத இலக்கணை. எனப்படும்

இவ்வாறு ஒரு பொருளின் இலக்கணத்தை மற்றொரு பொருளுக்குத் தந்துரைப்பது இலக்கணை எனப்படும். அவ்வாறு உரைக்குங்கால் இல்லாத இலக்கணத்தைக் கூறுதல் விட்ட இலக்கணை என்றும், உள்ள இலக்கணத்தைக் கூறுதல் விடாத இலக்கணை என்றும், உள்ளதையும் இல்லாததையும் கூறுதல் விட்டும் விடாத இலக்கணை என்றும் வழங்கப்படும்.

## 3. பெயர்ச்சொல்

### (1) விளிவேற்றுமையில் அமையும் விகாரங்கள்

#### மூவகைப் பெயர்

(1) முனி கூறாய்—இயல்பு
வேந்தே கூறாய்—ஏமிகல்
நம்பீ கூறாய்—இகர நீட்சி

பிதாக் கூறாய் — இயல்பு
பிதாவே கூறாய்—ஏமிகல்
சாத்தீ கூறாய்—இகர நீட்சி
} பொதுப்பெயர்

மான் கொடியாய்—இயல்பு
புறவே வாராய்—ஏமிகல்
மந்தீ கொடியை—இகர நீட்சி
} அஃறிணை

மூவகைப் பெயர்களிடத்தும் இயல்பாதலும், ஏகாரம் மிகுதலும், இகரம் ஈகாரமாய்த் திரிதலும் பெரும்பாலும் விளியுருபுகளாகும்

(2) அன்னை—அன்னாய்
அன்னா
அன்னே

ஐகார ஈற்றுப் பொதுப் பெயர் ஆய் ஆகவும், ஆ ஆகவும் திரியும். ஏகாரமாகத் திரிதலும் உண்டு

(3) விடலை = விடலாய்
நாரை = நாராய்

ஐகார ஈற்று உயர்திணைப் பெயர்களும், அஃறிணைப் பெயர்களும் ஆய் எனத் திரியும்

(4) அம்பர் கிழான்—அம்பர் கிழாஅன்—அளபெடுத்தது
புலவன்—புலவ—ஈறு அழிந்தது.
நம்பன் — நம்பான் — ஈற்றயல் நீண்டது.
இறைவன் — இறைவா — ஈற்றில் நீண்டு, ஈறுகெட்டது

அப்பன், — அப்பாவோ — ஈறுகெட்டு, ஈற்றயல் நீண்டு, ஓகாரம் மிக்கது.

ஐயன் — ஐயவோ — ஈறு அழிந்து ஓகாரம் மிக்கது.

ஆதிரையான் — ஆதிரையாய் — இறுதி யவ்வாயிற்று.

வாயிலான் — வாயிலோயே — இறுதியவ்வாய் ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரம் மிக்கது.

முருகன் — முருகே — ஈறு அழிந்து, அயல் அகரம் ஏகாரமாயிற்று.

னகர வீற்று உயர்திணைப்பெயர் விளியேற்கும்போது அளபெடுத்தும், ஈறு அழிந்தும், ஈற்றயல் நீண்டும், ஈற்றயல் நீண்டு ஈறு கெட்டும், ஈற்றயல் நீண்டு ஈறு கெட்டு ஓகாரம் மிக்கும், ஈறு அழிந்து ஓகாரம் மிக்கும், இறுதி னகரம் யகரமாய்த் திரிந்தும, அவ்வாறு திரிந்து ஆகாரம் ஓகாரமாய் ஏகாரம் மிக்கும். ஈறு கெட்டு அயல் அகரம் ஏகாரமாயும் வரும்.

(5) வேள் — வேஎள் — அளபெடுத்தது.
எல்லாள் — எல்லா — ஈறு கெட்டது.
நமர்கள் — நமர்காள் — ஈற்றயல் நீண்டது.
குழையாள் — குழையாய் — ளவ்வொற்று, யவ்வொற்றாயிற்று.
அடிகள் — அடிகேள் — ஈற்றயலில் அகரம் ஏகாரமாயிற்று.

ளகாரவீற்று உயர்திணைப்பெயர் விளியேற்கும்போது அளபெடுத்தும், இறுதி கெட்டும், ஈற்றயல் நீண்டும், ளவ்வொற்று யகரமாய்த் திரிந்தும், ஈற்றயல் அகரம் ஏகாரமாய்த் திரிந்தும் வரும்.

(6) சிறார் — சிறாஅர் — அளபெடுத்தது.
தெவ்வர் — தெவ்விர் — ஈற்றயல் அகரம் இகரமாயிற்று.
வேந்தர் — வேந்தீர் — ஈற்றயல் அகரம் ஈகாரமாயிற்று.
சான்றார் — சான்றீர் — ஈற்றயல் ஆகாரம், ஈகாரமாயிற்று.

சான்றார் — சான்றீரே — ஈற்றயல் அகரம், ஈகாரமாய், ஏகாரமிக்கது.

நம்பியார் — நம்பீரே — ஈற்றயல் ஏகாரம் மிக்கு, அயல் யாக்கெட்டு, அதன் அயல் இகரம் ஈகார மாயிற்று.

தமர் — தமரீர் — ஈர் ஏற்றது.

ரகார வீற்று உயர்திணைப் பெயர் விளியேற்கும் போது அளபெடுத்தும், ஈற்றயல் அகரம் இகரமாகவும், ஈகாரமாகத் திரிந்தும், ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாகியும், அவ்வாறு திரிந்து பின் ஏகாரம மிக்கும் இறுதியில் ஏகாரம் மிக்கு அயலில் உள்ள யாக்கெட்டு அதனை யடுத்துள்ள குறில் நீண்டும், இறுதியில் ஈர் ஏற்றும் வரும்.

(7) மால் — மாஅல் — அளபெடுத்தது.
தோன்றல் — தோன்றால் — அயல் நீண்டது.
சேய் — சேஎய்.

லகார வீற்று உயர்திணைப்பெயர் விளியேற்கும் பொழுது அளபெடுத்தும், ஈற்றயல் நீண்டும் வரும்

யகார வீற்று உயர்திணைப்பெயர் அளபெடுத்து வரும்.

(8) அலவன் — அலவ — இறுதி அழிவு.
அலவா — இறுதி அழிந்து அயல் நீட்சி.

னகர வீற்று அஃறிணைப் பெயரும் பொதுப் பெயரும் விளியேற்கும்பொழுது ஈறு கெட்டும், அதனோடு அயல் நீண்டும் வரும்.

(9) முயல் — முயால்
கிளிகள் — கிளிகாள் } அஃறிணைப் பெயர்.
பிள்ளைகள் — பிள்ளைகாள்.

லகர ளகர வீற்று அஃறிணைப் பெயர்களும் பொதுப் பெயர்களும் ஈற்றயல் நீண்டுவரும்.

## (ii) ஐம்பாற் பெயர்களுக்குரிய விகுதிகள்

பெயர்ச் சொற்கள் பால் வகையால் ஆண்பாற் பெயர், பெண்பாற்பெயர், பலர்பாற்பெயர், ஒன்றன்பாற்பெயர், பலவின்பாற்பெயர் என ஐந்து வகைப்படும்.

அன், ஆன், மன், மான், ன் என்பன ஆண்பால் விகுதிகளாம்.

(உ - ம்:) குழையன் — அன் விகுதி
குழையான் — ஆன் ,,
வடமன் — மன் ,,
கோமான் — மான் ,,
பிறன் — ன் ,,

அள், ஆள், ள் என்பன பெண்பாற் பெயர் விகுதிகளாம்.

(உ - ம்:) குழையள் — அள் விகுதி
குழையாள் — ஆள் ,,
மகள் — ள் ,,
பொன்னி — இ ,,

விகுதிகளைப் பெறாது ஆண்பாலையும், பெண்பாலையும் உணர்த்தும் பெயர்ச் சொற்கள்.

நம்பி, விடலை, ஆடூஉ, கோ, வேள், குரிசில், தோன்றல், ஏந்தல், செம்மல், அண்ணல் என்பன ஆண்பாலை உணர்த்தும் பெயர்களாம்.

நங்கை, தோழி, செவிலி, மகடூஉ, தையல், பேதை, பெதும்பை, இருளி, மாது, பெண்டு என்பன பெண்பாலை உணர்த்தும் பெயர்களாம்.

அர், ஆர், மார், ர், கள் என்பன பலர்பாற்பெயர் விகுதிகளாம்.

(உ - ம்:) பெரியர் — அர் விகுதி.
பெரியார் — ஆர் ,,

தேவிமார் — மார் விகுதி
பிறர் — ர் ,,
குருக்கள் — கள் ,,

து என்பது ஒன்றன்பாற் பெயர் விகுதி.

(உ - ம்:) குழையது — து விகுதி.

வை, அ, வ், கள் என்பன பலவின்பாற் விகுதிகளாம்

(உ - ம்:) குழையவை — வை விகுதி
அவை — வை ,,
குழைய — அ ,,
அவ் — வ் ,,
குதிரைகள் — கள் ,,

## 4. வினைச்சொல்

### (1) ஐம்பால் வினைமுற்று

வினைமுற்றுக்கள் ஆண்பால் வினைமுற்று, பெண்பால் வினைமுற்று, பலர்பால் வினைமுற்று, ஒன்றன்பால் வினைமுற்று, பலவின் பால் வினைமுற்று என ஐந்துவகைப் படும்.

அன், ஆன் என்பன ஆண் பால் வினைமுற்று விகுதிகள்.

நடந்தனன் — அன் விகுதி
கொடுத்தான் — ஆன் ,,

அள், ஆள் என்பன பெண்பால் வினைமுற்று விகுதிகள்.

கொடுத்தனள் — அள் விகுதி
கொடுத்தாள் — ஆள் ,,

அர், ஆர் என்பன பலர்பால் வினைமுற்று விகுதிகள்.

கொடுத்தனர் — அர் விகுதி
கொடுத்தார் — ஆர் ,,

து, று என்பன ஒன்றன் பால் வினைமுற்று விகுதிகள்

நடப்பது — து விகுதி
போயிற்று — று ,,

அ என்பது பலவின்பால் வினைமுற்று விகுதி.

நடந்தன — அ விகுதி
நடப்ப — அ ,,

### (ii) சினைவினை— முதல் வினை.

(1) கால் ஒடிந்து விழுந்தது

—'ஒடிந்து' என்னும் சினைவினை 'விழுந்தது' என்னும் சினையின் வினையோடு முடிந்தது.

(2) முருகன் கால் ஒடிந்து விழுந்தான்

—'ஒடிந்து' என்னும் சினைவினை, 'விழுந்தான்' என்னும் சினைக்குரிய முதலின் வினையோடு முடிந்தது.

### (iii) ஆக்க வினை

சாத்தன் நல்லன் ஆயினான்.
கல்வியால் பெரியன் ஆயினான்.
ஆக்கச் சொல் விரிந்து நின்றது.
சாத்தன் நல்லன்.
கல்வியால் பெரியன்.

ஆக்கச் சொல் மறைந்து நின்றது.

ஆக்க வினைக்குறிப்பிற்கு ஆக்கச் சொல் விரிந்தும் தொக்கும் வரும்.

## 5. இடைச் சொல்

### அந்தில்

அந்திற் கழலினன் கச்சினன் — அசைநிலை.

வருமே சேயிழை அந்திற் கொழுநற்காணிய

இதில், அவ்விடத்து என்ற பொருளைத் தருதலால், இடப் பொருளைக் காட்டிற்று.

### ஆங்கு

ஆங்கத் திறனல்ல யாம்கழற — அசைநிலை.

ஆங்காங்காயினும் ஆக. இதில்,

அவ்விடத்து என்ற பொருளைத் தருதலால், இடப் பொருளைக் காட்டிற்று

### மா

மாயக் கடவுட்குயாகமா வலனே

—மா வென்னும இடைசசொல் வியங்கோளின் கண் வரும் அசைச சொல்லாகும்

### முன்னிலை அசைசசொறகள

| | |
|---|---|
| மியா — சென்மியா | இத்தை — நீ யொன்று பாடித்தை |
| இக — ஊரயாங்காணிக | வாழிய — காணிய வாழிய. |
| மோ — மொழிமோ | மாள — தவிர்நதீக மாள |
| மதி — செல்மதி | ஈ — சென்றீ பெரும |
| அத்தை — உள்ளிச் செல்வத்தை | யாழ — நீயே செலவியர்ந தியாழ. |

மியா, இக, மோ, மதி, அத்தை, இத்தை, வாழிய, மாள, ஈ, யாழ என்னும் பத்து இடைச் சொற்களும் முன்னிலை அசைச் சொற்களாம்.

# III. பொது

## 1. இடைப்பிறவரல்

படி :

| | |
|---|---|
| முருகன் (வயிறு நிரம்ப) உண்டான்.<br>கந்தன் அறத்தை (அழகுபெற)ச் செய்தான்<br>வாளால் (மாய) வெட்டினான்<br>தேவர்க்குப் (பிள்ளை வேண்டிச்) சிறப்பு எடுத்தான்<br>மலையினின்று (உருண்டு) வீழ்ந்தான்<br>வேந்தனது (பருங்கை) யானை<br>ஊர்க்கண் (உயர்ந்த ஒளி) மாடம்<br>கோபால, (விரைந்து ஓடி) வா | வேற்றுமை உருபு |

வந்தான் (பரிசு பெற்ற) மாணவன் — வினைமுற்று.

வந்த (சேர நாட்டு) வேந்தன் — பெயரெச்சம்.

வந்து (கோயிலுக்குப்) போனான் — வினையெச்சம்.

வேற்றுமை உருபுகளும், வினைமுற்றுக்களும், பெயரெச்சங்களும், வினையெச்சங்களும் கொண்டு முடிகிற பெயர்க்கும் வினைக்கும் இடையே பிற சொற்கள் வந்தன. இவ்வாறு இடையே வந்த பிறசொற்கள் இடைப்பிறவரல் எனப்படும்.

## 2. வினா வகை

கீழே கொடுத்துள்ள வினாக்களைக் கவனியுங்கள்.

1. 'இச் சொல்லுக்குப் பொருள் யாது?' என்று ஆசிரியர் மாணவனைக் கேட்பது—அறி வினா.

2. 'இச் சொல்லுக்குப் பொருள் யாது?' என்று மாணாக்கன் கேட்பது—அறியா வினா.

3. 'குற்றியோ? மகனோ?' என்பது—ஐய வினா.

4. 'செட்டியாரே, உப்பு இருக்கிறதா?' என்பது—கொளல் வினா.

5. 'குழந்தைக்குச் சட்டை யில்லையோ?' என்பது கொடை வினா.

6. 'கண்ணா, உண்டாயா?' என்பது—ஏவல் வினா.

என வினாக்கள் அறி வினா, அறியா வினா, ஐய வினா, கொளல் வினா, கொடை வினா, ஏவல் வினா என அறுவகைப்படும்.

### 3. விடை வகை

படி :

1 'கோயிலுக்கு வழியாது?' எனின், 'இது' என்பது சுட்டு விடை

2 'கண்ணா, இது செய்வாயோ?' எனின், 'செய்யேன்' என்பது மறை விடை.

3. 'கண்ணா, இது செய்வாயோ?' எனின், 'செய்வேன்' என்பது நேர் விடை

4. 'கண்ணா, இது செய்வாயோ?' எனின் 'நீ செய்' என்பது ஏவல் விடை.

5. 'கண்ணா, இது செய்வாயோ?' எனின், 'செய்வேனோ' என்பது வினா விடை.

6. 'கண்ணா, இது செய்வாயோ?' எனின், 'காய்ச்சல் வந்திருக்கிறது' என்பது உற்றதுரைத்தல் விடை.

7. 'இது செய்வாயா?' என்று வினவியபொழுது, 'கண் கெடும்' என்பது—உறுவது கூறல் விடை.

8. கண்ணா, இது செய்வாயோ?' எனின், 'மற்றையது செய்வேன்' என்பது இனமொழி விடை.

எனவே, விடைகள் சுட்டு, எதிர்மறை, நேர், ஏவல், வினாதல், உற்றதுரைத்தல், உறுவது கூறல், இனமொழி என எட்டுவகைப்படும்.

## 4. அடைமொழி

(1) பாற் குடம் (பொருள்)
வயல் நெல் (இடம்)
கார்த்திகை விளக்கு (காலம்)
காய் மரம் (சினை)
வெண்டாமரை (குணம்)
எழுதுகோல் (தொழில்)

அடைமொழி பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற அறுவகைப் பெயர்களாய் வந்தன.

பயி :

(2) நெய்க்குடம், குளநெல், கார்த்திகை விளக்கு, பூமரம், செந்தாமரை, ஊன்றுகோல்.

குறித்தபொருள் விளங்குவதற்காக அடைமொழிகள் கொடுக்கப்பட்டன. இவை இனமுள்ளவற்றைக் குறிப்பாய்க் கூறும்.

(3) உப்பளம், ஊர்மன்று, நாளரும்பு, இலைமரம், செம்போத்து, தோய் தயிர்.

இங்கு இனமில்லாத பொருள்களுக்கு அடைமொழிகள் கொடுக்கப்பட்டன. அவைகளால் பயனில்லை.

(4) கான்யாறு, முந்நாட் பிறை.

செய்யுள் வழக்கில் இனமுள்ளவை அடை கொடுத்துக் கூறப்பட்டன.

(5) வடவேங்கடம், செஞ்ஞாயிறு.

செய்யுள் வழக்கில் இனமில்லாதவை அடைகொடுத்துக் கூறப்பட்டன.

எனவே, அடைமொழிகள் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற அறுவகைப் பெயர்களாய் வரும் என்றும், இருவகை வழக்கிலும் அவை தழுவும் சொற்க

இனமுள்ளனவாயும், இல்லனவாயும் வரும் என்றும் அறிய லாம்.

## 5. பொருள்கோள்

*கற்க கசடறக் கற்பவை — செய்யுளடி*
*கற்பவை கசடறக் கற்க — பொருள் கொள்ளும் முறை.*

இவ்வாறு செய்யுளில் உள்ள சொற்களின் பொருளைக் கொள்ளும் விதம் பொருள்கோள் எனப் படும். அது அந்வயம் என்றும் பெயர்பெறும்.

### (1) யாற்றுநீர்ப் பொருள்கோள்

*சொல் அருஎ ஆற் பசும்பாம்பின் தோற்றம்போல்*
*மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்*
*செல்வமேபோல் தலைநிறுவித் தேர்ந்தநூற்*
*கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே.*
*சொல்—எழுவாய் காய்த்தவே — பயனிலை.*

யாற்று நீரொழுக்கு இடையறுது செல்வதுபோல் செய்யுளடிகளினெல்லாம் பொருள் அமைந்து செல்வது யாற்றுநீர்ப் பொருள்கோள் எனப்படும்.

### (2) மொழிமாற்றுப் பொருள்கோள்

*சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய*
*யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப*
*கானக நாடன் சுனை.*

சுரைமிதப்ப, அம்மி ஆழ, யானைக்கு நிலை, முயற்கு நீத்து....எனக் கொள்க.

ஏற்ற இரண்டு பயனிலைகளுக்குப் பொருந்தத் தக்க சொற்களை ஏலாத பயனிலைகளுக்குக் கூட்டி ஓரடியி னுள்ளே சொல்வது மொழிமாற்றுப் பொருள்கோள் எனப் படும்.

## (3) நிரனிறைப் பொருள்கோள்

கொடி குவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்தமுகம் வாய்முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சிமகள்

இது பெயர்ச் சொற்களும் பெயர்ப் பயனிலைகளு மாய் நின்ற முறை நிரனிறை.

பெயர்ச் சொல்லையும் வினைச் சொல்லையும் அவை கொள்ளும் பெயர்ப் பயனிலைகளையும், வினைப் பயனிலை களையும் வேறுவேறாக வரிசைப்பட நிறுத்தி முறை யாகவோ முறை மாறுபடவோ இதற்கு இது பயனிலை என்பது தோன்றக் கூறுகிற பொருள்கோள் நிரனிறைப் பொருள்கோளாம்.

## (4) பூட்டுவிற் பொருள்கோள்

திறந்திடுமின் றீயவை பிற் கண்டு மாத
ரிறந்து படிற்பெரிதா மேதம்—முறந்தையர்கோன்
றண்ணார மார்பிற் றமிழ்நர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு.

இதில் திறந்திடுமின் என்ற முதல் மொழியும் கதவு என்ற இறுதி மொழியும் பொருளில் பொருந்தின.

செய்யுளில் முதலிலும் இறுதியிலும் நிற்கும் மொழி கள் தம்முள் பொருள் நோக்கமுடைய பொருள்கோள் பூட்டுவிற்கோளாம். இருநுனிகளிலும் நாண் பூட்டப்படும் வில்போலச்செய்யுளின் முதல் மொழியும் இறுதி மொழி யும் பொருளில் பொருந்தின.

## (5) தாப்பிசைப் பொருள்கோள்

உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு.

ஊன் என்ற சொல் முன்னும் பின்னும் சென்று கூடிப் பொருள் தரும்.

செய்யுளின் நடுவில் நின்றமொழி முதலிலும் இறுதியிலும் சென்று சேர்வது தாப்பிசைப் பொருள்கோள் எனப்படும்.

## (6) அளைமறி பாப்புப் பொருள்கோள்

தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து
    தண்டின்றித் தளர்வார் தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து
    நாற்கதியிற் சுழல்வார் தாமும்
ஆழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே
    முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி
    முயலாதாரே.

வானெய்து நெறிமுன்னி முயலாதார், ஆழ்ந்த பிணி ........முனிவார், சூழ்ந்தவினை... சுழல்வார், தாழ்ந்த........ தளர்வார் எனப் பொருள் காண்க

செய்யுளில் இறுதியில் நின்ற சொல் இடையிலும் முதலிலும் சென்று சேர்வது அளைமறி பாப்புப் பொருள்கோள் எனப்படும்.

## (7) கொண்டு கூட்டுப் பொருள்கோள்

தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
யஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்.

வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலையுடையாளது மாமேனி போல் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழி வெண்முட்டை யுடைத்தன்ன பசலை தணிவாம் எனக் கூட்டுக.

செய்யுளில் பலவடிகளில் நோக்கப்பட்டுள்ள சொற்களைப் பொருள் தருமாறு கொண்டு கூட்டுதல் கொண்டு கூட்டுப் பொருள்கோள் எனப்படும்.

## (8) அடிமறிமாற்றுப் பொருள்கோள்

அலைப்பான் பிறிதுயிரை ஆக்கலும் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலும் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலும் குற்றம்
கொலைப்பாலும் குற்றமே யாம்.

இதில், ஈற்றடி தவிர மற்ற அடிகளுள், எந்த அடியை எங்கே கூட்டினாலும் பொருளும் ஓசையும் மாறா.

பொருளுக்குத் தக்கபடி எடுத்துக்காட்டும் அடியை உடையதும், எந்த அடியை முதல், நடு, இறுதி என்ற எவ்விடத்துக் கூட்டினாலும் பொருள் மாறாத இயல்புடையதும், அடிமறி மாற்றுப் பொருள்கோளாம்

எனவே, பொருள்கோளை யாற்றுநீர்ப் பொருள்கோள், மொழிமாற்றுப் பொருள்கோள், நிரனிறைப் பொருள்கோள், பூட்டுவிற் பொருள்கோள், தாப்பிசைப் பொருள்கோள், அளைமறி பாப்புப் பொருள்கோள், கொண்டு கூட்டுப் பொருள்கோள் அடிமறிமாற்றுப் பொருள்கோள் என எட்டுவகைப்படும்.

# IV. புணர்ச்சி

## 1. மெய்யீற்றில் இயல்பு புணர்ச்சி

1. தோன்றல் + அழகன் = தோன்றலழகன்
வேல் + எறிந்தான் = வேலெறிந்தான்

நிலைமொழி ஈற்றில் உள்ள மெய்மேல் வருமொழி முதலில் வரும் உயிர் வந்து கூடி நின்றது.

(2) உண் + கொற்றா = உண்கொற்றா.
தின் + சாத்தா = தின்சாத்தா.
வெல் + பூதா = வெல்பூதா.
துள் + வளவா = துள்வளவா.

ஏவல் வினைகள் ண, ன, ல, ள என்னும் ஈற்றை உடையன இயல்பாயின.

(3) மண் / பொன் } + பெரிது - மண் பெரிது, பொன் பெரிது.
+ மாண்டது - மண் மாண்டது, பொன் மாண்டது.
+ யாது - மண் யாது, பொன் யாது.

ணகர, னகரங்கள் மூன்றின மெய்கள் வந்தும் இயல்பாயின.

(4) பாண் + குடி = பாண்குடி—சாதி
அமண் + குடி = அமண்குடி—குழூஉ
பரண் + கால் = பரண்கால்
கவண் + கால் = கவண் கால்.

சாதிபற்றி வரும் பெயர்களுக்கும், கூட்டம் பற்றி வரும் பெயர்களுக்கும், பரண், கவண் என்னும் பெயர்களுக்கும் ஈற்றில் உள்ள ணகரம் வேற்றுமையில் வல்லினம் வர இயல்பாயிற்று.

(5) எயின் + குடி = எயின் குடி.

ணகர ஈற்றுச் சாதிப்பெயர் வேற்றுமையில் இயல்பாதலும் உண்டு.

(6) எகின் + தலை = எகின் றலை.
,, + சிறை = எகின் சிறை.

எகின் என்ற பறவையின் பெயர் வேற்றுமையில் வலி வர இயல்பாயிற்று.

(7) குயின் + கடுமை = குயின் கடுமை
ஊன் + பெருமை = ஊன் பெருமை

குயின், ஊன் என்ற சொற்கள் வேற்றுமையில் வல்லினம் வர இயல்பாயின.

(8) மான் + குளம்பு = மான் குளம்பு.
வான் + சிறப்பு = வான் சிறப்பு.

னகர வீற்றுச் சொற்கள் வேற்றுமையில் இயல்பாயின.

(9) நின் + பகை = நின் பகை.

நின் என்ற சொல் முன் வல்லினம் வர இயல்பாயிற்று.

(10) நடத்தல் + கடிது = நடத்தல் கடிது.
கற்றல் + பெரிது = கற்றல் பெரிது.

லகர ஈற்றுத் தொழிற்பெயர் முன் வல்லினம் வர இயலபாயிற்று.

(11) வேய் + குறிது = வேய் குறிது (எழுவாய்)
சீர் + சிறப்பு = சீர் சிறப்பு (உம்மை)
வீழ் + புனல் = வீழ் புனல் (வினை)
உண்ணியர் + போவான் = உண்ணியர் போவான் (எச்சம்)

ய், ர், ழ் என்னும் ஈற்றையுடைய சொற்களில் சில வல்லினம் வர இயல்பாயின.

(12) அவ் + யாவை = அவ் யாவை.
இவ் + யாவை = இவ் யாவை.
உவ் + யாவை = உவ் யாவை.

அவ், இவ், உவ் என்னும் அஃறிணைச் சுட்டுப்பெயர்க ளீற்று வகர மெய் இடையினம் வர இயல்பாயிற்று.

## 2. வினா, சுட்டுக்களின் புணர்ச்சி

(1) அ + ஆடு = அவ்வாடு.
இ + இலை = இவ்விலை
உ + அணி = உவ்வணி.
எ + உயிர் = எவ்வுயிர்?
அ + யானை = அவ்யானை.
இ + யானை = இவ்யானை
உ + யானை = உவ்யானை.
எ + யானை = எவ்யானை?

அ, இ, உ என்னும் சுட்டின் முன்னும், எகர வினா முன்னும் உயிரும், யகரமும் வர, வகர மெய் தோன்றிற்று.

(2) அ + கனி = அக்கனி.
இ + திசை = இத்திசை.
உ + படம் = உப்படம்.
எ + பிள்ளை = எப்பிள்ளை.
அ + ஙனம் = அங்ஙனம்.
இ + ஞமலி = இஞ்ஞமலி.
உ + நாடு = உந்நாடு.
எ + மரம் = எம்மரம்?
அ + வண்டி = அவ்வண்டி.

இ + வண்டி = இவ்வண்டி.
எ + வண்டி = எவ்வண்டி.

அ, இ, உ என்னும் சுட்டின் முன்னும் எகர வினா முன்னும், யகரம் ஒழிந்த பிற மெய்கள் வர, வந்த எழுத்துக்களே மிகுந்தன.

(3) அவ் + கடிய = அஃகடிய.
இவ் + கடிய = இஃகடிய.
உவ் + கடிய = உஃகடிய.

அவ், இவ், உவ் என்ற பெயர்களின் ஈற்று வகரமெய் வல்லினம் வர, ஆய்தமாகத் திரிந்தது.

(4) அவ் + ஞானம் = அஞ்ஞானம்.
இவ் + ஞானம் = இஞ்ஞானம்.
உவ் + ஞானம் = உஞ்ஞானம்.

அவ், இவ், உவ் என்ற பெயர்களின் ஈற்று வகரமெய் மெல்லினம் வர வந்த மெல்லினமாகத் திரிந்தது.

(5) அவ் + யாவை = அவ்யாவை.
இவ் + யாவை = இவ்யாவை.
உவ் + யாவை = உவ்யாவை.

அவ், இவ், உவ் என்ற பெயர்களின் ஈற்று மெய் இடையினம் வர இயல்பாயிற்று.

(6) நம்பியா + சென்றான் = நம்பியா சென்றான்?
அவனே + கொண்டான் = அவனே கொண்டான்?
அவனோ + தந்தான் = அவனோ தந்தான்?
யா + பெரியன = யா பெரியன?

ஆ, ஏ, ஓ, யா என்ற வினாவெழுத்துக்களின் முன் வரும் வல்லினம் இயல்பாயிற்று.

### 3. செய்யுளுக்கேற்ற சிறப்பு விகுதிகள்

(1) அ + இடை }
ஆ + இடை } = ஆயிடை.

செய்யுளில் நிலைமொழியில் சுட்டு நீண்டால், வருமொழியில் உயிர்வர இடையில் யகரம் தோன்றிற்று.

(2) நில விரி கானல் — குறியதன்கீழ் ஆ, குறுகிற்று.

என் செய்யுமோ நிலவு — குறியதன் கீழ் ஆ, குறுகி உகரமேற்றது

நிலா வணங்கு — குறியதன் கீழ் ஆ, இயல்பாயிற்று

செய்யுளில் குற்றெழுத்தின் கீழ் நின்ற ஆகாரம், அகரமாகக் குறுகுதலும், அகரமாகக் குறுகி உகரம் பெறுதலும், இயல்பாய் நிற்றலும் உண்டு.

(3) நாளன்று + போகி = நாளன்று போகி.
உப்பின்று + புற்கை = உப்பின்று புற்கை

செய்யுளில், அன்றி, இன்றி என்ற வினையெச்சங்கள் அன்று, இன்று எனத் திரிந்தால் வல்லினம் வர இயல்பாயின.

(4) அது + அன்று = அதான்று

செய்யுளில் அது என்னும் சுட்டுப் பெயர் முன், அன்று என்னும் வினைமுற்று வர, ஆன்று என நீண்டது.

### 4. இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சி வேறுபாடு

(1) வழிபடுதெய்வ நின் + புறங்காப்ப
வழிபடு தெய்வ நிற் புறங் காப்ப.
— இயல்பாவது விகாரமாயிற்று.

(2) மண் + கொணர்ந்தான் = மண்கொணர்ந்தான்.

விகாரமாவது இயல்பாயிற்று.

(3) நம்பியை + கண்டான் = நம்பியைக் கண்டான்.
—உயர்திணையிடத்து வேற்றுமை விரிந்தது.

(4) ஆடூஉ + அறிசொல் = ஆடூஉ வறிசொல்.
—உயர்திணையிடத்து வேற்றுமை தொக்கது.

(5) கொற்றனைக் கொணர்ந்தான் — பொதுப் பெயர்க்கண் உருபு தோன்றிற்று.

(6) பெண் பெற்றாள் — பொதுப் பெயர்க்கண் உருபு தொக்கது.

இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சிக்கண் இயல்பாய் முடிவது விகாரமாயும், விகாரமாய் முடிவது இயல்பாயும், உயர்திணைப் பெயர்க்கண் வேற்றுமை உருபு மறைந்தும், விரிந்தும், பொதுப் பெயர்க்கண் வேற்றுமை உருபு மறைந்தும், விரிந்தும் வந்தன

# V. யாப்பு

## 1. சீர் பிரித்துத் தளை கூறுதல்

| | |
|---|---|
| அன்னை | மாட்சி |
| அன்-னை | மாட்-சி |
| நேர் நேர் | நேர் நேர் |
| தே மா | தே மா |

மாமுன் நேர் வந்ததால், நேரொன்றாசிரியத்தளை.

| | |
|---|---|
| இந்திரர் | அமிழ்தம் |
| இந்-திரர் | அமிழ்-தம் |
| நேர் நிரை | நிரை நிரை |
| கூ விளம் | புளி மா |

விளம்முன் நிரை வந்ததால், நிரையொன்றாசிரியத்தளை

| | |
|---|---|
| நன்றி | மறப்பது |
| நன்-றி | மறப்-பது |
| நேர் நேர் | நிரை நிரை |
| தே மா | கரு விளம் |

மாமுன் நிரை வந்ததால், இயற்சீர் வெண்டளை

| | |
|---|---|
| தினைத்துணை | நன்றி |
| தினைத்-துணை | நன்-றி |
| நிரை நிரை | நேர் நேர் |
| கரு விளம் | தே மா |

விளம் முன் நேர் வந்ததால், இயற்சீர் வெண்டளை.

| | |
|---|---|
| கொன்றன்ன | இன்னா |
| கொன்-றன்-ன | இன்-னா |
| நேர் நேர் நேர் | நேர் நேர் |
| தேமாங் காய் | தே மா |

காய் முன் நேர் வந்ததால், வெண்சீர் வெண்டளை.

| | |
|---|---|
| செம்பவளத் | திரண்முத்தம் |
| செம்-பவ-ளத் | திரண்-முத்-தம் |
| நேர் நிரை நேர் | நிரை நேர் நேர் |
| கூவிளங்காய் | புளிமாங்காய் |

காய் முன் நிரை வந்ததால், கலித்தளை.

| | |
|---|---|
| செந்தாமரை | நாண்மலர்மிசை |
| செந்-தா-மரை | நாண்-மலர்-மிசை |
| நேர் நேர் நிரை | நேர்-நிரை-நிரை |
| தேமாங்கனி | கூவிளங்கனி |

கனி முன் நேர் வந்ததால், ஒன்றா வஞ்சித்தளை.

| | |
|---|---|
| வெண்சாமரை | புடைபெயர்தர |
| வெண்-சா-மரை | புடை-பெயர்-தர |
| நேர் நேர் நிரை | நிரை-நிரை-நிரை |
| தேமாங்கனி | கருவிளங்கனி |

கனி முன் நிரை வந்ததால், ஒன்றியவஞ்சித்தளை.

## 2. எதுகை வேறான வகைகள்

### (1) அடி எதுகை

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.

அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றிவரத் தொடுத்ததால் அடி எதுகை.

### (2) வருக்க வெதுகை

பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண்.

இது ககரமெய்வருக்க வெதுகை.

### (3) நெடிலெதுகை

ஆவாவென்றே யஞ்சினா ராழ்ந்தா ரொருசாரார்
கூகூவென்றே கூவிளி கொண்டா ரொருசாரார்.

இரண்டாமெழுத்து ஒன்றுவாயினும், இரண்டாம் எழுத்தின் நெடில் ஒப்புமை நோக்கி நெடிலெதுகை எனப் பட்டது.

(4) இனவெதுகை

தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப்படும்.

இது வல்லின வெதுகை.

அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு.

இது மெல்லின வெதுகை

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு

இது இடையின வெதுகை

(5) சீரெதுகை

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகை சான்ற.

முதல் இரண்டு சீர்களிலும் எதுகை அமைந்ததால் இணை எதுகை எனப்படும்

தந்தை மகற்காற்று நன்றி யவையத்து....

முதல் சீரிலும் மூன்றாம் சீரிலும் எதுகை அமைந்ததால் பொழிப்பெதுகை எனப்படும்.

வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி........

முதல் மூன்று சீர்களிலும் ககரமெய்வந்து எதுகை அமைந்ததால் கூழை எதுகை எனப்படும்.

நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாரா........

முதல் சீரிலும், நான்காம் சீரிலும் எதுகை அமைந்ததால், ஒரூஉ எதுகை எனப்படும்.

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று............

முதல் சீரிலும், மூன்றாம் சீரிலும், நான்காம் சீரிலும் றகரமெய் வந்து எதுகை அமைந்ததால், மேற்கதுவாய் எதுகை எனப்படும்.

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க........

முதல் சீரிலும், இரண்டாம் சீரிலும், நான்காம் சீரிலும் எதுகை அமைந்ததால், கீழ்க்கதுவாய் எதுகை எனப்படும்.

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்....

நான்கு சீர்களிலும் எதுகை அமைந்ததால் முற்றெதுகை எனப்படும்.

## 3. மோனை

### (1) அடிமோனை

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

அடிதோறும் முதலெழுத்து ஒன்றி வந்தமையால் அடிமோனை எனப்படும்.

வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

இது வகரமெய் வந்த வருக்கமோனை.

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு

முதலெழுத்துக்கள் நெட்டெழுத்துக்கள். எனவே இது நெடில் மோனை எனப்படும்.

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித்தகை சான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

அடிதோறும் முதலெழுத்து வல்லெழுத்து இது வல்லின மோனை எனப்படும்.

மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கல நன்மக்கட் பேறு.

அடிதோறும் முதலெழுத்து மெல்லெழுத்து. இது மெல்லின மோனை எனப்படும்.

வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்

அடிதோறும் முதலெழுத்து இடையெழுத்து இது இடையின மோனை எனப்படும்.

(2) சீர்மோனை

பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

முதல் சீரிலும் இரண்டாம் சீரிலும் முதலெழுத்து ஒன்றிவந்ததால் இணைமோனை எனப்படும்.

கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.

முதல் சீரிலும் மூன்றும் சீரிலும் முதலெழுத்து ஒன்றிவந்ததால் பொழிப்பு மோனை எனப்படும்.

பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅதவர்க்கு.

முதல் சீரிலும், நான்காம் சீரிலும் முதலெழுத்து ஒன்றிவந்ததால், ஒரூஉ மோனை எனப்படும்.

நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப்படும்.

முதல் சீரிலும், மூன்றும் சீரிலும், நான்காம் சீரிலும் முதல் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது மேற்கதுவாய் மோனை எனப்படும்.

கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.

முதல் சீரிலும், இரண்டாம் சீரிலும், நான்காம் சீரிலும் முதல் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது கீழ்க்கதுவாய் மோனை எனப்படும்.

நாக்கை நாவா நரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள.

முதல் மூன்று சீர்களிலும் முதலெழுத்து ஒன்றி வரத் தொடுப்பது கூழை மோனை எனப்படும்.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக

நான்கு சீர்களிலும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுத்தலால் முற்றுமோனை எனப்படும்

## கட்டளைக் கலித்துறை, நாழிசைகளின் இலக்கணம்

### கட்டளைக் கலித்துறை

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றா னிமையவர்க் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்
மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த
தீவண்ணனே.

ஒவ்வொரு பாட்டிலும் நான்கு அடிகள் வந்தன. ஒவ்வொரு அடியிலும் ஐந்து சீர்கள் உள்ளன. ஒவ்வொரு அடியிலும் முதல் நான்கு சீர்கள் வெண்டளை பெற்று வந்தன. ஒவ்வொரு அடியிலும் ஈற்றுச்சீர் விளங்காய்ச்

சீராக வந்தது. நேரசையில் தொடங்கும் அடி ஒவ்வொன்றிலும் மெய் எழுத்துக்களை நீக்கப் பதினாறு எழுத்துக்களும், நிரையசையில் தொடங்கும் அடி ஒவ்வொன்றிலும் மெய்யெழுத்துக்களை நீக்கப் பதினேழு எழுத்துக்களும் வந்தன. இவ்வாறு வருவது கட்டளைக் கலித்துறை எனப்படும்

## 4. தாழிசையின் இலக்கணம்

### வெண்டாழிசை

*நண்பி தென்று தீய சொல்லார*
*முன்பு நின்று முனிவு செய்யார*
*அன்பு வேண்டு பவர்*

இது மூன்றடியாய், முதலிரண்டும் நன்னான்கு சீராய், ஈற்றடி வெண்பாவைப்போல் முச்சீரடியால் முடிந்தது. இது வெண்டாழிசை எனப்படும்.

சிந்தியல் வெண்பா ஒரு பொருளின்மேல் மூன்றடுக்கு வருவதும் வெண்டாழிசை எனப்படும்

### ஆசிரியத் தாழிசை

*வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை*
*பான்மதி விடுத்தனை பல்லுயிர் ஓம்பினை*
*நீனிற வண்ணனின் நிறைகழல் தொழுதனம்*

இது மூன்றடியாய்த் தம்முள் அளவொத்து வந்ததால் ஆசிரியத்தாழிசை எனப்படும்

இவ்வாறு ஒரு பொருளின்மேல் மூன்று பாக்கள் அடுக்கி வந்தாலும் ஆசிரியத் தாழிசை எனப்படும்

### கலித்தாழிசை

இருகூற் றுருவத் திருந்தன் பொழிற்றில்லை
யொருகூற்றின் கூத்தை யுணராய் மடநெஞ்சே!
ஒரு கூற்றின் கூத்தை யுணரா யெனின்மற்றப்
பொருகூற்றந் தோற்றப் புலம்பேல்வாழி மடநெஞ்சே!

இது ஈற்றடி மிக்கு ஏனையடிகள் தம்முள் அளவொத்து நிற்கத் தனித்து வந்தமையால் கலித்தாழிசை எனப்படும்.

இவ்வாறு ஒரு பொருளின்மேல் மூன்று பாக்கள் அடுக்கி வந்தாலும் கலித்தாழிசை எனப்படும்.

### வஞ்சித் தாழிசை

மடப் பிடியை மத வேழந்
தடக்கையான் வெயின் மறைக்கும்
இடைச்சுரம் இறந்தார்க்கே
நடக்குமென் மனனே காண்.

பேடையை இரும் போத்துத்
தோகையான் வெயின் மறைக்கும்
காடக இறந்தார்க்கே
யோடுமென் மனனே காண்

இரும்பிடியை இகல் வேழம்
பெருங்கையான் வெயின் மறைக்கும்
அருஞ்சுரம் இறந்தார்க்கே
விரும்புமென் மனனே காண்

இது இரு சீரடி நான்காய் மூன்று பாக்கள் ஒரு பொருளின்மேல் வந்ததால் வஞ்சித்தாழிசை எனப்படும்.

பாக்களுக்குரிய இலக்கணத்தைத் தழுவி ஓசையாலும் அடியாலும் வேறுபட்டுத் தாழ்ந்த ஓசையால் வருவது தாழிசை எனப்படும்.

## 5. பாவினங்களின் பொதுவிலக்கணம்

வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா எனப் பாக்கள் நான்கு வகைப்படும். இப்பாக்களுக்குரிய இலக்கணங்களைத் தழுவி, அடியாலும் ஓசையாலும் வேறுபட்டு வரும் பாக்கள் பாவினம் எனப்படும். இது பன்னிரண்டு வகைப்படும்.

அவை யாவன:

1. வெண்டாழிசை.
2. வெண்டுறை.
3. வெளி விருத்தம்

} இவை வெண்பாவினம்.

4. ஆசிரியத் தாழிசை.
5. ஆசிரியத் துறை
6. ஆசிரிய விருத்தம்

} இவை ஆசிரியப்பாவினம்.

7. கலித்தாழிசை
8. கலித்துறை
9. கலி விருத்தம்.

} இவை கலிப்பாவினம்.

10. வஞ்சித்தாழிசை
11. வஞ்சித்துறை.
12. வஞ்சி விருத்தம்

} இவை வஞ்சிப்பாவினம்.

(i) தாழ்ந்த ஓசையால் வரும் பாக்கள் தாழிசை எனப்படும்.

(ii) அகப்பொருளும், புறப்பொருளும் வந்து வழங்கும் துறையாய் வரும் பாக்கள் துறை எனப்படும்.

(iii) எல்லாப் பொருள்களும் பயின்று வரும் பாக்கள் விருத்தம் எனப்படும்.

# VI. அணி

## பிறிது மொழிதலணி

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்.

மயிலிறகை அளவிற்குமீறி வண்டியில் ஏற்றினால் அதன் அச்சு முறியும்—இது உபமானம்.

அதுபோல

எளியவர் பலர் சேர்ந்தால் வலியவரையும்
வெல்லலாம்—இது உபமேயம்

இவ்வாறு உபமானத்தைக் கூறி, உபமேயத்தைப் பெற வைப்பது பிறிது மொழிதலணி எனப்படும்.

இது ஒட்டணி எனவும் பெயர் பெறும்

## கருத்துடை யடை மொழியணி

வெவ்விட மனையவள் விளம்ப வேற்கணா
டெவ்வடு சிலக்கையோன் சிறுவர் செவ்விய
ரவ்வவா றுறைதொறு மறந்தி றம்பல
ரெவ்விட ரெனக்குவந் தடுப்ப தீண்டெனா.

இச்செய்யுளில் 'சிறுவர்' என்ற சொல்லின் அடைமொழி 'தெவ்வடு சிலக்கை' என்பது. இதனால் சிறுவர் பிறரால் தீங்கு வராது பாதுகாத்துக் கொள்ளும் வல்லமையுடையர் என்பது விளங்கும்.

இவ்வாறு கருத்தைத் தரும் அடைமொழி அமைந்த சொற்றொடர் கருத்துடை யடை மொழியணி எனப்படும்.

## பொருளிலக்கணம்

தமிழ் இலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்து வகைப்படும். அவற்றுள் பொருளிலக்கணமே தனி சிறந்ததாகக் கருதப்படும்.

அது அகப்பொருள், புறப்பொருள் என இருவகைப் படும்.

## அகப்பொருள்

ஒத்த அன்புடைய தலைவனும், தலைவியும் உள்ளத்து உணர்வால் அனுபவிக்கும் இன்பம் அகம் எனப்படும். அது கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என எழுவகை யாகக் கூறப்படும். தலைவன் தலைவி என்ற இருவருக்குள் ஒருவரிடத்து மாத்திரமே தோன்றும் காதல் கைக்கிளை எனவும், இருவரிடத்தும் தோன்றும் அன்புடைய காதல் ஐந்திணை எனவும், இருவரிடத்திலும் தோன்றும் பொருந்தாக் காமம் பெருந்திணை எனவும் ஆன்றோர் கூறுவர்.

ஐந்திணை என்பது ஐவகை ஒழுக்கமாகும். அவை குறிஞ்சித்திணை, பாலைத்திணை, முல்லைத்திணை, மருதத் திணை, நெய்தல் திணை என்பன. இவற்றுள் ஒவ்வொன் றும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூவகையால் உரைக்கப்படும். ஒவ்வொரு ஒழுக்கத்திற்கு முரிய நிலமும், பொழுதும் முதற்பொருள் எனவும், அந்தந்த நிலங்களில் தோன்றும் பொருள்கள் கருப் பொருள் என்றும், அந்நிலங்களுக்குரிய நிகழ்ச்சிகளைக் கூறுதல் உரிப்பொருள் என்றும் கருதப்படும்.

### குறிஞ்சி பொருள்கள்

**முதற்பொருள் :**

மலையும் மலை சார்ந்த இடம் குறிஞ்சி எனப்படும். இந் நிலத்தில் கூதிர் காலமும், முன்பனிக் காலமும், யாமமும் மிக்க இன்பத்தைத் தரும் பொழுதுகளாகும்.

**கருப்பொருள் :**

**தெய்வம் :** முருகன்.

**உயர்ந்தோர் :** வெற்பன், சிலம்பன், கொடிச்சி, குறத்தி.

**தாழ்ந்தோர் :** குறவர், குறத்தியர்.

புள் : கிளி, மயில்.

விலங்கு : புலி, கரடி, சிங்கம, பன்றி, யானை

ஊர் : சிறுகுடி

நீர் : அருவி நீர, சுனை நீர்.

பூ : குறிஞ்சி, காந்தள், வேங்கை, சுனைக்குவளை.

மரம : சந்தனம, தேக்கு, அகில், அசோகம்.

உணவு : மலை, நெல், தினை

பறை : தொண்டகம்.

யாழ : குறிஞ்சியாழ்

பண் : குறிஞ்சிப்பண்.

தொழில் : தேனழித்தல்,
கிழங்கெடுத்தல்,
வெறியாட்டு,
தினை காத்தல்,
சுனையாடல்,
கிளி கடிதல்

உரிப்பொருள் புணர்தலும், புணர்தல் நிமித்தமும் இதன் உரிப்பொருளாம தலைவனும் தலைவியும் இன்பமாயிருப்பார்கள்.

## பாலையொழுக்கம்

முதற் பொருள் .

சுரமும் சுரம் சார்ந்த இடமும பாலை எனப்படும். வேனிற் காலமும், பின்பனிக் காலமும், நண்பகலும் மிக்க இன்பத்தைத் தரும் பொழுதுகளாகும்.

கருப்பொருள் :

தெய்வம் : துர்க்கையும், இரவியும்.

உயர்ந்தோர்: விடலை, காளை, மீளி, எயினர், எயிற்றியர்.

தாழ்ந்தோர் : மறவர், மறத்தியர்.

புள் : புறா, பருந்து, கழுகு.

விலங்கு : செந்நாய்

ஊர் : குறும்பு.

நீர் : நீரில்லாக் கிணறு

பூ : குராம், மராம், பாதிரி.

மரம் : இருப்பை, ஓமை, பாலை.

உணவு : வழிபறித்த பொருள், கொள்ளையடித்த பொருள்.

பறை : துடி.

யாழ் : பாலை யாழ்.

பண் : பஞ்சுரம்

தொழில் பகற் சூறையாடுதல்,
ஆறலைத்தல்,
நிரைகோடல்.

உரிப்பொருள் : பிரிதலும், பிரிதல நிமித்தமும் தலைவனும் தலைவியும் பிரிந்து இருத்தல் பாலையொழுக்கமாகும்

## முல்லை யொழுக்கம்

காடும் காடுசார்ந்த இடமும் முல்லை எனப்படும்.

முதற்பொருள் : கார் காலமும், மாலைக் காலமும் முல்லை நிலத்தோருக்கு இன்பம் தரும் பொழுதுகளாம்

கருப்பொருள் :

தெய்வம் : திருமால்

உயர்ந்தோர் : குறும்பொறை நாடான், தோன்றல், மனைவி, கிழத்தி.

தாழ்ந்தோர் : இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர்.

புள் : கானங் கோழி, மயில்.

விலங்கு : முயல், மான்.

ஊர் : பாடி, சேரி.

நீர் : கான்யாறு.

பூ : முல்லை, தோன்றி, குல்லை.

மரம் : கொன்றை, காயா, குருந்து.

உணவு : வரகு, சாமை.

பறை : ஏறு கோட்பறை.

யாழ் : முல்லை யாழ்.

பண் : சாதாரி.

தொழில் : சாமை, வரகு விதைத்தல்,
வரகுகளைப் பறித்தல்,
ஆவினை மேய்த்தல்,
குழலூதல்,
ஏறுதழுவல்.

உரிப்பொருள் : இருத்தலும், இருத்தல் நிமித்தமும் தலைவி, தலைமகன் வரவை நோக்கிப் பிரிவுத் துன்பத்தை ஆற்றியிருத்தல்.

## மருத வொழுக்கம்

முதற்பொருள் :

வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் எனப்படும். பெரும்பொழுதாறும், வைகறையும் இந்நில மக்களுக்கு இன்பம் தரும் பொழுதுகளாம்.

கருப்பொருள் :

தெய்வம் : இந்திரன்.

உயர்ந்தோர் : ஊரன், மகிழ்நன், கிழத்தி.

தாழ்ந்தோர் : உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர்.

புள் : நாரை, அன்னம், தாரா.

விலங்கு : எருமை, நீர்நாய்.

ஊர் : பேரூர், மூதூர்.

நீர்: ஆறு, கிணறு, குளம்.
பூ: தாமரை, செங்கழுநீர், குவளை.
மரம்: வஞ்சி, காஞ்சி, மருதம்.
உணவு: செந்நெல், வெண்ணெல்.
பறை: மணமுழா, நெல்லரி இணை.
யாழ்: மருத யாழ்.
பண்: மருதப் பண்.
தொழில்: நெல்லரிதல்,
வைககோல் துவைப்பித்தல்,
களை பறித்தல்,
கடா விடுதல்.

உரிப்பொருள். ஊடலும், ஊடல் நிமித்தமும் தலைவனும் தலைவியும் ஊடுதல் மருத வொழுக்கம்.

## நெய்த லொழுக்கம்

முதற்பொருள:

கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் எனப்படும். இந்நிலத் தோருக்குப் பெரும் பொழுதாவும் எற்பாடும் சிறந்த பொழுதுகளாம்.

கருப்பொருள்:

தெய்வம்: வருணன்.
உயர்ந்தோர்: சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி.
தாழ்ந்தோர்: நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர்.
புள்: கடற் காக்கை.
விலங்கு: சுறா மீன்.
ஊர்: பாக்கம், பட்டினம்
நீர்: உவர்நீர்க்கேணி.
பூ: தாழை, நெய்தல்.
மரம்: புன்னை, தாழை.
உணவு: மீன், உப்பு.

பறை: மீன் கோட்பாறை.
யாழ்: விளரி யாழ்.
பண்: செவ்வழிப்பண்.
தொழில்: மீன் பிடித்தல்,
உப்பு விளைத்தல்,
அவை விற்றல்.

உரிப்பொருள். இரங்கலும், இரங்கல் நிமித்தமும் தலைவி, தலைவனைப் பிரிந்து அவன் குறித்த காலத்தில் வர வில்லையே என ஏங்கியிருத்தல் செய்த லொழுக்கமாகும்.

## புறப்பொருள்

யாவராலும் அனுபவிக்கப்பட்டுப் பிறருக்குக் கூறப் படும் அறமும் பொருளும் புறப்பொருள் எனப்படும். அது வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என ஏழு திணைகளாகக் கூறப்படும்.

1. வெட்சி: பகைவருடைய பசுக்களைக் கவர்தலும் கவர்ந்த பசுக்களை மீட்டலும் வெட்சி எனப்படும். வீரர் வெட்சிப்பூவைச் சூடிச் செல்வர். கவர்ந்த பசுக்களை மீட்டல் கரந்தைத் திணையென வெண்பாமாலை கூறும். மீட்போர் கரந்தைப் பூவைச் சூடுதல் மரபு.

2. வஞ்சி: பகைவருடைய நாட்டைக் கைப்பற்ற எண்ணி போர் செய்வதற்குச் செல்லல் வஞ்சியொழுக்க மாகும். இக்காலத்தில் வீரர் வஞ்சிப்பூவைச் சூடுதல் மரபு.

3. உழிஞை: பகைவருடைய மதிலை வளைத்துக் கொள்ளுதலும் தம்முடைய மதிலைக் காத்தலும் உழிஞை ஒழுக்கமாகும். மதிலைக் காத்தல் நொச்சித்திணை என வெண்பாமாலை கூறும். பகைவர் மதிலை வளைத்துக் கொள்ளச் செல்வோர் உழிஞைப்பூவைச் சூடிக்கொள்வர்; மதிலைக் காப்போர் நொச்சிப் பூவைச் சூடிக்கொள்வர்.

**4. தும்பை:** பகைவரோடு போர் செய்தல் தும்பை ஒழுக்கமாகும். வீரர் யாவரும் தும்பைப்பூவைச் சூடிக் கொள்வார்கள்.

**5. வாகை:** பகைவரை வெல்லுதல் வாகை ஒழுக்கமாகும். வென்றோர் வகைப்பூவைச் சூடி ஆரவாரிப்பர்.

**6. காஞ்சி:** வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமைகளைப் பற்றி சான்றோர் கூறும் குறிப்பு காஞ்சி ஒழுக்கம்.

**7. பாடாண்:** ஒருவனுடைய கீர்த்தி, வலிமை, கொடைத்திறம் முதலியவற்றைப பற்றிக் கூறுதல் பாடாண் ஒழுக்கம் எனப்படும்

---

# உள்ளுறை

## க. இலக்கணம்

பக்கம்

## பயிற்சிகள்



## உ. கட்டுரை

## ங. மொழிப்பயிற்சி

# கழகச் செந்தமிழ் இலக்கணம்

## கட்டுரையுடன்

பழைய ஒன்பதாம் வகுப்பிற் குரியது

புதிய பத்தாம் வகுப்பு



## க. இலக்கணம்

## 1. எழுத்து

அருமை மாணவர்களே! எட்டாம் வகுப்புக்கு உரிய இலக்கணத்தைச் சென்ற ஆண்டிற் கற்றுத் தேர்ந்தீர்கள். அவற்றை மறவாது இவ்வாண்டில் ஒன்பதாம் வகுப்புக் குரிய இலக்கணங்களையும் கற்றுத் தேர்வில் வெற்றியடையுங்கள்.

### 1. உயிரளபெடை

வாழ்க,—வா அழ்க—இச் சொற்களில் முதலில் உள்ள வாழ்க என்பதும, அடுத்து உள்ள வாஅழ்க என்பதும் ஒரே பொருளைத் தருகின்றன. ஆனல, 'வாழ்க' என்பதில் உள்ள 'வா' என்னும் நெட்டெழுத்தை இரண்டு மாத்திரை அளவே ஒலிக்கவேண்டும். 'வாஅழ்க' என்பதில் உள்ள வா—என்னும் நெட்டெழுத்தை அடுத்து அகரம் அறிகுறியாக எழுதப்பட்டிருப்பதால், மூன்று மாத்திரை அளவு ஒலிக்கவேண்டும்.

செய்யுளில் சில இடங்களில் ஓசை குறையும்பொழுது அதனை நிறைக்க எழுத்தை நீட்டி ஒலிக்கவேண்டும். அவ்வாறு ஒலிப்பதற்கு அளபெடை என்பது பெயர்.

உயிரெழுத்துத் தன் மாத்திரையின் மிக்கு ஒலிப்பது உயிரளபெடை எனப்படும். (உயிர் + அளபு + எடை = உயிரின் மாத்திரை மிகுதல்.)

'தெய்வம் தொழாள்'

இதில் ழா என்பதில் உள்ள ஆகார உயிர் நெட்டெழுத்து ; அதற்கு மாத்திரை இரண்டு.

'தெய்வம் தொழாஅள்'

இதில் அவ்வுயிரெழுத்து அளபெடுத்து மூன்று மாத்திரை அளவு ஒலிக்கின்றது.

ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ,
காஅ, தீஇ, தூஉ, சேஎ

இவ்வாறு அளபெடையாக நிற்கும் நெட்டெழுத்தின் பின், அஃது அளபெடுத்ததற்கு அறிகுறியாக அதன் இனமாகிய குற்றெழுத்து வரிவடிவில எழுதப்படும்.

உயிரளபெடை மூவகைப்படும். அவை இசைநிறை அளபெடை, இன்னிசை அளபெடை, சொல்லிசை அளபெடை என்பன.

க. இசை நிறை அளபெடை

"ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை"
—சொல்லின் முதலில் அளபெடுத்தது.

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்"
—சொல்லின் இடையில அளபெடுத்தது.

"நல்ல படாஅ பறை"

—சொல்லின் இறுதியில் அளபெடுத்தது. (ஓதல், தொழாள், படா எனபனவே சொற்கள்.)

இவை இங்ஙனம் அளபெடுக்காவிடில் வெண்பாவிற்குரிய ஓசை கெடும். ஆதலால் செய்யுளில் ஓசை குன்றிய விடத்து, அதனை நிறைப்பதற்காகச் சொல்லின் முதல், இடை, கடை என்னும் மூவிடங்களிலும் நின்ற நெட்டெழுத்துத் தன் மாத்திரையின் மிக்கு ஒலிக்கும். அஃது இசைநிறை அளபெடை ஆகும்.

நன். சூ. 91 :

" இசைகெடின் மொழிமுதல் இடைகடை நிலைநெடில்
அளபெழும் அவற்றவற் றினக்குறில் குறியே."

உ. இன்னிசை அளபெடை

" கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை."

இச்செய்யுளில் கெடுப்பதும் எடுப்பதும் என்பன சொற்கள். அவை அவ்வாறே நிற்பினும் வெண்பாவிற்குரிய ஓசை கெடாது.

இவ்வாறு செய்யுளில் ஓசை குன்றாவிடத்தும் இனிய ஓசை பிறத்தற்பொருட்டு அளபெடுத்தல் உண்டு. அப்போது நெடில் அளபெடுத்தலே அன்றிக் குறிலும் நெட்டெழுத்தாக நீண்டு பின்னர் அளபெடுக்கும் (ஒரு மாத்திரையாய் இருந்த உயிரெழுத்து மூன்று மாத்திரை அளவு நீண்டு ஒலிக்கும்). அஃது இன்னிசை அளபெடை எனப்படும்.

ங. சொல்லிசை அளபெடை

" உரனசைஇ உள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ இன்னு முளேன்."

இதில் உரனசை, வரனசை என நிற்பினும் செய்யுள் ஓசை கெடாது. நசை என்பது விருப்பம் என்னும் பொருளுடைய பெயர்ச்சொல. நசைஇ என அளபெடுத்த பின் விரும்பி என்று வினையெச்சப் பொருள் தருகின்றது.

இவ்வாறு செய்யுளில் ஓசை குன்றுமிடத்தும், பெயர்ச் சொல் வினைச்சொல்லாதற் பொருட்டு அளபெடுத்தல் உண்டு. அது சொல்லிசை அளபெடை எனப்படும்.

## 2. ஒற்றளபெடை

அரங்ங்கம், பருந்ந்து. மண்ண், எஃஃகு

இவற்றுள் அரங்கம் என்பது அரங்ங்கம் என்றும், பருந்து என்பது பருந்ந்து என்றும், மண் என்பது மண்ண் என்றும், எஃகு என்பது எஃஃகு என்றும், ங, ந, ண என் னும் ஒற்றுக்களும ஆய்தமும் ஓசைமிகுந்து ஒலிக்கின்றன.

**அங்ங்கு:**—ஒரு குறிலின் கீழ், மொழி இடையில் உள்ள மெய் அளபெடுத்தது.

**அரங்ங்கம்:**—இருகுறிலின் கீழ், மொழியிடையில் உள்ள மெய் அளபெடுத்தது.

**கண்ண்:**—ஒரு குறிலின் கீழ், மொழி யிறுதியில் உள்ள மெய் அளபெடுத்தது.

**அரண்ண்:**—இருகுறிலின் கீழ், மொழியிறுதியில் உள்ள மெய் அளபெடுத்தது.

செய்யுளில் ஓசை குறையும் பொழுது, ஒரு குறிலின் கீழும், இரண்டு குற்றெழுத்தின் கீழும், சொல்லின் இடை யிலும், கடையிலும் நிற்கும, ங், ஞ், ண், ந், ம், ன், வ், ய், ல், ள் என்னும பத்து மெய்களும், ஆய்த எழுத்தும் அவ் வோசையை நிறைக்கத் தம அளவில் நீண்டு ஒலிக்கும்.

அவ்வாறு நீண்டு ஒலிப்பதைக் குறிக்க அம்மெய்யின் பின் அந்த மெய்யெழுத்தே அறிகுறியாய் எழுதப்படும். இவ்வாறு ஒற்று எழுத்துக்கள் தம் ஓசையின் மிக்கு ஒலிப் பது ஒற்றளபெடை எனப்படும். (ஒற்று + அளபு + எடை = ஒற்றளபெடை: மெய்யெழுத்து அளவு மிகுதல்.)

நன். சூ. 92: "ஙஞண நமன வயலள ஆய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கீழ் இடைகடை
மிகலே யவற்றின் குறியாம் வேறே."

## 3. போலி

(உ - ம்.) மரம்—மரன்; குளம்—குளன்; நலம்—நலன்.

இச்சொற்களின் ஈற்றில் மகரம் நிற்குமிடத்தில் னகரம் வந்தும் பொருள் வேறுபடவில்லை—இது **மொழி இறுதிப் போலி** எனப்படும்.

(உ - ம்.) மஞ்ஞ—மைஞ்ஞ; மயல்—மையல்.

இச்சொற்களின் முதலில் உள்ள அ—என்னும் எழுத்துக்குப் பதிலாக ஐ—என்னும் எழுத்து வந்தும் பொருள் வேறுபடவில்லை—இது மொழி முதற்போலி எனப்படும்.

(உ - ம்) அரசன்—அரைசன்; இலஞ்சி—இலைஞ்சி.

இச்சொற்களின் இடையில் உள்ள அ—என்னும் எழுத்துக்குப் பதிலாக ஐ—என்னும் எழுத்து வந்தும் பொருள் வேறுபடவில்லை—இது **மொழியிடைப் போலி** எனப்படும்.

ஒரு சொல்லின் முதல், இடை, கடைகளில் ஓரெழுத்துக்குப் பதிலாக மற்றோரெழுத்து வரினும் பொருள் வேறுபடாதிருப்பது போலி எனப்படும். (போல்+இ= போலி—போல இருத்தல்.)

நன். சூ. 122:

" மகர விறுதி அஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன உளவே."

நன். சூ. 123: அஐ முதலிடை யொக்குஞ் சஞயமுன்."

## 4. எழுத்துச் சாரியைகள்

அ + கரம் = அகரம்
ஆ + காரம் = ஆகாரம்
ஐ + கான் = ஐகான்
ம + கரம் = மகரம்
ம + காரம் = மகாரம்
ம + கான் = மஃகான்

மேற்கண்ட அ, ஆ, ஐ, ம என்னும் எழுத்துக்க ளோடு கரம், காரம், கான் என்னும் சாரியைகள் சேர்ந்து வந்தன.

'க்'—என்பது மெய்யெழுத்து. இதனை 'க'—அல்லது ககரம் எனக் கூறவேண்டும்.

க்+அ=க, ங்+அ=ங — மெய்யெழுத்துக்கள் அகரச்சாரியை பெற்று வந்தன.

ஆ+காரம்=ஆகாரம், ஈ+காரம்=ஈகாரம் — உயிர் நெட்டெழுத்துக்கள் காரம் என்னும் சாரியை பெற்றன.

ஐ+காரம்=ஐகாரம், ஐ+கான்=ஐகான், ஔ+காரம்=ஔகாரம், ஔ+கான்=ஔகான் — ஐ, ஔ என்னும் உயிர் நெட்டெழுத்துக்கள் காரம் கான் என்னும் சாரியைகளைப் பெற்றன.

அ+கரம்=அகரம், அ+காரம்=அகாரம், அ+கான்=அஃகான் — உயிர்க்குற்றெழுத்து கரம், காரம், கான் என்னும் சாரியைகளைப் பெற்றது.

க+கரம்=ககரம், க+காரம்=ககாரம், க+கான்=கஃகான் — உயிர்மெய்க் குற்றெழுத்து கரம், காரம் கான் என்னும் சாரியைகளைப் பெற்று வந்தது.

(மெய்யெழுத்துக்கள் அகரச் சாரியையும், உயிர்நெட்டெழுத்துக்கள் காரம் என்னும் சாரியையும், ஐ, ஔ என்னும் எழுத்துக்கள் காரச்சாரியையோடு கான் சாரியையும், உயிர்க்குறிலும் உயிர்மெய்க் குறிலும் காரம், கான் சாரியைகளோடு கரம் என்னும் சாரியையும் பெறும்.)

நன். சூ. 126 :

"மெய்க ளகரமும் நெட்டுயிர் காரமும்
ஐ ஔக் கானும் இருமைக் குறிலிவ்
விரண்டொடு கரமுமாஞ் சாரியை பெறும்பிற."

# II. சொல்

## 1. வேற்றுமை உருபேற்கும்போது வேறுபடும் பெயர்கள்

**தன்மைப் பெயர்கள் :**

யான் + ஐ = என்னை
நான் + ஐ = என்னை
யாம் + ஐ = எம்மை
நாம் + ஐ = நம்மை
யாங்கள் + ஐ = எங்களை
நாங்கள் + ஐ = எங்களை

யான் முதலிய பெயர்ச்சொற்களுடன் ஆல் முதலிய உருபுகளையும் இவ்வாறே சேர்த்துக் காண்க. இவை வேற்றுமை உருபு ஏற்குபோது திரிந்து வந்தன.

யான் + வீடு = என் வீடு
யான் + கை = என் கை
யாம் + நண்பர் = எம் நண்பர்
நாம் + ஊர் = நம்மூர்
யாங்கள் + அன்னை = எங்கள் அன்னை
நாங்கள் + மொழி = எங்கள் மொழி

யான் முதலிய பெயர்ச்சொற்கள் உருபு தொக்கு வேற்றுமைப் பொருளில் வரும்போதும் இவ்வாறு திரிந்து வரும்.

வேற்றுமை ஏற்கும்போது யான், நான் என்பவை என் என்றும், யாம் என்பது எம் என்றும், நாம் என்பது நம் என்றும், யாங்கள், நாங்கள் என்பன எங்கள் என்றும் திரியும். இவை தன்மைப் பெயர்கள்.

**முன்னிலைப் பெயர்கள் :**

| | | |
|---|---|---|
| நீ | + ஐ | = நின்னை, உன்னை |
| நீ | + வீடு | = நின்வீடு, உன்வீடு |
| நீயிர் | + ஐ | = நும்மை, உம்மை |
| நீவிர் | + ஐ | = நும்மை, உம்மை |
| நீர் | + ஐ | = நும்மை, உம்மை |
| நீர் | + அன்னை | = நும் அன்னை, உம் அன்னை |
| நீங்கள் | + ஐ | = நுங்களை, உங்களை |
| நீங்கள் | + ஊர் | = நுங்கள் ஊர், உங்கள் ஊர் |

வேற்றுமை ஏற்கும் போது நீ என்பது நின், உன் என்றும், நீயிர், நீவிர், நீர் என்பன நும், உம் என்றும் நீங்கள் என்பது நுங்கள், உங்கள் என்றும திரியும். இவை முன்னிலைப் பெயர்கள்.

**படர்க்கைப் பெயர்கள்**

| | | |
|---|---|---|
| தான் | + ஐ | = தன்னை |
| தான் | + பசு | = தன்பசு |
| தாம் | + ஆல் | = தம்மால் |
| தாம் | + கல்வி | = தம் கல்வி |
| தாங்கள் | + கு | = தங்கட்கு |
| தாங்கள் | + பெயர் | = தங்கள் பெயர் |

வேற்றுமை ஏற்கும்போது தான் என்பது தன்என்றும் தாம் என்பது தம் என்றும், தாங்கள் என்பது தங்கள் என்றும் திரியும். இவை படர்க்கைப் பெயர்கள்.

## 2. விளியேலாத பெயர்கள்

விளித்தல் - அழைத்தல். மன்னன் - மன்னா, தம்பி - தம்பீ, கோ - கோவே, நண்பர் - நண்பரே—இவ்வாறு மன்னன், தம்பி, கோ, நண்பர் என்ற சொற்கள் விளி யேற்று வந்தன.

சில பெயர்ச்சொற்கள் விளி ஏற்கமாட்டா. அவற்றை இங்குக் காண்போம்.

யான், நான், யாம், நாம், யாங்கள்—என்னும் தன்மைப் பெயர்கள்

நீ, நீர், நீவிர், நீங்கள்—என்னும் முன்னிலைப் பெயர்கள்

நுமன், நுமள், நுமர்—என்னும் கிளைப்பெயர்கள்

எவன், ஏவன், யாவன்—என்னும் வினாப்பெயர்கள்

அவன், இவன், அவள், இவள், அவர், இவர், அவை, இவை, அது, இது—என்னும் சுட்டுப் பெயர்கள்

தான், தாம்—என்னும் பொதுப் பெயர்கள்

பிறன், பிறர், பிற, மற்று, தாங்கள்—என்னும் பெயர்கள் ஆகியவை விளி ஏலாத பெயர்கள் ஆகும்.

## 3. வினைச்சொல்

நடந்தான், சென்றான், கண்டான்-என்னும் சொற்கள் ஒருவன் செய்த தொழில்களை உணர்த்துகின்றன. இவ்வாறு ஒரு தொழிலை உணர்த்தும் சொல் வினைச்சொல் எனப்படும். வினை - தொழில் என்பன ஒரு பொருட்சொற்கள்.

வினைச்சொல் இரண்டு வகைப்படும். அவை தெரிநிலைவினை, குறிப்புவினை என்பன.

**தெரிநிலை வினைச்சொல்:**

"குயவன் குடம் வனைந்தான்"—இதில் வனைந்தான் என்னும் வினைச்சொல்—தொழில் செய்யும் தலைவனையும், மண் என்னும் முதற்காரணத்தையும், தண்டு சக்கரம் முதலிய துணைக் காரணங்களையும், செய்யும் இடத்தையும், வனைதலாகிய செயலையும், இறந்த காலத்தையும், செயப்படு பொருளாகிய குடம் முதலியவற்றையும் உணர்த்தி வந்தது.

ஒரு தொழிலைச் செய்யும் தலைவன், அத்தொழிலுக்குரிய காரணங்கள், தொழில் நடைபெறும் இடம், தொழி

வின் நிகழ்ச்சி, காலம், செய்யப்பட்ட பொருள் ஆகிய ஆறினையும் வெளிப்படையாகத் தெரிவிப்பது தெரிநிலை வினைச்சொல் எனப்படும்.

நன் சூ. 320 : "செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே"

குறிப்பு வினைச்சொல்

(உ - ம்.) கணைணன் குறுந்தாளன், கமலம் குழையள்

மேலே கண்ட உதாரணங்களில் குறுந்தாளன் என்பது குறுகிய தாளை உடையவன் என்றும், குழையள் என்பது குழையை உடையவள் என்றும் பொருள்படும். இவ்வாறு, பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் ஆறனுள், ஒன்றன் அடியாகப் பிறந்து செய்பவனை மட்டும் உணர்த்தி வருவது குறிப்பு வினை எனப்படும்.

நன். சூ : 321

"பொருள் முதல் ஆறினும் தோற்றிமுன் ஆறனுள்
வினைமுதல் மாத்திரை விளக்கல்வினைக் குறிப்பே"

## பகுபதவுறுப்புக்கள்

பதம், சொல், மொழி என்பன ஒரு பொருட் சொற்கள். பகுபதம், பகாப்பதம் எனப் பதம் இருவகைப் படும்.

படித்தான்—படி + த் + த் + ஆன்
உண்டான்—உண் + ட் + ஆன்
தின்றான்—தின் + ற் + ஆன்

இவ்வாறு பிரிக்கப்படும் சொல் பகுபதம் எனப்படும். இவ்வாறு பிரிக்கமுடியாத சொல் பகாப்பதம் எனப்படும். கல், மரம் முதலிய சொற்கள் பிரிக்கமுடியாத சொற்கள் : இவை பகாப்பதம் எனப்படும்.

பகுபத உறுப்புக்கள் : (i) பகுதி அல்லது முதல்நிலை, (ii) விகுதி அல்லது இறுதிநிலை, (iii) இடைநிலை,

(iv) சாரியை, (v) சந்தி, (vi) விகாரம் என்னும் ஆறும் பகுபத உறுப்புக்கள் ஆகும்.

கூனன்—இதில்—(கூன் + அன்) கூன் - பகுதி; அன் விகுதி சில பகுபதங்களில் பகுதி விகுதி என்னும் இரண்டு உறுப்புக்கள் மட்டுமே இருக்கும்.

உண்டான் = (உண் + ட் + ஆன்) உண் - பகுதி, ஆன் - விகுதி, ட் - இடைநிலை. இதில் பகுதி, விகுதி, இடைநிலை என்னும் மூன்று உறுப்புக்கள் மட்டுமே வந்துள்ளன.

படித்தான் = (படி + த் + த் + ஆன்) படி - பகுதி, த் - சந்தி: த்-இடைநிலை. ஆன்-விகுதி. இதில் பகுதி, விகுதி, இடைநிலை, சந்தி என்னும் நான்கு உறுப்புக்கள் வந்துள்ளன.

நடித்தனர் = (நடி + த் + த் + அன் + அர்) நடி - பகுதி, த் - சந்தி, த் - இடைநிலை, அன் - சாரியை, அர் - விகுதி, இதில் பகுதி, சந்தி, இடைநிலை, சாரியை, விகுதி என்னும் ஐந்து உறுப்புக்கள் மட்டும் வந்துள்ளன.

நடந்தனர் = [நட + த்(ந்) + த் + அன் + அர்] நட-பகுதி, த் - சந்தி, ந் - என விகாரப்பட்டது விகாரம். த் - இடைநிலை - அன் - சாரியை. அர் - விகுதி. இதில் ஆறு உறுப்புக்களும் வந்துள்ள.

## (i) (பகுதி—பெயர், வினை இடை, உரி)

1. பெயர்ப் பகுதிகள் :

கண்ணன், பொன்னி, அறிஞர், நாடன், வலைஞன்— இவை பெயர்ப்பகுபதங்கள். இவற்றின் முதலில் உள்ள கண், பொன், அறிவு, நாடு, வலை என்பன பெயர்ப்பகுதிகள். இவ்வாறு பெயர்ப்பகுபதங்களின் முதலில் வரும் பகுதிகள் பெயர்ப்பகுதிகள் எனப்படும்.

## 2. வினைப் பகுதிகள்

செய்தான், தின்றான், களிக்கிறான், இருக்கிறது, வாழும், அறிவார்—இவை தெரிநிலை வினைப்பகுபதங்கள். இவற்றின் முதலில் உள்ள செய், தின், களி, இரு, வாழ், அறி—என்பவை வினைப்பகுதிகள். இவ்வாறு வினைப் பகுபதங்களின் முதலில் வரும் பகுதிகள் வினைப்பகுதிகள் எனப்படும்.

செய், தின் முதலிய வினைப்பகுதிகள் முன்னிலையில் உள்ள ஒருவனை நோக்கி ஏவுதற்குரிய சொற்களின் வடிவாய் உள்ளன. ஆகலின் ஒரு வினைச்சொலின் பகுதியை அறியவேண்டுமாயின், அவ்வினையைச் செய்யுமாறு ஒருவனை ஏவுதற்குரிய சொலலினை அறியவேண்டும்.

கண்டான் என்னும் வினைச்சொல்லின் பகுதி கண் என்பது. அன்று; ஏவுதற்குரிய சொலவடிவம் காண் என்பது அதுவே பகுதியாகும். பின்வருவனவும் அவ்வாறே கொள்க.

| வினைச்சொல் | | பகுதி |
|---|---|---|
| வந்தான் | — | வா |
| தந்தான் | — | தா |
| செத்தான் | — | சா |
| விட்டார் | — | விடு |
| விற்றான் | — | வில் |
| பெற்றேன் | — | பெறு |
| கொன்றான் | — | கொல் |

செய், தின், களி முதலிய வினைப்பகுதிகள் திரியாமல் நிற்றலும், வா, தா, சா முதலிய வினைப்பகுதிகள் திரிந்து நிற்றலும் அறிக.

## 3. இடைப் பகுதிகள்

அவன், இவன், உவன், எவன், யாவன், பிறன், மற்றவன்—இவை பெயர்ப்பகுபதங்கள். இவற்றின் முதலில்

உள்ள அ, இ, உ, எ, யா, பிற, மற்று என்பன இடைப் பகுதிகள். இவ்வாறு பெயர்ப்பதங்களின் முதலில் வருவன இடைப்பகுதிகள் எனப்படும்.

4. உரிப் பகுதிகள்

வன்மையன், மென்மையன், சான்றான், இசைத்தான், கடிது, மாண்டது, முழங்கினது—இவை வினைப்பகு பதங்கள். இவற்றின் முதலில் உள்ள வன்மை, மென்மை, சால், இசை, கடி, மாண், முழங்கு என்பவை உரிப்பகுதி கள். இவ்வாறு வினைப்பகுபதங்களில் முதலில் வரும் பகுதிகள் உரிப்பகுதிகள் எனப்படும்.

## (ii) விகுதி

பகுபதத்தின் இறுதியில் நிற்கும் உறுப்பு விகுதி அல்லது இறுதிநிலை எனப்படும்.

நடந்தனன், நடந்தான், நடந்தனள், நடந்தாள், வந்தனர், வந்தார், நடந்தது, போயிற்று—இச்சொற்களின், ஈற்றில் வந்துள்ள, அன், ஆன், அள், ஆள், அர், ஆர், து, று—என்பன விகுதிகள். அவை இடம் நோக்கி மூன்று வகையாகப் பிரிக்கப்படும். அவை தன்மை விகுதிகள், முன்னிலை விகுதிகள், படர்க்கை விகுதிகள் என்பன.

க. தன்மை வினைமுற்று விகுதிகள்

படிப்பல், படிப்பன், படிப்பென், படிப்பேன்—இவற் றின் ஈற்றில் வந்த அல், அன், என், ஏன் என்பன தன்மை ஒருமை வினைமுற்று விகுதிகளாம்.

உண்கு, உண்டு, சேறு—இவற்றில் வந்த கு, டு, று என்னும் விகுதிகளும் தன்மை ஒருமை வினைமுற்று விகுதி களாம்.

உண்கும், உண்டும், வருதும், சேறும்—இவற்றில் வந் துள்ள கும், டும், தும், றும்—என்னும் நான்கும் தன்மைப் பன்மை வினைமுற்று விகுதிகளாம்.

நடந்தனம், நடந்தாம், நடந்தனெம், நடந்தேம், நடந்தோம்—இவற்றில் வந்த அம், ஆம், எம், ஏம், ஓம் என்பனவையும் தன்மைப் பன்மை வினைமுற்று விகுதிகளாம்

குறிப்பு : உண்கு - உண்பேன். உண்டு - உண்டேன். சேறு - செல்வேன். உண்கும் - உண்போம். உண்டும் - உண்டோம். வருதும் - வருவோம். சேறும் - செல்வோம்.

௨. முன்னிலை வினைமுற்று விகுதிகள்

சென்றனை, சென்றாய், செல்லுதி; கண்டனை, கண்டாய், காணுதி—இவற்றில் வந்த ஐ, ஆய், இ என்பன முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதிகள் எனப்படும்.

சென்றனிர், சென்றீர்; கண்டனிர், கண்டீர்—இவற்றில் வந்த இர், ஈர் என்பன முன்னிலைப்பன்மை வினைமுற்று விகுதிகளாம்

சென்றீர்கள் கண்டீர்கள்—இவற்றில் ஈர் விகுதி மேல் கள் என்னும் விகுதி சேர்ந்து வந்துள்ளது. இவ்வாறு ஒரு விகுதிமேல் மற்றொரு விகுதி சேர்ந்துவரின் அது விகுதிமேல் விகுதி எனப்படும்.

௩. படர்க்கை வினைமுற்று விகுதிகள்

நடந்தனன், நடந்தான்
கண்டனன், கண்டான்

இவற்றின் ஈற்றில் வந்துள்ள அன், ஆன் என்பன படர்க்கை (உயர் திணை) ஆண்பால் வினைமுற்று விகுதிகள்.

படித்தனள், படித்தாள்
அறிந்தனள், அறிந்தாள்

இவற்றின் ஈற்றில் வந்துள்ள அள், ஆள் என்பன படர்க்கை (உயர் திணைப்) பெண்பால் வினைமுற்று விகுதிகள்.

சென்றனர், சென்றார், என்ப
விடுத்தனர், விடுத்தார், விடுப

இவற்றின் ஈற்றில் வந்துள்ள அர், ஆர், ப என்பன படர்க்கை (உயர் திணைப்) பலர்பால் வினைமுற்று விகுதிகள்.

சென்றார்கள், விடுத்தார்கள்

என்பவற்றில் ஆர் விகுதியுடன் கள் என்பது விகுதிமேல் விகுதியாய்ச் சேர்ந்து வந்துள்ளது.

என்மார்—என்பதில் உள்ள மார் என்பதும் ஒரு விகுதி எனச் சிலர் கூறுவர். என் + ம் + ஆர் எனப்பிரித்து ஆர் விகுதி எனக் கொள்வதே சிறப்பாகும்.

ஓடினது, ஓடிற்று
போனது, போயிற்று

இவற்றின் ஈற்றில் வந்துள்ள து, று என்பன (அஃறிணைப்) படர்க்கை ஒன்றன்பால் வினைமுற்று விகுதிகள்.

மேய்ந்தன, மேயா
கண்டன, காணா

இவற்றின் ஈற்றில் வந்த அ, ஆ என்பன (அஃறிணைப்) படர்க்கைப் பலவின்பால் வினைமுற்று விகுதிகள்.




ஈ. வியங்கோள் வினைமுற்று விகுதிகள்

வாழ்க, செய்க, வீழ்க, வாழிய, வருக—இவை வியங்கோள் வினைமுற்றுக்கள். வியங்கோள் வினைமுற்று என்பது மரியாதையாக ஏவும் பொருள் உடையது. வாழ்த்து

தல், வைதல், வேண்டுதல், விதித்தல் என்ற நான்கு பொருள்களிலும் வியங்கோள் வினைமுற்று வரும். இஃது இருதிணை, ஐம்பால், மூவிடங்கட்கும் பொதுவானது.

வாழ்க, வாழிய, வாழியர், வாழ, வாழல்—இவற்றின் ஈற்றில் வந்துள்ள—க, ய, ர், அ, அல் என்பன வியங்கோள் வினைமுற்று விகுதிகள்.

௫. ஏவல் வினைமுற்று விகுதிகள்

நீ செல்வாய்—ஒருவனை ஏவுதல்
நீர் செல்லும்—பலரை ஏவுதல்

இவ்வாறு ஏவற்பொருளை உணர்த்தும் வினைமுற்று ஏவல் வினைமுற்று எனப்படும். (ஏவல் என்பது கட்டளையிடுதல்; முன்னின்றானை அல்லது முன்னின்றாரை நோக்கி ஒரு வினையைச் செய்யுமாறு ஏவுதல்.)

(நீ) செய்வாய், உண்பாய், வருவாய்—ஆய் விகுதி
(நீ) செய்தி, உண்ணுதி, வருதி —இ விகுதி
ஆய், இ—என்பன ஏவல் ஒருமை விகுதிகள்.
(நீர்) செய்ம்மின், உண்மின், வம்மின்
—மின் விகுதி
(நீர்) செல்விர், உண்பிர், வருவிர் —இர் விகுதி
(நீர்) செய்வீர், உண்பீர், வருவீர் —ஈர் விகுதி
(நீர்) செய்யும், உண்ணும், வாரும் —உம் விகுதி
மின், இர், ஈர், உம்—என்பன ஏவற்பன்மை விகுதிகள்.
(நீ) செய்யாய், உண்ணாய், வாராய் —ஆய் விகுதி
(நீ) செய்யாதி, உண்ணாதி, கொல்லாதி
—இ விகுதி
(நீ) செய்யாதே, உண்ணாதே, வாராதே
—ஏ விகுதி
(நீ) செய்யன்மின், உண்ணன்மின், வாரன்மின்
—மின் விகுதி

(நீ) செய்யல், உண்ணல், வாரல்—அல் விகுதி
(நீ) செய்யேல், உண்ணேல், வாரேல்—ஏல்விகுதி
(நீர்) செய்யாதிர், உண்ணுதிர், கொல்லாதிர்
—இர் விகுதி
(நீர்) செய்யாதீர், உண்ணுதீர், கொல்லாதீர்
—ஈர் விகுதி

இவைகள் ஏவல் எதிர்மறை வினைமுற்றுக்கள். பகுதிக்கும் விகுதிக்கும் இடையே ஆ, அல் என்னும் எதிர்மறை இடைநிலை புணர்ந்து குன்றியும குன்றாதும் நின்றன.

௬. எச்ச விகுதிகள்

(1) பெயரெச்சம்

சென்ற குதிரை
செய்கின்ற தொழில் } அ விகுதி

உண்ணும் உணவு—உம் விகுதி

சென்ற, செய்கின்ற, உண்ணும் என்பன பெயரெச்சங்கள். இவற்றின் ஈற்றில் வந்துள்ள அ, உம் என்ற இரண்டும் பெயரெச்ச விகுதிகள்.

சிறிய தலை
இனிய மொழி } இவற்றில் சிறிய இனிய என்பன குறிப்புப் பெயரெச்சங்கள்.

இவற்றில் வந்த 'அ'—விகுதி குறிப்புப் பெயரெச்ச விகுதி எனப்படும்.

(2) வினையெச்சம்

கடந்து, ஆடி, போய், உண்கு, உண்ணு, உண்ணூ என்னும் வினையெச்சங்களின் ஈற்றில் வந்துள்ள உ, இ, ய், பு, ஆ, ஊ என்பன வினையெச்ச விகுதிகள்.

உண்டென, உண்ண, உண்ணின், உண்டால், உண்டக்கால், உண்டானேல், உணற்கு, உண்ணிய, உண்ணியர், ஓடுவான், கடப்பான், உண்பாக்கு, தின்றக்கடை, தின்ற

வழி, தின்றவிடத்து, உண்ணாமல், உண்ணாமை, உண்ணாமே—என்ற வினையெச்சங்களில் வந்த என, அ, இன், ஆல், கால், ஏல், கு, இய, இயர், வான், பான், பாக்கு, கடை, வழி, இடத்து, மல், மை, மே—என்பனவும் வினையெச்ச விகுதிகள் ஆகும்.

## (iii) இடைநிலை

பகுபதங்களில் பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் நிற்பது 'இடைநிலை' எனப்படும்.

(அது பெயரிடைநிலை, வினையிடைநிலை என இரண்டு வகைப்படும். பெயர்ச்சொல்லின் இடையில் வருவது பெயரிடைநிலை. வினைச்சொல்லின் இடையில் வருவது வினையிடைநிலை.)

1. பெயர் இடைநிலை

(உ - ம்)

அறி + ஞ் + அன்: அறிஞன் —ஞ்—பெயரிடை நிலை.
வலை + ஞ் + அன்; வலைஞன் —ஞ்—பெயரிடை நிலை
வலை + ச் + ச் + இ; வலைச்சி —ச்—பெயரிடை நிலை
வண்ணா + த் + த் + இ; வண்ணாத்தி-த்-பெயரிடை நிலை

2. வினை இடைநிலை

(வினை இடைநிலை மூவகைப்படும். அவை இறந்தகால இடைநிலை, நிகழ்கால இடைநிலை, எதிர்கால இடைநிலை என்பன.

### இறந்தகாலம்

(உ - ம்.)

செய் + த் + ஆன் ; செய்தான் —த்— இடைநிலை
உண் + ட் + ஆன் ; உண்டான் —ட்— இடைநிலை
தின் + ற் + ஆன் ; தின்றான் —ற்— இடைநிலை
பாடு + இன் + ஆன் ; பாடினான் —இன்— இடைநிலை

த்—ட்—ற்—இன் என்பன இறந்தகால இடைநிலைகள்.

இன் என்னும் இடைநிலை சில விடங்களில் னகரம் குறைந்தும், சிலவிடங்களில் இகரம் குறைந்தும் வரும்.

சொல் + இன் + அ + து = சொல்லினது
—இன்—இடைநிலை

சொல் + இ + அ + து = சொல்லியது
இ—இடைநிலை

போ + ன் + ஆன் = போனான்—ன்—இடைநிலை

## நிகழ்காலம்

நடவாநின்றான்—நட + ஆநின்று + ஆன்
நடக்கின்றான் —நட + கின்று + ஆன்
நடக்கிறான் —நட + கிறு + ஆன்

ஆநின்று, கின்று, கிறு என்பன நிகழ்கால இடைநிலைகள்

## எதிர்காலம்

நடப்பான்—நட + ப் + ஆன்
வாழ்வார்—வாழ் + வ் + ஆர்

ப்—வ் என்பன எதிர்கால இடைநிலைகள்

3. எதிர்மறை இடைநிலைகள்

| உடன்பாடு | எதிர்மறை | |
|---|---|---|
| (அவன்) நடந்தான் | —நடந்திலன்—இல் | இடைநிலை |
| (அவள்) செய்தாள் | —செய்திலள்—இல் | இடைநிலை |
| (அவர்) அழைப்பார் | —அழையார்—ஆ | இடைநிலை |
| (அது) நடக்கும் | —நடவாது —ஆ | இடைநிலை |
| (அவை) பறக்கும் | —பறவா —ஆ | இடைநிலை |
| (அவன்) உண்பன் | —உண்ணலன்—அல் | இடைநிலை |

(எதிர்மறைப் பொருளை உணர்த்திவரும் இல், ஆ, அல் என்பன எதிர்மறை இடைநிலைகள் எனப்படும்.)

### (iv) சாரியை

வீடு + இன் + ஐ = வீட்டினை —இன் சாரியை
அது + அன் + கு = அதற்கு —அன் சாரியை
மரம் + அத்து + ஐ = மரத்தை—அத்து சாரியை
செய் + த் + அன் + அன் = செய்தனன்— அன் சாரியை
தின் + ற் + அன் + அன் = தின்றனன்—அன் சாரியை

இங்கு வந்துள்ள இன், அன், அத்து என்பன சாரியைகள். இவை, பெயர்ச்சொற்களோடு வேற்றுமை உருபு முதலியன சேரும்போது வருவன. பகுபதங்களுள் இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையிலும் சாரியை வரும்.

### (v) சந்தி

படித்தான் = படி + த் + த் + ஆன்—த் சந்தி

இவ்வாறு பகுதிக்கும் இடைநிலைக்கும் இடையில் வருவது சந்தி எனப்படும். பகுதியையும் இடைநிலையையும் பொருந்தும்படி செய்வதால் இதற்குச் சந்தி எனப் பெயர் வந்தது.

### (vi) விகாரம்

கண்டான் = காண் + ட் + ஆன்; காண் என்ற பகுதி கண் என விகாரப்பட்டது.

வந்தான் = வா + த் (ந்) + த் + ஆன்; வா என்ற பகுதி வ எனக் குறுகி விகாரப்பட்டது. த்—என்ற சந்தி ந் என விகாரப்பட்டது.

இவ்வாறு பகுதி, சந்தி முதலியவை விகாரப்பட்டு வருதல் விகாரம் எனப்படும்.

## 4. வினைமுற்றுக்கள்

1. தன்மை வினைமுற்று

(யான்) செய்வல், செய்வன்,
செய்வென் செய்வேன்.

இவை நான்கும் செய்வேன் என்னும் ஒரு பொருள் உடையன. நான் செய்வேன் என்பதில் நான் என்னும் தன்மை ஒருமை எழுவாய்க்கு ஏற்பச் செய்வேன் என்னும் ஒருமை வினைமுற்று பயனிலையாக வந்துள்ளது.

இவ்வாறு தன்மை இடத்தையும் ஒருமை எண்ணையும் குறித்து வருவன தன்மை ஒருமை வினைமுற்றுக்கள் எனப்படும்.

(யாம்) வாழ்ந்தனம், வாழ்ந்தாம், வாழ்ந்தெனம், வாழ்ந்தேம், வாழ்ந்தோம்.

என்பன தன்மைப் பன்மை வினைமுற்றுக்கள். இவை ஐந்தும் வாழ்ந்தோம் என்னும் ஒரே பொருளைத் தருவன

இவ்வாறு தன்மை இடத்தையும் பன்மை எண்ணையும் குறித்து வருவன தன்மைப்பன்மை வினைமுற்றுக்கள் எனப்படும்.

2. முன்னிலை வினைமுற்று

(நீ) கண்டனை, கண்டாய், காணுதி

இவை மூன்றும் நீ என்னும் முன்னிலை ஒருமை எழுவாய்க்கு ஏற்ப வந்த பயனிலைகள்.

இவ்வாறு முன்னிலை இடத்தையும் ஒருமை எண்ணையும் குறித்துவரும் வினைமுற்று முன்னிலை ஒருமை வினைமுற்று எனப்படும்.

(நீவிர்) சென்றனிர், சென்றீர்

இவை இரண்டும் நீவிர் என்னும் முன்னிலைப் பன்மை எழுவாய்க்கு ஏற்ப வந்த பயனிலைகள்.

இவ்வாறு முன்னிலை இடத்தையும் பன்மை எண்ணையும் குறித்துவரும் வினைமுற்று முன்னிலைப் பன்மை வினைமுற்று எனப்படும்.

3 படர்க்கை வினைமுற்று

(அவன், அவள், அது) நடந்தனன், படித்தாள், ஓடிற்று.

(அவர், அவை) நடந்தனர், நடந்தன.

இவ்வாறு வரும் வினைமுற்று படர்க்கை வினைமுற்று எனப்படும். படர்க்கை வினைமுற்று ஐந்து பால்களும் வெளிப்படையாகப் புலப்பட வரும்.

4 ஏவல வினைமுற்று

(நீ) செல்வாய்—ஒருவனை ஏவுதல்

(நீர்) சென்மின்—பலரை ஏவுதல்

இவ்வாறு ஏவற்பொருளை உணர்த்தும் வினைமுற்று ஏவல் வினைமுற்று எனப்படும் ஏவல் வினைமுற்று எதிர காலம் ஒன்றற்கே உரியது

முன்னிலை, ஒருமை பன்மை என இருவகைப்படுவதால், ஏவலும் ஏவல் ஒருமை வினைமுற்று, ஏவற்பன்மை வினைமுற்று என இருவகைப்படும.

5 ஏவல் ஒருமை வினைமுற்று

(உ - ம்.) (நீ) செய்வாய், உண்பாய், வருவாய்

(நீ) செய்தி, உண்ணுதி, வருதி

(நீ) செய், உண், வா என்பனவும் ஏவல் ஒருமை வினைமுற்றுக்களே. அவற்றின் விகுதி ஆய் கெட்டு நிற்றலால், அவை விகுதி கெட்ட ஏவல் ஒருமை வினை முற்றுக்கள் எனப்படும்.

அவற்றைப் பகுபதங்களாகவே கொண்டு பகுதி விகுதி பிரித்து ஆய் விகுதி கெட்டதெனக் கொள்ளல் வேண்டும்.

6 ஏவற்பன்மை வினைமுற்று

(உ - ம்.) (நீர்) செய்மின், உண்மின்.

(நீர்) செய்யிர், உண்பிர்.

(நீர்) செய்வீர், உண்பீர்.

(நீர்) செய்யும், உண்ணும்.

## 5. ஏவல் வியங்கோள் வினைமுற்றுக்களின் வேறுபாடு

நீ உண் —ஏவல் ஒருமை வினைமுற்று
நீர் உண்மின்—ஏவற் பன்மை வினைமுற்று
வாழ்க, செய்க—வியங்கோள் வினைமுற்று

| ஏவல் | வியங்கோள் |
|---|---|
| 1. ஏவல் வினைமுற்று கட்டளைப் பொருளில் வரும் | 1. வியங்கோள் வினைமுற்று மரியாதையாக ஏவுதல், வாழ்த்தல், வைதல் முதலிய பொருள்களில் வரும். |
| 2. ஏவலில் ஒருமை பன்மை என்ற பகுப்பு உண்டு | 2. வியங்கோளில் ஒருமை பன்மை என்ற பகுப்பு இல்லை. இருதிணை ஐம்பாலுக்கும் பொதுவாக வரும். |
| 3. ஏவல் முன்னிலைக்கே உரியது. | 3. வியங்கோள் மூவிடங்களுக்கும் பொதுவானது. |

இவை இவ்விரண்டுக்கும் உள்ள வேறுபாடுகளாம்.

## 6. இடைச்சொல்

பெயர்ச்சொல்லும் ஆகாமல் வினைச்சொல்லும் ஆகாமல் அவற்றைச் சார்ந்து நின்று பொருள் தரும் சொல் இடைச்சொல் எனப்படும் என்றும், அஃது எட்டு வகைப் படும் என்றும் சென்ற வகுப்பில் படித்தீர்கள். ஏ, ஓ, உம், கொல் முதலிய இடைச்சொற்கள் பொருள்தரும் முறையும் கற்றீர்கள்.

இவ்வகுப்பில் நீங்கள் மன், மற்று, அம்ம, ஆங்கு, என, என்று என்னும் ஆறு இடைச்சொற்கள் பொருள்தரும் முறையைக் காண்பீர்கள்.

## 7. 'மன்' முதலிய இடைச்சொற்கள்

### (அ) மன் என்னும் இடைச்சொல்

(1) *அதுமன் கொண்கன் தேரே—*
*வேறு பொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலின்* **அசைநிலை.**

(2) *கூரியதோர் வாள் மன்—*
*இரும்பையும் துணித்தது என்னும் ஒழிந்த சொற்களைத் தருதலால்* **ஒழியிசை** *(இசை - சொல், ஒழியிசை - ஒழிந்த சொல்).*

(3) *பண்டு காடுமன்—*
*இப்போது நகராய்விட்டது என்னும் ஆக்கப் பொருள் தருதலின்* **ஆக்கம்.**

(4) *சிறியகள் பெறினே எமக்கீயு மன்னே—*
*இப்போது அவன் இறந்தமையால் எமக்கு ஈதல் கழிந்தது என்னும் பொருள் தருதலின்* **கழிவு**

(5) *எந்தை எமக்கருளுமன்—*
*மிகுதியும் அருள்வான் என்னும் பொருள் தருதலின்* **மிகுதி**

(6) *மன்னுயிர்—நிலைபெற்ற உயிர் என்னும் பொருள் தருதலின்* **நிலைபேறு.**

**மன்** என்னும் இடைச்சொல் இவ்வாறு **அசைநிலை, ஒழியிசை, ஆக்கம், கழிவு, மிகுதி, நிலைபேறு** என்னும் **ஆறு** பொருள்களில் வரும்.

**ந. சூ. 432 :** *மன்னே அசைநிலை ஒழியிசை ஆக்கம்*
*கழிவு மிகுதி நிலைபேறு ஆகும்."*

### (ஆ) மற்று என்னும் இடைச்சொல்

(1) *'மற்றறிவாம் நல்வினை யாம் இளையம் என்னாது'*
*நல்வினையினை விரைந்து அறிவாம் என்னும்*

வினைக்கு மாருக, விரையாது அறிவாம் என்னும் பொருளைத் தருதலின் **வினைமாற்று.**

(2) 'மற்றென்னை ஆள்க.'
வேறு பொருளின்றி நிற்றலின் **அசைநிலை.**

(3) 'இதுவிடுத்து மற்ரொன்று செய்.'
வேறு என்னும் பொருள் தருதலால்—**பிறிது.**

இவ்வாறு **மற்று** என்னும் இடைச்சொல், **வினைமாற்று, அசைநிலை, பிறிது** என்னும் பொருள்களில வரும்.

நன். சூ. 433 : "வினைமாற்று அசைநிலை பிறிதெனும் மற்றே."

## (இ) அம்ம என்னும் இடைச்சொல்

(1) 'அதுமற் றம்ம'
என்பது உரையசையாக வந்தது. வேறு பொருளின்றிப் பேச்சின்கண் வருவது.
—**உரையசை.**

(2) 'அம்ம வாழி தோழி'
இதில் அம்ம என்பது ஒன்று சொல்வேன் கேள் என்னும் ஏவற்பொருளைத் தந்து நிற்றலின் **ஏவல்.**

இங்ஙனம் அம்ம என்னும் இடைச்சொல், **உரையசை, ஏவல்** என்னும் இரண்டு பொருளில் வரும்.

நன். சூ. 438 : "அம்ம உரையசை கேண்மினென் ருகும்."

## (ஈ) ஆங்கு என்னும் இடைச்சொல்

(1) 'ஆங்கத் திறனல்ல யாங் கழற'
இதில், ஆங்கு என்பது வேறு பொருளின்றி அசைநிலையாக வந்தது—**அசைநிலை.**

(2) 'ஆங்காங் காயினு மாக'
இதில், ஆங்கு என்பது இடம் என்னும் பொருளைத் தந்தது ஆதலின்—**இடம்.**

இவ்வாறு 'ஆங்கு' என்னும் இடைச்சொல் அசை நிலைப்பொருளிலும், இடப்பொருளிலும் வரும்.

நன். சூ. 437: "அந்நிலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே."

## (உ) 'என' 'என்று' என்னும் இடைச்சொற்கள்

(1) 'கொள்ளெனக் கொண்டான்,'
'மைந்தன் பிறந்தான் எனத் தந்தை மகிழ்ந்தான்'
இவற்றில் என என்பது வினையோடு சேர்ந்து வந்து வினைப் பொருளைத் தந்தது.

(2) 'ஊரெனப்படுவது உறையூர்,'
'அழுக்காறு என ஒரு பாவி.'
இவற்றில் என—என்பது பெயரொடு சேர்ந்து வந்து பெயர்ப்பொருளைத் தந்தது.

(3) 'தலை விண்ணென இசைத்தது'
'இம் என ஒலிக்குமுன் ஓடிவா'
இவற்றில் என என்பது குறிப் புப் பொருள் தந்தது.

(4) 'ஒல் என ஒலித்தது'
'நிலை யருங் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து'
இவற்றில் என என் பது இசைப் பொரு ளில் வந்தது

(இசை என்பது ஒலி)

(5) 'நிலனென நீரெனத் தீயென வளியெனப் பூதம் நான்கு'
'சேரனெனச் சோழனெனப் பாண்டியன் என வேந்தர் மூவர்'
இவற்றுள்—என என்பது எண்ணுப் பொருளில் வந்தது.

(6) 'வெள்ளென விளர்த்தது'
'மெல்லென நடந்தது'
இவற்றுள் என என் பது பண்புப் பொரு ளில் வந்தது.

மேற்கண்ட எடுத்துக்காட்டுக்களில் "என" என்ற இடைச்சொல்லை எடுத்துவிட்டு 'என்று' என்னும் இடைச்சொல்லை அமைத்துக் கூறினும் அவ்வப் பொருளையே தரும்.

என, என்று—என்னும் இடைச் சொற்கள் இரண்டும் வினை, பெயர், குறிப்பு, இசை, எண், பண்பு என்னும் ஆறு பொருள்களில் வரும்.

நன். சூ 424 : "வினைபெயர் குறிப்பிசை யெண்பண் பாறினும்
என வெனும் மொழிவரும் என்றும் அற்றே."

## 8. உரிச்சொல்

(உரிச்சொல் என்பது தனித்து இயங்காமல் பெயர்ச் சொற்களையும் வினைச்சொற்களையும் சார்ந்து அவற்றின் குணங்களை உணர்த்திச் செய்யுட்கே உரியதாய் வரும்.) அது குணப்பண்பு, தொழிற்பண்பு என்னும் இரண்டினையும் உணர்த்தும். பெயரைத் தழுவிவருவது பெயர் உரிச்சொல் எனவும், வினையைத தழுவி வருவது வினையுரிச்சொல் எனவும் கூறப்படும்.

## 9. கெழு, மல்லல் உரிச்சொற்கள்

1. கெழு என்னும் உரிச்சொல்

(1) 'கேழ்கிளர் அகலம்' (நிறம் பொருந்திய மார்பு) கெழு—என்பது கேழ் என விகாரப்பட்டது. இங்குக் கேழ் என்பது நிறப்பண்பை உணர்த்திய உரிச்சொல்.

(2) 'வளங்கெழுநகரம்'—மிகுதி என்னும் பொருளில் வந்தது.

2. மல்லல் என்னும் உரிச்சொல்

(1) 'மல்லன்மா ஞாலம்'—மல்லல் என்பது வளம் என்னும் பொருளினைத் தந்தது.

(2) 'மல்லலந் தோள்'—மல்லல் என்பது வலிமை என்னும் பண்பினை உணர்த்தியது.

# III. பொது

## 1. வெளிப்படையும் குறிப்பும்

சொற்கள் வெளிப்படையினாலும் குறிப்பினாலும் பொருளை விளக்கும்.

### வெளிப்படை

நிலம், நீர், தீ, உண்டான், நடந்தான்—

இவை வெளிப்படையாய்ப் பொருள் உணர்த்தின.

### குறிப்பு

உலகம் சிரிக்கிறது:

உலகம் சிரிக்கவில்லை; உலகத்திலுள்ள மக்கள் சிரிக்கிறார்கள் என்பது பொருள்.

இதுபோல்வன வெளிப்படையாய்ப் பொருள் உணர்த்தாது குறிப்பால் பொருள் உணர்த்துவன ஆகும்.

குறிப்பினால் பொருள் தரும் சொற்கள் : ஒன்றொழி பொதுச்சொல், விகாரம், தகுதி, ஆகுபெயர், அன்மொழி, குறிப்புவினைச் சொல், முதற் குறிப்பு, தொகைக் குறிப்பு, பிற குறிப்பு எனப் பலவகைப்படும்.

**ஒன்றொழி பொதுச்சொல்** :—"ஆயிர மக்கள் பொருதார்"—மக்கள் என்னும் பொதுப்பெயரும், பொருதார் என்னும் பொதுவினையும் குறிப்பினால் உயர்திணையுள் பெண்பாலை ஒழித்து ஆண்பாலை உணர்த்தின.

**விகாரம்** :—விகாரம் என்பது வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல் முதலிய ஒன்பது வகைப்படும், அவை செய்யுளில் வரும். அத்தகைய விகாரங்கள் குறிப்பால் பொருள் உணர்த்தும் முறை இங்குக் கூறப்படுகிறது.

(உ - ம்.) குறுத்தாட பூதம் :
குறுந்தாள் என்பதைக் குறிப்பால் உணர்த்திற்று. (குறுந்தாள்—குறுத்தாள்—வலித்தல் விகாரம்)
தகுதி :—தகுதி வழக்கு என்பது இடக்க ரடக்கல், மங்கலம், குழூஉக் குறி என மூவகைப்படும்.

(உ - ம்.) கால்கழீஇ வருதும் :
கால் கழீஇ என்பது மலங் கழுவி என்பதைக் குறிப்பால் உணர்த்தியது - இடக்கர் அடக்கல்.

(உ - ம்) திருமுகம் கொண்டு வந்தான் :
திருமுகம் என்பது ஓலை என்பதைக் குறிப்பால் உணர்த்தியது—மங்கலம்.

(உ - ம்.) உன்னிடம் எவ்வளவு பறி இருக்கிறது :
பறி என்பது பொன் என்பதைக் குறிப்பால் உணர்த்தியது—குழூஉக் குறி.

ஆகுபெயர் :—
(உ - ம்.) கார் அறுத்தான் :
கார் என்பது அக்காலத்தில் விளையும் நெல்லைக் குறிப்பால் உணர்த்தியது—ஆகுபெயர்.

அன்மொழித்தொகை :—
(உ - ம்.) பொற்றொடி வந்தாள் :
பொற்றொடி என்பது பொன்னாலாகியதொடியை அணிந்த பெண் என்பதைக் குறிப்பால் உணர்த்தியது—அன்மொழித் தொகை.

குறிப்பு வினை :—
(உ - ம்.) இவன் பொன்னன் :
பொன்னன் என்பது பொன் உடையவனாய் இருக்கிறான் என்பதைக் குறிப்பால் உணர்த்தியது—குறிப்பு வினைமுற்று.

முதற்குறிப்பு :—

(உ - ம்.) '**கோடையிலே**' என்பது பாடினான். இது 'கோடையிலே இளைப்பாற்றிக்கொள்ளும்' என்று தொடங்கும் அருட்பாவின் பாடலைக் குறிப்பால் உணர்த்தியது.

'**கொன்றை வேய்ந்த**' படித்தான்— 'கொன்றை வேய்ந்த' என்று தொடங்கும் நூலினைக் குறிப்பால் உணர்த்தியது—இவை முதற் குறிப்புச் சொற்கள்.

**தொகைக் குறிப்பு** :—

(உ - ம்.) '**மூவேந்தரும் வந்தனர்**'—மூவேந்தர் என்பது சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவரையும் குறிப்பால உணர்த்தியது—தொகைக் குறிப்பு.

**பிற குறிப்பு** :—

(உ - ம்.) (அறிவில்லாத ஒருவனைப் பார்த்து) 'உன்னைப் போன்ற அறிவாளி உலகத்தில் இல்லை!—இங்கு, அறிவாளி என்பது அறிவில்லாதவன் என்பதைக் குறிப்பால் உணர்த்தியது.

மேற்கூறப்படாத வேறு வழியால் குறிப்புப் பொருள் தருவது பிற குறிப்பு எனப்படும்.

நன். சூ 269 : ஒன்றொழி பொதுச்சொல் விகாரம் தகுதி
ஆகு பெயரன் மொழிவினைக் குறிப்பே
முதல்தொகை குறிப்போ டின்ன பிறவும்
குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை.''

## 2. மரபு

எந்தப் பொருளை எந்தச் சொல்லாலும், வகையாலும் சான்றோர் வழங்கினார்களோ அவ்வாறே அந்தப் பொருளை அச்சொல்லாலும் வகையாலும் வழங்குவது மரபு எனப்படும்.

யானைக்கன்று, யானைக்குட்டி, குதிரைக்குட்டி, பசுவின் கன்று, மான்கன்று, யானைப்பாகன், ஆட்டிடையன், தென்னம்பிள்ளை, வாழைக்கன்று—இவை சான்றோர் முற்காலந்தொட்டுக் கூறிவரும் வழக்காதலின் இது மரபு எனப்படும்.

**அடிசில்** என்பது உணவு. அஃது உண்பன, தின்பன, நக்குவன, குடிப்பனவற்றிற்கெல்லாம் பொதுவான சொல்; ஆதலால் அடிசில் அயின்றார், மிசைந்தார் என்று பொதுவினையாற் கூறுதல் வேண்டும். அதுவே மரபு ஆகும்.

**அணி** என்பது நகை. அது கவிப்பன, கட்டுவன, இடுவன, தொடுவனவற்றிற்கெல்லாம் பொதுவான சொல்; ஆதலால், அதனை அணிந்தார், தாங்கினார் என்னும் பொதுவினையாற் கூறுதல் மரபு ஆகும்.

**இயம்** என்பது இசைக்கருவி. அஃது கொட்டுவன, ஊதுவனவற்றிற்கெல்லாம் பொதுவான சொல்; ஆதலால் அதனை, இயம்பினார், படுத்தார், முழக்கினார் என்னும் பொதுவினையாற் கூறுதல் மரபு ஆகும்.

**படை** என்பது போர்க்கருவி. அது எய்வன, எறிவன. வெட்டுவன, குத்துவனவற்றிற்கெல்லாம் பொதுவான சொல்; ஆதலால் அதனை வழங்கினார், தொட்டார் என்னும் பொதுவினையாற் கூறுதலே மரபு ஆகும்.

ந. சூ 388: "எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே"

ந. சூ 389:

"வேறுவினைப் பல்பொருள் தழுவிய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்."

## 3. வழுவமைதிகள்

**வழாநிலை**

| | | |
|---|---|---|
| அவன் | வந்தான் | இங்கு **அவன்** என்னும் உயர் திணை ஆண்பால் பெயர் எழுவாயாக வந்தது. அதற்கேற்ப **வந்தான்** என்னும் உயர்திணை ஆண்பால் வினைமுற்றே பயனிலையாக வந்தது. இவ்வாறு திணையும், பாலும் மாறாது அமையும்படி வாக்கியங்களை அமைப்பது **வழாநிலை** எனப்படும். |
| அவள் | வந்தாள் | |
| அவர் | வந்தார் | |
| அது | வந்தது | |
| அவை | வந்தன | |

(வழாநிலை - குற்றம் இல்லாத நிலை)

இவ்வாறன்றி, அவன் வந்தது : மாடு வந்தான்—என்பனபோல உயர்திணை எழுவாய்க்கு அஃறிணைப் பயனிலையும் அஃறிணை எழுவாய்க்கு உயர்திணைப் பயனிலையும் அமையும்படி எழுதுவது திணைவழு எனப்படும் (வழு—குற்றம்).

(உ - ம்.)

| வழாநிலை | வழு | |
|---|---|---|
| அவன் வந்தான் | அவன் வந்தது<br>அது வந்தான் | திணை |
| அவள் வந்தாள் | அவள் வந்தான்<br>அவன் வந்தாள் | பால் |
| நான் செய்தேன் | நான் செய்தான்<br>அவன் செய்தேன்<br>நீ செய்தேன் | இடம் |
| நேற்று வந்தார் | நேற்று வருவார்<br>நாளை வந்தார் | காலம் |
| ஆட்டுக்குட்டி<br>பசுவின் கன்று<br>பனை ஓலை<br>வாழை இலை | ஆட்டுப்பிள்ளை<br>பசுவின் குட்டி<br>பனை இலை<br>வாழையோலை | மரபு |

திணை, பால், இடம், காலம், மரபு இவை மாறுபடாமல் சொற்கள் அமைந்து பொருள் விளக்குவது வழாநிலை எனப் படும். மாறுபட்ட சொற்கள் அமைந்தால் வழு எனப்படும். மாறுபட்ட சொற்கள் அமைந்து வழுவாயிருப்பினும் இவ் விடத்தில் இவ்வாறு வருவது அமையும் என ஆன்றோர் களால் வழங்கப்பட்டது வழுவமைதியாம்.

**1. திணைவழுவமைதி :**

'என் அன்னை வருகிறாள்' என ஒரு வீட்டின் தலைவி தன் பசுவைப் பார்த்து உவகையாகக் கூறும் போது பசு என்னும் அஃறிணைப் பொருள் உயர்திணை யாகக் கூறப்படுகின்றது. இது திணைவழு ஆயினும், பெரியோர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு அமைந் திருக்கின்றது. ஆதலின் இது **திணைவழுவமைதியாம்**

**2. பால்வழுவமைதி :**

'அரசனே எங்கள் தாய்' என்று குடிகள் தங்கள் அரசனைப் பற்றி உயர்வாகக் கூறும்போது அரசன் என்னும் ஆண்பால் பெண்பாலாகக் கூறப்படுகின் றது. இது **பால்வழுவமைதியாம்.**

'அவர் வந்தார்' என்று ஒருவனைக் கண்டு உயர் வாகக் கூறுவதால் இதுவும் பால் வழுவமைதியாம்.

**நன். சூ. 379 :**

"உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் பால்திணை யிழுக்கினும் இயல்பே."

**3. இடவழுவமைதி :**

'உன் நண்பன் உன்னை ஏமாற்றுவேனோ' என்று ஒருவன் தன்னைப்பற்றியே தன் நண்பனிடம் கூறும் போது, நண்பன் என்னும் படர்க்கைச் சொல் தன்மை வினைக்கு எழுவாயாக அமைந்துள்ளது; இஃது **இட வழுவமைதியாம்.**

**நன். சூ. 380 :**

ஒருமையிற் பன்மையும் பன்மையின் ஒருமையும்
ஓரிடம் பிறஇடம் தழுவலும் உளவே."

**4. காலவழுவமைதி :**

ஒருவன் வீட்டினுள் உணவு உண்டுகொண்டிருக்கும்பொழுது தன்னை அழைத்துச்செல்ல வந்த நண்பனிடம், 'உண்டேன், வந்துவிட்டேன்' என்று கூறுகின்றான். (உண்கின்றேன் என்னும்) நிகழ்காலமும், (வருவேன் என்னும்) எதிர்காலமும், (உண்டேன், வந்துவிட்டேன் என) இறந்த காலமாகக் கூறப்படுகின்றன. இவை விரைவின்கண் கூறப்படுவதால் **காலவழுவமைதி**யாம்.

**நன். சூ. 384:**

> "விரைவினும் மிகவினும் தெளிவினும் இயல்பினும்
> பிறழவும் பெறூஉம் முக்காலமும் ஏற்புழி."

**5. மரபுவழுவமைதி :**

'இப்பாட்டு யான் கொண்டது,' 'இவ்வெழுத்தாணி யான் எழுதியது,' என்று சொல்லப்பட்டது, என்னால் எழுதப்பட்டது' என வருவதுதான் மரபு. இவை ஆன்றோரால் அமைப்பு எனக் கொள்ளப்பட்டதால் **மரபுவழுவமைதி**யாம்.

**திணை**, பால், இடம், காலம், மரபு என்னும் இவ்வழுக்கள் ஆன்றோரால் அமைக்கப்படுதல் முறையே **திணைவழுவமைதி, பால்வழுவமைதி, இடவழுவமைதி, காலவழுவமைதி, மரபுவழுவமைதி,** எனக் கூறப்படும்.

**நன். சூ. 400 :**

> "செயப்படு பொருளைச் செய்தது போலத்
> தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே."

## 4. ஒருபொருட் பன்மொழி

**(உ - ம்.)** 1. மீமிசை ஞாயிறு—இதில் மீ என்பதும் மிசை என்பதும் மேல் என்னும் ஒரே பொருளைத் தருவன.

2. நாகிளங் கமுகு—நாகு என்பதும் இளம் என்பதும் இளமை என்னும் ஒரே பொருளைத் தருவன.

3. மாபெரும்புகழ்—மா என்பதும் பெரும் என்பதும் பெருமை என்னும் ஒரே பொருளைத் தருவன.

4. உயர்ந்தோங்கிய மலை—உயர்ந்து என்பதும் ஓங்கிய என்பதும் உயர்ந்த என்னும் ஒரே பொருளைத் தருவன.

5. தாழ்ந்தாழ்ந்த கிணறு—தாழ்ந்து என்பதும் ஆழ்ந்த என்பதும் ஆழமான என்னும் ஒரே பொருளைத் தருவன.

இவ்வாறு ஒரே பொருளுடைய பல சொற்கள் தம்முள் தொடர்ந்து சொல்லப்படும் தோன்ற நிற்றலும் உண்டு. அஃது ஒரு பொருட் பன்மொழி எனக் கூறப்படும். அது மரபு வழுவமைதி எனக் கொள்ளப்படும்.

நன். சூ 439: "ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா."

## 5. இரட்டைக்கிளவி—அடுக்குத்தொடர்

### (i) இரட்டைக்கிளவி

(உ - ம்.) மழை சலசல எனப் பொழிந்தது.
குழந்தை குறுகுறு என நடந்தது.
மரம் மடமட என முறிந்தது.
அவன் கலகல எனப் பேசினான்.

சலசல, குறுகுறு, மடமட, கலகல என்பனபோன்று சேர்ந்து வரும் இரட்டைச் சொற்கள் இரட்டைக் கிளவி எனப்படும். (கிளவி - சொல்) இவை தனித்துப் பிரிக்க முடியாதவை பிரித்தால் பொருள் தரா.

### (ii) அடுக்குத்தொடர்

(உ - ம்.) அன்றே அன்றே—அசைநிலை
இருமுறை யடுக்கியது.

வருக, வருக —பொருணிலை
வாழ்க, வாழ்க, வாழ்க—பொருணிலை } இருமுறையும் மும்முறையும் அடுக்கியது.

ஏஏ இவளொருத்தி
நல்குமே நல்குமே நல்குமே நாமகள்—
பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ } இசைநிறை

இருமுறையும், மும்முறையும், நான்குமுறையும் அடுக்கியது.

இங்ஙனம் ஒரு சொல் பலமுறை அடுக்கி வருதல் அடுக்குத்தொடர் எனப்படும்.

அடுக்குத்தொடர் அசைநிலை, பொருள்நிலை, இசைநிறை என மூன்று வகைப்படும். அசைநிலையில் ஒருசொல் இரண்டு முறையே அடுக்கிவரும். பொருள்நிலையாகிய விரைவு, வெகுளி, உவகை, அச்சம், அவலம் என்பவற்றில் ஒரு சொல் இரண்டு முறையும் மூன்று முறையும் அடுக்கி வரும். இசைநிறையில், இரண்டு, மூன்று, நான்கு என்னும் எல்லைவரையிலும் அடுக்கிவரும்.

### (iii) இரட்டைக் கிளவிக்கும் அடுக்குத் தொடருக்கும் உள்ள வேறுபாடு

**இரட்டைக்கிளவி :** இரண்டு சொற்களும் சேர்ந்தே நிற்கும்; இரண்டுக்குமேல் சேர்ந்து வராது; தனித் தனியே பிரித்தால் பொருள் தராது; இது ஒலிக் குறிப்பு முதலியவற்றை உணர்த்தி வரும் இடைச் சொல்லாம்.

**அடுக்குத்தொடர் :** ஒருசொல் இரண்டு, மூன்று, நான்குமுறை அடுக்கிவரும். தனித்தனியே பிரித்தால் அச்சொல் பொருள் தரும். பெயர், வினை, இடை, உரி என்ற நான்கு சொற்களும் அடுக்கி வரும்.

## 6. இனங் குறித்தல்

வெற்றிலை சுவைத்தான். சோறு உண்டான்—எனக் கூறின் வெற்றிலையோடு பாக்கு, சுண்ணம் முதலியவற்றையும் சுவைத்தான் எனவும், சோற்றுடன், கறி முதலியவற்றையும உண்டான் எனவும் அறிகின்றோம். இவ்வாறு சோறு என்னும பெயர்ச்சொல் கறி முதலிய தன் இனங்களையும், உண்டான் என்னும் வினைச்சொல் தின்றான் முதலிய இனங்களையும், வெற்றிலை என்னும் பெயர்ச்சொல் மற்ற பாக்கு சுண்ணம் முதலியவற்றையும குறித்துக் கொள்ளுமாறு நின்றன.

நஞ்சு உண்டவன் சாவான் என்றால் நஞ்சு உண்டவள் சாவாள்; நஞ்சு உண்டவர் சாவார், நஞ்சு உண்டது சாம், நஞ்சு உண்டவை சாம் என்பனவும், கூறாமலே அமையும்.

உண்டவன்—என்ற ஆண்பாற்பெயரும், சாவான்—என்ற ஆண்பால் வினையும் மற்ற நான்கு பால் பெயர் வினைகளைக் கொள்ளுதற்கு உரியவாறு நின்றன. இவ்வாறு கூறுதல்—இனங்குறித்தல் எனப்படும்.

# IV. புணர்ச்சி

## 1. பண்புத்தொகைப் புணர்ச்சி

1. வெண்மை + மலர் = வெண்மலர்: வெண்மை என்னும் பண்புப்பெயரில் உள்ள மை விகுதி கெட்டது. (ஈறுபோதல்)

2. பெருமை + அன் = பெரியன்; பெருமை என்னும் பண்புப்பெயரின் மைவிகுதி கெட்டு இடையில் (ரு-என்பதில்) உள்ள உகரம் இகரமாகத் திரிந்தது. (இடை உகரம் இ ஆதல்)

3. பசுமை + இலை = பாசிலை; பசுமை என்னும் பண்புப் பெயரின் மை விகுதி கெட்டு முதலில் நின்ற (ப-என்பதில் உள்ள) அகரம் ஆகாரமாக நீண்டது. (ஆதி நீடல்)

4. பசுமை + தார் = பைந்தார். பசுமை என்னும் பண்புப் பெயரின் ஈற்றில் உள்ள மை விகுதி கெட்டு, பசு என நின்றது, முதலில் உள்ள (ப-என்பதில் உள்ள) அகரம் ஐகாரமாகத் திரிந்தது, இடையில் நின்ற சு என்னும் உயிர் மெய்யும் கெட்டு வருமொழிக்கேற்ப ந்— என்னும் இன எழுத்து மிகுந்து பைந்தார் எனப் புணர்ந்தது (அடி அகரம் ஐ ஆதல்)

5. சிறுமை + ஊர் = சிற்றூர்; சிறுமை என்னும் பண்புப் பெயரின் ஈற்று மை விகுதி கெட்டு, இடையில நின்ற (று-என்பதில் உள்ள) றகர மெய் இரட்டித்து உகரங்கெட்டு வருமொழி யுயிர் றகரமெய்யின்மேல் ஏறி முடிந்தது. (தன்னொற்றிரட்டல்)

6. செம்மை + ஆ = சேதா; செம்மை + ஆம்பல் = சேதாம்பல்; செம்மை என்னும் பண்புப் பெயரின் ஈற்று மை விகுதி கெட்டுச் 'செம்' என நின்றது. ஆதிநீடல் என்ற விதிப்படி முதல் எழுத்து 'சே' என நீண்டது. இடையில் நின்ற மகரமெய் தகரமெய்யாகத் திரிந்தது. (முன்நின்ற மெய் திரிதல்)

7. கருமை + கோழி = கருங்கோழி; கருமை என்பதில் உள்ள மை விகுதி கெட்டு, வருமொழி முதலில் உள்ள ககரமெய்க்கு இனமான ஙகர மெய் மிகுந்து புணர்ந்தது (இனமிகல்)

பண்புப் பெயர்கள் ஈற்றில் உள்ள மை விகுதிகெட்டும், இடையில் உள்ள உகரம் இகரமாகியும், முதல் நீண்டும் முதலில் உள்ள அகரம் ஐகாரமாகியும், ஒற்று இரட்டித்தும், மெய்திரிந்தும், இனம் மிகுந்தும் வருமொழியோடு புணரும்.

நன். சூ. 136: " ஈறு போதல் இடையுகரம் இய்யாதல்
ஆதி நீடல் அடியகரம் ஐயாதல்
தன்னொற் றிரட்டல் முன்நின்ற மெய்திரிதல்
இனமிகல் இனையவும் பண்பிற் கியல்பே.

## 2. உயிர் ஈறு மெய் ஈறு—பொது விதி

மொழியின் இறுதியில் வரும் எழுத்துக்கள் இருபத்து நான்கு. அவை உயிர் பன்னிரண்டும், ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும் பதினொரு மெய்களும், குற்றியலுகரமும் ஆகும். உயிரெழுத்துக்களை ஈற்றில் உடைய நிலைமொழிக்கு முன் வருமொழி வந்து புணர்வது **உயிரீற்றுப் புணர்ச்சி** எனப்படும். மெய்யீற்று மொழிமுன் வருமொழி வந்து புணர்வது **மெய்யீற்றுப் புணர்ச்சி** எனப்படும். சொற்களுக்குப் பொருள் காணும்போது நிலைமொழி வருமொழி களுக்கு இடையில் வேற்றுமை உருபு வருமாயின் அது **வேற்றுமைப் புணர்ச்சி** எனவும், மற்றவை **அல்வழிப்புணர்ச்சி** எனவும் கொள்ளப்படும்.

அல்வழி

| | | | |
|---|---|---|---|
| (1) | விள + ஞான்றது | = | விள ஞான்றது |
| | விள + நீண்டது | = | விள நீண்டது |
| | விள + மாண்டது | = | விள மாண்டது |
| | விள + யாது | = | விள யாது |
| | விள + வலிது | = | விள வலிது |

வேற்றுமை

| | | |
|---|---|---|
| விள + ஞாற்சி | = | விள ஞாற்சி |
| விள + நீட்சி | = | விள நீட்சி |
| விள + மாட்சி | = | விள மாட்சி |
| விள + யாப்பு | = | விள யாப்பு |
| விள + வன்மை | = | விள வன்மை |

| | அல்வழி | | வேற்றுமை |
|---|---|---|---|
| (2) | உரிஞ் + | ஞான்றது | உரிஞ் + ஞாற்சி |
| | உரிஞ் + | நீண்டது | உரிஞ் + நீட்சி |
| | உரிஞ் + | மாண்டது | உரிஞ் + மாட்சி |
| | உரிஞ் + | யாது | உரிஞ் + யாப்பு |
| | உரிஞ் + | வலிது | உரிஞ் + வன்மை |

இவ்வாறு விள, பலா, புளி, தீ, கடு, பூ, சே, பனை, கோ, கௌ முதலிய உயிரீற்று மொழிகளுக்கு முன்னும்,

உரிஞ், மண், பொருந், மரம, பொன், வேய், வேர், வேல், தெவ், யாழ், வாள் முதலிய மெய்யீறறு மொழி களுக்கு முனனும் எஃகு முதலிய குற்றியலுகரத்துக்கு முன்னும ஞ, ந, ம, ய, வ என்னும் மெல்லின இடையின எழுத்துக்களை முதலில் உடைய வருமொழிகள் வந்து புணரும்போது இயல்பாகும்.

அல்வழி

(3) மெய் + ஞான்றது = மெய்ஞ்ஞான்றது
மெய் + நீண்டது = மெய்ந்நீண்டது

| | | |
|---|---|---|
| மெய் + மாண்டது | = | மெய்ம்மாண்டது |
| கை + ஞான்றது | = | கைஞ்ஞான்றது |
| கை + நீண்டது | = | கைந்நீண்டது |
| கை + மாண்டது | = | கைம்மாண்டது |

**வேற்றுமை**

| | | |
|---|---|---|
| மெய் + ஞாற்சி | = | மெய்ஞ்ஞாற்சி |
| மெய் + நீட்சி | = | மெய்ந்நீட்சி |
| மெய் + மாட்சி | = | மெய்ம்மாட்சி |
| கை + ஞாற்சி | = | கைஞ்ஞாற்சி |
| கை + நீட்சி | = | கைந்நீட்சி |
| கை + மாட்சி | = | கைம்மாட்சி |

மெய்—என்பது குற்றெழுத்தைச் சார்ந்த யகரமெய் யுடைய மொழி. கை எனபது தனி ஐகாரம். இவ்வாறு தனிக் குறறெழுத்தைச் சார்ந்த யகரமெய் முனனும், தனியே வரும் ஐகார விறறு மொழி முன்னும் வருமொழி முதலில் வநத மெல்லினம் அல்வழி வேறறுமை எனனும் இருவழியிலும் மிகுந்து வந்தன.

| | | | |
|---|---|---|---|
| (4) | நொ + ஞெள்ளா | = | நொஞ்ஞெள்ளா |
| | நொ + நாகா | = | நொந்நாகா |
| | நொ + மாடா | = | நொம்மாடா |
| | நொ + யவனு | = | நொய்யவனு |
| | நொ + வளவா | = | நொவ்வளவா |
| | து + ஞெள்ளா | = | துஞ்ஞெள்ளா |
| | து + நாகா | = | துந்நாகா |
| | து + மாடா | = | தும்மாடா |
| | து + யவனு | = | துய்யவனு |
| | து + வளவா | = | துவ்வளவா |

(நொ—துன்பப்படு; து—உண்)

நொ—என்னும் சொல்லும், து—என்னும் சொல்லும் நிலைமொழியாக நினறபோது வருமொழி முதலில் வந்த மெல்லெழுத்துக்களும் இடையெழுத்துக்களும் மிகுந்தன.

ணா, து என்பன வினைச் சொற்கள் ஆதலால் இவை அல்வழிப் புணர்ச்சியில் மட்டும் வரும்.

அல்வழி

(5) மண் + நீண்டது = மண்ணீண்டது
முள் + நீண்டது = முண்ணீண்டது
பொன் + நீண்டது = பொன்னீண்டது
கல் + நீண்டது = கன்னீண்டது

வேற்றுமை

மண் + நீட்சி = மண்ணீட்சி
முள் + நீட்சி = முண்ணீட்சி
பொன் + நீட்சி = பொன்னீட்சி
கல் + நீட்சி = கன்னீட்சி

ண், ள், ன், ல்—என்னும் மெய்களை ஈற்றில் உடைய நிலைமொழிகளுக்கு முன் வருமொழி முதலில் வந்த நகர மெய்யெழுத்துத் திரிந்தது.

நன். சூ. 158:

"எண்மூ வெழுத்திற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரும் ஞநமய வக்கள் இயல்பும்
குறில்வழி யத்தனி ஐந்நொது முன்மெலி
மிகலுமாம் ணளனல வழிநத் திரியும்."

## 3. வினாச்சுட்டின்முன் நாற்கணமும் புணர்தல்

உயிர்க்கணம், வன்கணம், மென்கணம், இடைக்கணம் என்னும் நான்கும் நாற்கணம் எனப்படும்.

அ + அணில் = அவ்வணில்
இ + அழகு = இவ்வழகு
உ + எருது = உவ்வெருது
எ + அரண் = எவ்வரண்

அ, இ, உ என்னும் மூன்று சுட்டெழுத்துக்களும் எ என்னும் வினாவெழுத்தும் நிலைமொழியாக நின்ற

போது வருமொழி முதலில் உயிரெழுத்து வர இடையில் வகரமெய் தோன்றியது.

அ + யானை = அவ்யானை
இ + யாறு = இவ்யாறு
உ + யாடு = உவ்யாடு
எ + யாக்கை = எவ்யாக்கை

சுட்டு வினாக்களின் முன் யகர முதன்மொழி வந்த போது இடையில் வகரமெய் தோன்றியது.

அ + கடல் = அக்கடல்
இ + சிறுவன் = இச்சிறுவன்
உ + தலைவன் = உத்தலைவன்
எ + பலகை = எப்பலகை

சுட்டு வினாக்களின் முன் வருமொழி முதலில் வல்லினம் வந்தபோது வந்த வல்லினமே இடையில் மிகுந்தது.

அ + ஞமலி = அஞ்ஞமலி (ஞமலி—நாய்)
இ + நண்டு = இந்நண்டு
உ + மரம் = உம்மரம்
எ + ஙனம் = எங்ஙனம்

சுட்டு வினாக்களின் முன் வருமொழி முதலில் வந்த மெல்லினம் மிகுந்தது.

அ + வண்டி = அவ்வண்டி
இ + வாழை = இவ்வாழை
உ + வீழ்ச்சி = உவ்வீழ்ச்சி
எ + வீடு = எவ்வீடு

சுட்டு வினாக்களின்முன் வருமொழி முதலில் வகரமெய் வந்தபோது இடையில் வகரமெய் மிக்கது.

அ + இடை = ஆயிடை. இங்கு அ என்னும் சுட்டெழுத்து நீண்டு ஆ என நின்றது. அவ்வாறு சுட்டு

நீண்டு நின்றபோது வருமொழி முதலில் உயிர்வரின் இடையில் யகரமெய் தோன்றும்.

நன். சூ. 163 : " எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமும் எய்தின் வவ்வும்
பிறவரின் அவையும் தூக்கிற் சுட்டு
நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே."

## 4. வேற்றுமை அல்வழிப் புணர்ச்சிகள்

### வேற்றுமைப் புணர்ச்சி

| தொகை | உருபு | |
|---|---|---|
| நீர் குடித்தான் | (ஐ) | (2-ஆம் வேற்றுமை) |
| வாளை எறிந்தான் | (ஆல்) | (3-ஆம் வேற்றுமை) |
| மன்னன் மைந்தன் | (கு) | (4-ஆம் வேற்றுமை) |
| ஊர் நீங்கினான் | (இன்) | (5-ஆம் வேற்றுமை) |
| கண்ணன் புத்தகம் | (அது) | (6-ஆம் வேற்றுமை) |
| மரம் ஏறினான் | (கண்) | (7-ஆம் வேற்றுமை) |

மேலே கண்ட நீர் குடித்தான் முதலிய சொற்களின் இடையில் ஐ முதலிய வேற்றுமை உருபுகள் மறைந்து நிற்கின்றன. இவ்வாறு வேற்றுமை உருபு சொற்களின் இடையில் மறைந்து நிற்கச் சொற்கள் புணர்வது வேற்றுமைப் புணர்ச்சி எனப்படும்.

### அல்வழிப் புணர்ச்சி

1. கொல்+யானை = கொல்யானை வினைத்தொகை: இது கொன்ற யானை, கொல்கின்ற யானை, கொல்லும் யானை என மூன்று காலத்துக்கும் ஏற்ப விரியும்.

2. வெண்மை+திங்கள் = வெண்டிங்கள். பண்புத்தொகை: இது வெண்மையாகிய திங்கள் என விரியும்.

பனை + மரம் = பனைமரம்: இருபெயரொட்டுப் பண்புத்தொகை. பனையாகிய மரம் என விரியும்.

3. மதி + முகம் = மதிமுகம்: உவமைத்தொகை. மதி போன்ற முகம் என விரியும்.

4. வெற்றிலை + பாக்கு = வெற்றிலைபாக்கு: உம்மைத் தொகை. வெற்றிலையும் பாக்கும் என விரியும்.

5. கருமை + குழல் (வந்தாள்) = கருங்குழல் வந்தாள்: அன்மொழித்தொகை கருமையாகிய குழலை யுடைய பெண் வந்தாள் என விரியும்.

இவை ஐந்தும் தொகை நிலைத்தொடர் எனப்படும்.

1. கண்ணன் வந்தான்—எழுவாய்த்தொடர்.
2. பொன்னு! வா —விளித்தொடர்.
3. வந்த மனிதன் / பெரிய மன்னன் } —பெயரெச்சத்தொடர்
4. வந்து சென்றான் / மெல்லப் பேசினான் } —வினையெச்சத் தொடர்.
5. சென்றான் கண்ணன்—தெரிநிலை வினைமுற்றுத்தொடர்.
6. குழையன் மன்னன்—குறிப்பு வினைமுற்றுத்தொடர்.
7. மற்றொன்று—இடைச்சொல் தொடர்.
8. தடக்கை —உரிச்சொல் தொடர்.
9. வருக வருக—அடுக்குத்தொடர்.

இவை ஒன்பதும தொகாநிலைத் தொடர் எனப்படும். இவற்றுள் கண்ணன் வந்தான் எனபதில் கண்ணன் என்பது எழுவாய். அச்சொல்லுடன் வந்தான் என்னும் சொல் புணர்ந்தது. ஆதலால் இஃது எழுவாய்த்தொடர் எனபபட்டது. இவ்வாறே விளிச்சொல்லுடன் பிற சொல் தொடர்வது விளித்தொடர் எனப்பட்டது. பிறவும இவ்வாறு காணவேண்டும.

தொகைநிலைத் தொடர் ஐந்தும், தொகாநிலைத் தொடர் ஒன்பதும் ஆகிய பதினான்கும் அல்வழிப்புணர்ச்சி எனக் கூறப்படும்.

நன். சூ. 152: "வேற்றுமை யைம்முதல் ஆறும் அல்வழி
தொழில்பண்பு உவமை உம்மை அன்மொழி
எழுவாய் விளியீ ரெச்ச முற்றிடையுரி
தழுவு தொடரெனக் கெனவீ ரேழே."

## 5. மெய்யீற்றின் முன் மெய்

ஞ், ண், ந், ம், ன், ர், ல், வ், ழ், ள் — என்னும் பத்து மெய்களுள் ஒன்று மொழி இறுதியில் நிற்க, வருமொழி முதலில் யகர மெய்யெழுத்து வந்தால் எவ்வாறு புணரும் என்பதை இங்குக் காண்போம்.

| | |
|---|---|
| மன் + யாவன் = மன்னியாவன் | அல்வழி |
| வேள் + யாவன் = வேளியாவன் | |
| மண் + யாது = மண்ணியாது | |
| தெவ் + யாது = தெவ்வியாது | |
| வேள் + யானை = வேளியானை | வேற்றுமை |
| மண் + யானை = மண்ணியானை | |

நிலைமொழியீற்றில் யகரம் ஒழிந்த மற்ற மெய்கள் நிற்க, வருமொழி முதலில் யகரம் வந்தால் இடையில் இகரம் தோன்றும்; சிலவிடங்களில் வேள் யாவன், மண் யாது என இகரம் பெறாமல் புணர்வதும் உண்டு.

நன். சூ. 206: "தன்னொழி மெய்ம்முன் யவ்வரின் இகரம்
துன்னும் என்று துணிநரும் உளரே."

### (அ) ணகர னகர வீறு

| | |
|---|---|
| 1. மண்+குடம் =மட்குடம்<br>பொன்+பணி =பொற்பணி | வேற்றுமையில் ணகர னகர மெய்கள் வல்லினம் வர, டகர றகர மெய்களாகத் திரிந்தன. |

2. மண் + மலை
மண் + வன்மை
பொன் + மலை
பொன் + வன்மை

} வேற்றுமையில் மெல்லினமும் இடையினமும் வர ணகர னகர மெய்கள் இயல்பாயின.

3. மண் + பெரிது = மண் பெரிது
பொன் + பெரிது = பொன் பெரிது
மண் + மாண்டது = மண்மாண்டது
பொன் + மாண்டது = பொன்மாண்டது
மண் + யாது = மண்யாது
பொன் + யாது = பொன்யாது

} அல்வழியில், மூவினமும் வர ணகர னகர மெய்கள் இயல்பாயின.

நன். சூ. 209: "ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின்
இயல்பு மாகும் வேற்றுமைக்கு அல்வழிக்கு
அனைத்துமெய் வரினும் இயல்பா கும்மே."

## (ஆ.) யகர ரகர ழகரவீறு

நிலைமொழி யீற்றில் யகர, ரகர, ழகர மெய்கள் நிற்க, வருமொழி முதலில் க, ச, த, ப என்னும் வல்லினம் வந்தால் எவ்வாறு புணரும் என்பதை இங்குக் காண்போம்.

1. வேய் + கடிது = வேய் கடிது
வேர் + சிறிது = வேர் சிறிது
யாழ் + பெரிது = யாழ் பெரிது

{ அல்வழியில் ய, ர, ழ மெய்களின் முன் வல்லினம் வந்தபோது இயல்பாயின.

2. மெய் + கீர்த்தி = மெய்க்கீர்த்தி
கார் + பருவம் = கார்ப்பருவம்
யாழ் + கருவி = யாழ்க்கருவி

{ அல்வழியில் யரழ மெய்களின் முன் வருமொழி முதலில் வந்த வல்லெழுத்துக்கள் மிக்கன.

3. நாய் + கால் = நாய்க்கால் } வேற்றுமையில்
நீர் + குடம் = நீர்க்குடம் } வல்லினம் மிக்
ஊழ் + பயன் = ஊழ்ப்பயன் } கன

4. வேய் + குழல் = வேய்க்குழல்; வேய்ங்குழல்
ஆர் + கோடு = ஆர்க்கோடு, ஆர்ங்கோடு
குமிழ் + கோடு = குமிழ்க்கோடு, குமிழ்ங்கோடு
{ வேற்றுமையில் வல்லெழுத்தேனும் இன
{ மெல்லெழுத்தேனும் மிகுந்து வந்தன

மேறகூறிய எடுததுககாட்டுகளால நாம அறிவன யாவை? ய, ர, ழ வீறறு மொழிகளினமுன க, ச, த, ப எனனும வலலெழுததுககள வரின அலவழியில இயல்பாத லும், மிகுதலும உணடு வேறறுமையில வல்லெழுதது மிகுதலும வலலெழுததும மெலலெழுத்தும உறழநது வருதலும உணடு.

நன். சூ. 224: "யரழ முனனர்க கசபத அல்வழி
இயல்பும் மிகலும் ஆகும் வேறறுமை
மிகலும் இனத்தோடு உறழ்தலும் விதிமேல்."

## (இ) லகர ளகர வீறு

லகர ளகர வீறறு மொழிகள வருமொழி முதலில் வலலினம, மெல்லினம, இடையினம வருமபோது அல் வழியிலும வேறறுமையிலும எவவாறு புணருமெனபதைத இஙகுக காணபோம.

1. கல் + குறை = கறகுறை } வேற்றுமையில் வல்
முள் + குறை = முட்குறை } லினம் வந்தபோது
} றகர, டகரங்களாகத்
} திரிந்தன.

2. கல் + குறிது = கல்குறிது, கற்குறிது
முள் + குறிது = முளகுறிது, முட்குறிது
{ வல்லினம் வந்தபோது அல்வழியில் இயல்
{ பாகியும், திரிந்தும் உறழ்ந்து வந்தன.

3 கல் + மாண்டது = கன்மாண்டது }
முள் + மாண்டது = முண்மாண்டது } அல்வழி
கல் + மாட்சி = கன் மாட்சி }
முள் + மாட்சி = முண் மாட்சி } வேற்றுமை

மெல்லினம் வந்தபோது அல்வழி வேற்றுமை என்னும் இருவழியிலும் நிலைமொழியீற்று லகர ளகரங்கள் னகர ணகரங்களாகத் திரிந்தன

4 கால் + யாது = கால் யாது }
முள் + வலிது = முள் வலிது } அல்வழி
கல் + யானை = கல்யானை }
தோள் + வலிமை = தோள் வலிமை } வேற்றுமை

இருவழியிலும் இடையினம் வர இயல்பாயின.

1. மொழியீற்று லகர, ளகரங்கள் வருமொழி முதலில் வல்லினம் வரும்போது, வேற்றுமையில் றகர டகரங்களாகத் திரிந்து வரும்.

2. அல்வழியில் இயல்பாகியும் திரிந்தும் உறழ்ந்து வரும்

3. மெல்லினம் வரும்போது இருவழியிலும் னகர, ணகரங்களாகத் திரிந்து வரும்.

4. இடையினம் வரும்போது இருவழியிலும் இயல்பாகும்.

நன். சூ. 227

"லளவேற் றுமையிற் றடவும் அல்வழி
அவற்றோடு உறழ்வும் வலிவரின் ஆம்மெலி
மேவின் னணவும் இடைவரின் இயல்பும்
ஆகும் இருவழி யானும் என்ப."

# V. யாப்பு

## 1. தளை

யாப்பிலக்கணத்தில் அசை, சீர் வகைகளைப் பற்றிச் சென்ற வகுப்பில் படித்தீர்கள். இப்பொழுது தளை, அடி, தொடை என்னும் மூன்றினைப்பற்றித் தெரிந்து கொள்ளலாம்.

நிலைமொழியின் ஈறும் வருமொழியின் முதலும் இணைந்து வருவது புணர்ச்சி எனப்படும். அதுபோல (முதலில் நின்ற சீரின் ஈற்றசையும் வருஞ்சீரின் முதல் அசையும் தம்முள் இயைவது தளை எனப்படும்.) தளை - கட்டுதல் எனப் பொருள்படும்.

தளை ஏழுவகைப்படும்.

1. நேர் ஒன்று ஆசிரியத்தளை } ஆசிரியப்பாவுக்கு
2. நிரை ஒன்று ஆசிரியத்தளை } உரியவை.
3. இயற்சீர் வெண்டளை } வெண்பாவுக்கு உரியவை.
4. வெண்சீர் வெண்டளை }
5. கலித்தளை — கலிப்பாவுக்கு உரியது
6. ஒன்றிய வஞ்சித்தளை } வஞ்சிப்பாவுக்கு உரியவை.
7. ஒன்றா வஞ்சித்தளை }

(உ - ம்.)

1. **கண் ணி—கார் நறும்**
   **நேர் நேர்—நேர் நிரை**
   } இயற்சீரில் நேர் முன் நேர் வருவது நேர் ஒன்றிய ஆசிரியத்தளை எனப்படும்.

2. **புக ழெனின்—உயி ரும்**
   **நிரை நிரை—நிரை நேர்**
   } இயற்சீரில் நிரை முன் நிரை வருவது நிரை யொன்றாசிரியத் தளை எனப்படும்.

| | |
|---|---|
| 3. (அ) அக ர—முத ல<br>நிரை நேர்<br>புளிமா—நிரை நேர் | மாமுன் நிரை வந்தது இயற்சீர் வெண்டளை. |
| (ஆ) மலர் மிசை—ஏ கினான்<br>நிரை நிரை<br>கருவிளம்—நேர் நிரை | விளமுன் நேர் வந்தது இயற்சீர் வெண்டளை. |
| 4. எழுத் தெல் லாம்—ஆ தி<br>நிரை நேர் நேர்<br>புளிமாங்காய்—நேர் நேர் | காய்முன் நேர் வந்தது வெண்சீர் வெண்டளை. |
| 5. செம் பொரு ளந்—திரண் முத் தம்<br>நேர் நிரை நேர்<br>கூவிளங்காய்—நிரை நேர் நேர் | காய்முன் நிரை வந்தது கலித்தளை. |
| 6. விளைந் தன் பகை—விறல் செற் றவன<br>நிரை நேர் நிரை—நிரை நேர் நிரை | வஞ்சிச்சீரில் நிரை முன் நிரை வந்தது ஒன்றிய வஞ்சித்தளை. |
| 7. செந் தா மரை நாண் மலர் மிசை<br>நேர் நேர் நிரை—நேர் நிரை நிரை | வஞ்சிச்சீரில் நிரை முன் நேர் வந்தது ஒன்றாத வஞ்சித்தளை. |

1 நேர் முன் நேர் வருவது—நேரொன்றாசிரியத்தளை.
2. நிரை முன் நிரை வருவது—நிரையொன்றாசிரியத்தளை
3 மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது—இயற்சீர் வெண்டளை.
4. காய் முன் நேர் வருவது—வெண்சீர் வெண்டளை.
5. காய்முன் நிரை வருவது—கலித்தளை.
6. நிரை முன் நிரை வருவது—ஒன்றிய வஞ்சித்தளை.
7. நிரை முன் நேர் வருவது—ஒன்றாத வஞ்சித்தளை.
வஞ்சியுரிச்சீரில் வருவதுதான் வஞ்சித்தளையாம்.

## அடி

### (1) குறளடி

| | 1 | 2 |
|---|---|---|
| (உ-ம்.) | பூந்தாமரைப் | போதலமரத் |
| | தேம்புனலிடை | மீன்றிரிதரும் |
| | வளவயலிடைக் | களவயின் மகிழ் |
| | வினைவகாப்பலை | மனைச் சிலம்பவும் |

இச் செய்யுளில் உள்ள அடிகள் இரண்டு சீர்களால் அமைந்தவை. இவ்வாறு இரண்டு சீர்களால் அமைந்த அடி குறளடி எனப்படும்.

### (2) சிந்தடி

| | 1 | 2 | 3 |
|---|---|---|---|
| (உ-ம்.) | அன்று | ஏழை | மாதியாய் |
| | இன்று | கூறு | மெய்மறையேன் |
| | நன்று | தீது | நாடலேன் |
| | நின்று | நீய | தடிமேனன் |

இச் செய்யுளில் உள்ள அடிகள் மூன்று சீர்களால் அமைந்தவை. இவ்வாறு மூன்று சீர்களால் அமைந்த அடி சிந்தடி எனப்படும்.

### (3) அளவடி

| | 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| (உ-ம்.) | உலகெ | லாமுணர்ந் | தோதற | கரியவன் |
| | நிலவு | லாவிய | நீர்மலி | வேணியன் |
| | அலகில் | சோதியன் | அம்பலத் | தாடுவான் |
| | மலர்சி | லம்படி | வாழ்த்தி | வணங்குவாம் |

இச் செய்யுளில் வந்துள்ள அடிகள் நான்கு சீர்களால் அமைந்தவை. நாற்சீர் அடி அளவடி எனப்படும்.

## (4) நெடிலடி

(உ-ம்.)

| 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| கண்ணே | வேண்டு | மென்னினு | மீயக் | கடவேனென் |
| உண்ணே | ராவி | வேண்டினு | மின்றே | யுனதன்றோ |
| பெண்ணே | வண்மைக் | கேகயன் | மானே | பெறுவாயேல் |
| மண்ணே | கொள்நீ | மற்றைய | தொன்றும் | மறவென்றான். |

இங்ஙனம் ஐந்து சீர்களால் அமைந்த அடி நெடிலடி எனப்படும்.

## (5) கழிநெடிலடி

(உ-ம்.)

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| கண்ணும் | நீரா | யுயிரு | நெருப்புக் | கழியா | நின்றேன் |
| எண்ணும் | நீர்நான் | மறையோ | ரிருமுன | நின்மேற் | சொரிய |
| மண்ணும் | நீராய் | வந்த | புனலை | மகனே | வினையேற் |
| குண்ணும் | நீரா | யுதவி | யுயர்கா | னடைவா | யென்றான். |

இவ்வாறு ஆறு சீர்களால் அமைந்த அடி கழிநெடிலடி எனப்படும். ஆறுசீர்களுக்கு மேல எத்தனை சீர்கள் அமைந்து வரினும் அவை யெல்லாம் கழிநெடிலடி எனவே கூறப்படும்.

### தொடை

எழுத்துப்பற்றியேனும், சொல்பற்றியேனும், பொருள் பற்றியேனும் இன்பம் தருமாறு அடிகளும், சீர்களும் இயையத் தொடுப்பது தொடை எனப்படும். அஃது எதுகைத் தொடை, மோனைத் தொடை, முரண் தொடை முதலாகப் பலவகைப்படும். இத்தொடை நான்குசீர் கொண்ட நேரடியில் மட்டும் காணவேண்டும்.

### எதுகை

(உ - ம்.) இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

இவ்வாறு அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றி வருவது அடி எதுகைத் தொடை எனப்படும்.

(உ - ம்.)

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்கு.

இதில் சீர்தோறும் இரண்டாமெழுத்துக்கள் ஒன்றாகவே நின்றன. எல்லாச் சீர்களிலும் எதுகை வந்ததால் முற்றெதுகை எனப்படும்.

### மோனை

தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையால் வரும்.

இவ்வாறு அடிதோறும் முதலெழுத்து ஒன்றுபட்டு வருவது அடி மோனைத் தொடை எனப்படும்.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்.

இதில் எல்லாச் சீர்களிலும் முதலெழுத்து ஒன்றுபட்டு வந்ததால் முற்று மோனை என்று கூறப்படும்.

### முரண்

துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

துன்பு, இன்பு என்பன முரண்பட்ட சொற்கள். இவ்வாறு அடிதோறும் முரண்படத் தொடுப்பது அடி முரண்தொடையாம்.

கருங்குழலார் செங்கையிலே வெண்கவரிப் பைங்கால்—இதிற் சீர்தோறும் முரண்பட்ட சொற்கள் நின்றன.

இவ்வாறு எல்லாச் சீர்களிலும் முரண்பட்ட சொற்கள் வருவது முற்று முரண் என்று கூறப்படும்.

## 2. நால்வகைப் பாக்கள்

### (பெயர்களும் எடுத்துக்காட்டுக்களும்)

பா, பாட்டு, செய்யுள் என்பன ஒருபொருட் சொற்கள். தமிழில் உள்ள பாக்கள் நான்கு வகைப்படும். அவை வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன. இப்பாக்கள் ஒவ்வொன்றும் பலவகைப்படும். இங்கு ஒரு பாவிற்கு ஒன்று தான் எடுத்துக் காட்டப்படுகின்றது.

வெண்பா

கண்ணிமைத்த லால்அடிகள் காசினியில் தோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பும் நன்னுதலே அன்னாள்
அறிந்தாள் நளன்றன்னை ஆங்கு.

இச்செய்யுளில் நான்கு அடிகள் அமைந்துள்ளன. இஃது இரண்டாம் அடியில் தனிச்சொல் பெற்று இரண்டு வகை எதுகைகளையும் பெற்றுள்ளது. இவ்வாறு வருவது நேரிசை வெண்பா எனப்படும். வெண்பாவில் வெண்டளை மட்டும் வரும். இதில் பலவகையுண்டு.

ஆசிரியப்பா

பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனும் அல்லன்
மாரியும் உண்டீண் டுலகுபுரப் பதுவே.

நான்கு சீர்கொண்ட அடிகள் மூன்று அடிகளுக்கு மேல் பல அடிகள் பெற்றுவரும். ஈற்றயலில் முச்சீரடி

வருகது. இதில் ஆசிரியத்தளையே பயின்று வந்துள்ளது. மணிமேகலை, புறநானூறு ஆகிய நூல்களிலிருந்து உங்கள பாடபபகுதிகளாக வரும செயயுட்கள ஆசிரியபபாக்களே யாகும. இச் செய்யுளிலும பலவகை உணடு.

கலிப்பா

முத்தொடு மணிதயங்கு முக்குடைக்கீழ் முனைவனே
எத்திசையும் பல்லுயிர்கள் இன்புறவினி திருந்து
பத்துறு திசையனைத்தும் பகைபசி பிணிநீங்க
உத்தமர்கள் தொழுதேத்த ஒளிர்வரைபோற்
[செலவினும்

இது தரவு.

எள்ளனைத்தும் இடரின்றி யெழினமாணட பொன்னெயில்
உள்ளிருந்த உன்னையே உறுதுணையென் றடைந்தோரை
வெள்ளில்சேர் வியன்காட்டுள் உறைகென்றல் விழுமிதோ
குணங்களின் வரம்பிகந்து கூடிய பன்னிரண்டு
கணங்களும்வந் தடியேத்தக காதலித்துன் அடைந்தோரைப்
பிணம்பிறங்கு பெருங்காடுள் உறைகென்றல் பெருமையோ
விடத்தகைய வினைநீக்கி வெள்வளைக்கைச் செந்துவர்வாய்
மடத்தகைய மயிலனையார் வணங்கநின் அடைந்தோரைத்
தடத்தகைய காடுறைக என்பதுநின் தகுதியோ

இவை மூன்றும தாழிசை.

எனவாங்கு

தனிச்சொல்.

எனைத்துணையை யாயினும் ஆகமற் றுன்கண்
தினைத்துணையும் தீயவை இன்மையிற் சேர்தும
வினைத்தொகையை வீட்டுக வென்று.

இது சுரிதகம்.

இவ்வாறு தரவு ஒனறும, தாழிசை மூனறும, தனிச சொல்லும், சுரிதகமும் பெற்று வருவது கலிப்பா எனப

படும். இதில் கலித்தளை பயின்றுவரும். **கலிப்பாவிலும்** பலவகையுண்டு.

## வஞ்சிப்பா

*வினைத்திண்பகை விழச்செற்றவன்*
*வனப்பங்கய மலர்த்தாளிணை*
*நினைத்தன்பொடு தொழுதேத்தினர்*
*நாளும்*
*மயலார் நாற்கதி மருவார்*
*பெயரா மேற்கதி பெறுகுவர்* **விரைந்தே.**

இருசீரடி மூன்றுவந்து, இடையில் **நாளும் என்ற** தனிச்சொல் வந்து, பின் இரண்டடிச் சுரிதகம் பெற்று முடிந்தது இவ்வாறு வருவனவெல்லாம் **வஞ்சிப்பாக்களாம்.** முச்சீரடியாலும் வஞ்சிப்பா வரும்.

# VI. அணி

செய்யுட்கு அழகு செய்வது அணி எனப்படும். அது சொல்லணி, பொருளணி என இருவகைப்படும். சொல் பற்றிய அணி சொல்லணி என்றும், பொருள் பற்றிய அணி பொருளணி யென்றும் கொள்ளப்படும். பொருள் அணி தன்மை உவமை முதலியன. சொல்லணி—யமகம், திரிபு, சிலேடை முதலியன. பொருளணியின் பகுதிகளாகிய எடுத்துக்காட்டுவமை, இல்பொருள் உவமை, ஏகதேச உருவகம், தற்குறிப்பேற்றம், பிறிதுமொழிதல் ஆகிய ஐந்தும் இங்கு விளக்கப்படும்

## 1 எடுத்துக்காட்டுவமை

அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

இச் செய்யுளில் 'உலகு ஆதிபகவனாகிய இறைவனை முதலாக உடையது' என்பது உவமேயம்.

'எழுத்தெல்லாம் அகரமாகிய எழுத்தை முதலாக உடையன' என்பது உவமானம். இவற்றின் இடையில் "அதுபோல" என்ற உவமவுருபு கொடுத்து எடுத்துக் காட்டப்படுகிறது. இவ்வாறு உவமவுருபு மறைந்து நிற்பன வெல்லாம் எடுத்துக்காட்டுவமையாம்.

## 2. இல்பொருள் உவமை

"குன்றெழுந்து சென்றதெனக்
குளிர் கங்கைக் கரையணுகி."

இச் செய்யுளில் குன்று எழுந்து நடந்தது போலப் பரதன் கங்கைக்கரையை அடைந்தான் எனக் கூறப்பட்டுள்ளது—எழுந்து நடக்கும் குன்று, உலகத்தில் இல்லாத பொருள்.

"இருகை யானை அனையவன் வந்தான்."

இரண்டு கைகளை உடைய யானை ஒரு மனிதனுக்கு உவமை காட்டிக் கூறப்பட்டுள்ளது. இருகையுடைய யானை உலகில் இல்லாத பொருள்.

இவ்வாறு உலகில் இல்லாத பொருளை உவமையாகக் காட்டிக் கூறப்படுவனவெல்லாம் இல்பொருள் உவமையணி எனக் காண்க.

## 3. ஏகதேச உருவகம்

*பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவனடி சேரா தார்*

இறைவன் அடியென்னும் புணையைச் சேர்ந்தவர் பிறவிப் பெருங்கடலை நீந்துவர்; அதனைச் சேராதவர் அக்கடலை நீந்தாமல் அழுந்துவர் என்பது பொருள்.

பிறவியாகிய பெருங்கடல் எனப் பிறவியைப் பெருங்கடலாக உருவகஞ் செய்துள்ளார். அதற்கு ஏற்ப இறைவன் அடியை மரக்கலமாக உருவகஞ் செய்தல்வேண்டும். அவ்வாறு உருவகஞ் செய்யாததால் இஃது ஏகதேச உருவக அணியாம்.

*அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்*
*பிறவாழி நீந்தல் அரிது.*

அறக்கடலாகிய அந்தணனுடைய தாளாகிய புணையைச் சேர்ந்தார்க்கல்லது அதனிற் பிறவாகிய பொருள் இன்பக் கடல்களை நீந்துதல் அரிதாகும், என்பது செய்யுளின் பொருள். இதிற் பிறஆழி எனப் பொருள் இன்பங்கள் கடலாக உருவகஞ் செய்யப்பட்டுள்ளன. தாள் என்பது மரக்கலமாக உருவகஞ் செய்யப்படவில்லை.

இவ்வாறு செய்யுளில் ஒரு பொருளை உருவகஞ் செய்து அதற்கேற்ப மற்றொரு பொருளை உருவகஞ் செய்யாது விடுதல் ஏகதேச உருவகம் எனப்படும்.

## 4. தற்குறிப்பேற்றம்

போருழந் தெடுத்த ஆரெயில் நெடுங்கொடி
வாரலென் பனபோல் மறித்துக்கை காட்ட.

இதனுள் கோவலன் மதுரை வாயிலை அணுகியபோது, மதில் மீதுள்ள கொடிகள் அசைதல் கூறப்படுகின்றது. கோவலன் மதுரை நகருகத்துள் சென்று கொலையுண்ணநேர்கின்றதே என்று கருதிக் கொடிகள் 'வரவேண்டாம்' எனத் தடுப்பனபோல அசைகின்றன என்பப் புலவர் கூறுகின்றார். கொடிகள் இயற்கையாக எப்பொழுதும் அசைவனபோல் அசைகின்றன. புலவர் தமமுடைய குறிப்பை (தாம் நினைத்த எண்ணத்தை) அக் கொடியின்மேல் ஏற்றி அவை கோவலனைத் தடுப்பனபோல் அசைகின்றன எனக் கூறுகின்றார். இவ்வாறு புலவர் தம் குறிப்பை ஒன்றன்மேல் ஏற்றிக் கூறுதல் தற்குறிப்பேற்ற அணி எனப்படும்.

## 5. பிறிது மொழிதல்

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்.

இச் செய்யுளில் மயில்தோகையை அளவிறந்துமேல் வண்டியில் ஏற்றினால் அதன் அச்சு முறிந்துவிடும் என்பது உவமானம்.

அதுபோல,

'எளியவராயினும் பலர் சேர்ந்து தாக்கினால் வலியவரும் அழிவர்' என்பது உவமேயம்.

இவ்வாறு செய்யுளில் உவமேயத்தை நாமே அறிந்து கொள்ளுமாறு உவமானத்தை மட்டும் கூறிவிடுவது பிறிது மொழிதல் அணி எனப்படும். இஃது ஒட்டணி என்றும் கூறப்படும்.

# பயிற்சிகள்

## I. எழுத்து

(1) 1. அளபெடை என்பது யாது?
2. உயிர் அளபெடை என்பது யாது?
3. உயிர் அளபெடை மொழியில் எவ்விடங்களில் வரும்?
4. அளபெடைக்கு அடையாளமாக வரும் எழுத்து எது?
5. இசை நிறை அளபெடை என்பது யாது?
6. இன்னிசை அளபெடை என்பது யாது?
7. ஒற்றளபெடை என்பது யாது? அஃது எவ்வாறு வரும்?
8. போலி எழுத்துக்கள் மொழியில் எவ்விடத்தில் எவ்வாறு வரும்? எடுத்துக்காட்டுகள் தருக
9. எவ்வெழுத்துக்களுக்கு எவை சாரியைகளாக வரும்?

## II. சொல்

(1) 1. வேற்றுமை உருபு ஏற்கும் போது தன்மைப் பெயர்கள் எவ்வாறு திரியும்?
2. முன்னிலைப் பெயர்கள் எவ்வாறு திரியும்?
3. படர்க்கைப் பெயர்கள் எவ்வாறு திரியும்?

(2) 1. எச்சொற்கள் விளி ஏற்க மாட்டா?
2. வினைச்சொல் என்பது யாது?

(3) 1. தெரிநிலை வினைச்சொல் எவை ஆறினையும் உணர்த்தும்?
2. குறிப்புவினை எதனை உணர்த்தும்?
3. பகுபத உறுப்புக்கள் எத்தனை? எவை?
4. பாடினன், சென்றான், வருகின்றார், கூறுவான்—இவற்றில் எவ்வுறுப்புக்கள் அமைந்துள்ளன? பிரித்து எழுதுக.
5. புலையன், காடன், பொன்னன், அரசி—இவற்றில் உள்ள பெயர்ப் பகுதிகள் எவை?
6. கண்டான், ஓடினன், பார்த்தாள், வருவார், கற்கிறான், மேய்கின்றன-இவற்றில் உள்ள வினைப்பகுதிகள் எவை?
7. அவள், எவர், மற்றையோர்—இவற்றில் வந்த இடைப் பகுதிகள் எவை?

8. உற்றான், கூர்ந்தாள், வன்மையன்—இவற்றில் உள்ள உரிப்பகுதிகளை எடுத்து எழுதுக.
9. தன்மை ஒருமை வினைமுற்று விகுதிகள் எவை?
10. தன்மைப் பன்மை வினைமுற்று விகுதிகள் எவை?
11. முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதிகள் எவை?
12. முன்னிலைப் பன்மை வினைமுற்று விகுதிகள் எவை?
13. படர்க்கை ஆண்பால் வினைமுற்று விகுதிகள் எவை?
14. படர்க்கைப் பெண்பால் வினைமுற்று விகுதிகள் எவை?
15. படர்க்கைப் பலர்பால் வினைமுற்று விகுதிகள் எவை?
16. படர்க்கை ஒன்றன்பால் வினைமுற்று விகுதிகள் எவை?
17. படர்க்கைப் பலவின்பால் வினைமுற்று விகுதிகள் எவை?
18. வியங்கோள் வினைமுற்று விகுதிகள் எவை?
19. ஏவல் வினைமுற்று விகுதிகள் எவை?
20. பெயரெச்ச விகுதிகள் எவை?
21. வினையெச்ச விகுதிகள் எவை?
22. வறிஞன், இடைச்சி, பறவை, நூலையர், குறத்தியர்—இவற்றில் வந்த பெயரிடைநிலைகளை எழுதுக.
23. மூன்று கால வினை இடைநிலைகள் எவை? தனித் தனி பிரித்து எழுதுக.
24. பகுபதங்களில் சாரியைகள் எவ்விடத்தில் வரும்? அச் சாரியைகள் எவை?
25. சந்தி எனப் பெயர் வந்த காரணம் யாது?
26. விகாரம் என்பது யாது? அது பகுபதத்தில் எங்கு வரும்?

(4) 1. தன்மை ஒருமை வினைமுற்று எவ்வாறு வரும்?
2. தன்மைப் பன்மை வினைமுற்று எவ்வாறு வரும்?
3. முன்னிலை வினைமுற்று எவ்வாறு வரும்?
4. படர்க்கை வினைமுற்றில் ஐந்து பால்களுக்கும் உதாரணம் தருக.
5. செல்வாய், செய்மின்—இவற்றை ஏவல் வினைமுற்றுக்கள் என்று ஏன் கூறுதல் வேண்டும்?

(5) 1. ஏவல் வினைமுற்றுக்கும் வியங்கோள் வினைமுற்றுக்கும் உள்ள வேறுபாடுகள் எவை?

(6) 1. எவை இடைச் சொற்களெனக் கூறப்படுகின்றன?
2. "மன்" என்னும் இடைச்சொல் எவ்வெப் பொருளில் வரும்? எடுத்துக் காட்டுகள் தருக.
3. "மற்று" என்னும் இடைச்சொல் எவ்வெப் பொருளில் வரும்?
4. "அம்ம" என்னும் இடைச்சொல் தரும் பொருள்கள் எவை?
5. "ஆங்கு" என்னும் இடைச்சொல் எவ்வெப் பொருளில் வரும்?
6. "என," "என்று" என்னும் இடைச்சொற்கள் எப்பொருளில் வரும்?
7. செழு, மல்லல் என்னும் உரிச்சொற்கள் எவ்வெப் பொருள்களில் வரும்?

## III. பொது

(1) 1. குறிப்பினுற் பொருள் தரும் சொற்கள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?
2. ஒருமொழி பொதுச் சொல் என்றால் என்ன? விளக்கந் தருக.
3. ஒன்பது வகை விகாரங்கள் எவை?
4. மங்கலம், குழூஉக்குறி—இவற்றை விளக்குக.
5. அன்மொழித் தொகை எவ்வாறு குறிப்பால் பொருள் உணர்த்தும்?
6. முதற்குறிப்பு, தொகைக் குறிப்பு—இவை பொருள் தரும் முறைகளை விளக்குக.
7. பிற குறிப்பு—என்பது பொருள்தரும் முறையை விளக்குக.

(2) 1. மரபு என்பது யாது?
2. அடிசில், அணி—என்னும் பொதுச் சொற்களை எவ்வினை கொடுத்து முடித்தல் வேண்டும்?

(3) 1. வழுவமைதி என்றால் என்ன?
2. வழுவமைதிகள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

(4) 1. ஒருபொருட் பன்மொழி—என எதனைக் கூறுவர்?
2. இரட்டைக்கிளவிக்குச் சில எடுத்துக் காட்டுக்கள் தருக.

3. அடுக்குத்தொடர் என எதனைக் கூறுதல் வேண்டும்?
4. இரட்டைக்கிளவிக்கும், அடுக்குத்தொடருக்கும் உள்ள வேறுபாடுகளை விளக்குக.

(5) 1. இனங் குறித்தல் என்றால் என்ன?
2. நஞ்சு உண்டவன் சாவான், சோறு உண்டான் இவை எவ் வினங்களைக் குறித்தன?

## IV. புணர்ச்சி

(1) 1. பைந்தார், வெண்டாமரை, செந்தளிர், வெண்கோழி— இவற்றைப் பிரித்து எழுதுக
2. பண்புச் சொற்கள் புணரும்போது என்ன என்ன மாறுபாடுகளை அடையும்?

(2) 1. உயிரீற்றுப் புணர்ச்சி, மெய்யீற்றுப் புணர்ச்சி-விளக்கந் தருக.
2. மெய்யீற்றின் முன் மெல்லினமும் இடையினமும் எவ்வாறு புணரும்?
3. மெய், கை, நொ, து— என்னும் சொற்களுக்கு முன் வரும் மெல்லினம் எவ்வாறு புணரும்?

(3) 1. எகர வினாவின் முன்னும், சுட்டெழுத்துக்களின் முன்னும் நாற்கணமும் எவ்வாறு புணரும்?

(4) 1. வேற்றுமைப் புணர்ச்சி, அல்வழிப் புணர்ச்சி என்றால் என்ன?
2. தொகைநிலைத் தொடர் எத்தனை வகைப்படும்? அவை எவை?
3. தொகா நிலைத்தொடர் எத்தனை வகைப்படும்? அவை எவை?

(5) 1. யகரம் ஒழிந்த மெய்யீற்றின் முன் யகர முதன் மொழி வந்தால் எவ்வாறு புணரும்?
2. ணகர னகர வீற்றுமொழிகள் வேற்றுமையில் எவ்வாறு புணரும்? அல்வழியில் எவ்வாறு புணரும்?
3. ய, ர, ழ வீற்று மொழிகள் அல்வழியிலும் வேற்றுமையிலும் எவ்வாறு புணரும்?
4. லகர ளகர வீற்றுமொழிகள் அல்வழியிலும் வேற்றுமையிலும் எவ்வாறு புணரும்?

## V. யாப்பு

(1) 1. தளை எத்தனை வகைப்படும்? அவை எவை?

2. எத்தளைகள் எப்பாக்களுக்கு உரியவை?

3. எச்சீர்முன் எவ்வசை வரும் என ஒவ்வொரு தளைக்கும் விளக்கம் தருக.

4. அடி எத்தனை வகைப்படும்? அவை எவை?

5. 2, 3, 4, 5, 6, சீர்களால் வரும் அடிகள் முறையே எப்பெயர் பெறும்?

6. தொடை எத்தனை வகைப்படும்? அவை யாவை?

7. எதுகைத் தொடை, முரண் தொடை—விளக்கம் தருக.

8. முற்றுமோனை எவ்வாறு வரும்? உதாரணம் தருக.

(2) 1 நால்வகைப் பாக்களின் பெயர்களை எழுதுக.

2. வெண்பாவுக்கும், ஆசிரியப்பாவுக்கும் உதாரணம் தருக.

## VI. அணி

1. எடுத்துக் காட்டுவமை அணி எவ்வாறு வரும்?

2. இல்பொருள் உவமை என்று ஏன் பெயர் வந்தது?

3. ஏகதேச உருவக அணிக்கு ஓர் உதாரணம் தருக.

4. தற்குறிப் பேற்ற அணியை விளக்குக.

5. பிறிது மொழிதல் அணியை ஓர் உதாரணந் தந்து விளக்குக.

# ஒன்பதாம் வகுப்பு

## [இலக்கண வினா விடை]

---

**(1) எழுத்தென்றால் என்ன ?**

ஒரு சொல்லுக்கு முதற் காரணமாய் உள்ள ஒலியே எழுத்து எனப்படும்.

**1 A எழுத்து எத்தனை வகைப்படும் ?**

எழுத்து முதலெழுத்து, சார்பெழுத்து என இரண்டு வகைப்படும்.

**(2) முதல் எழுத்துக்கள் எவை ?**

உயிரெழுத்துப் பன்னிரண்டும், மெய் எழுத்துப் பதினெட்டும் முதல் எழுத்துக்கள் எனப்படும்.

**(3) சார்பெழுத்துக்கள் எவை ?**

உயிர்மெய், ஆய்தம், உயிரளபெடை, ஒற்றளபெடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக் குறுக்கம், ஔகாரக் குறுக்கம், மகரக் குறுக்கம், ஆய்தக்குறுக்கம் ஆகிய பத்தும் சார்பெழுத்துக்களாம்.

**(4) குற்றியலுகரம் என்றால் என்ன? அஃது எத்தனை வகைப்படும் ? அவை யாவை ?**

தனி நெட்டெழுத்தோடும், வேறு பல எழுத்துக்களோடும் சேர்ந்துவரும் உகரம் குற்றியலுகரம் எனப்படும்.

**அஃது ஆறு வகைப்படும், அவை :—**

| | | | |
|---|---|---|---|
| நெடில் | தொடர்க் | குற்றியலுகரம் | — நாடு |
| ஆய்தத் | ,, | ,, | — எஃகு |
| உயிர்த் | ,, | ,, | — அழகு |

| | | |
|---|---|---|
| வன்றொடர்க் | குற்றியலுகரம் | — பத்து |
| மென்றொடர்க் | ,, | — சங்கு |
| இடைத் தொடர்க் | ,, | — சால்பு |

**(5) குற்றியலிகரம் — விளக்குக**

வருமொழி முதலில் யகரம் வந்தால் நிலைமொழியின் ஈற்றில உள்ள குற்றியலுகரம் இகரமாகத் திரியும். அவ்வாறு திரிந்த இகரமும், மியா என்ற அசைச் சொல்லின் மகர மெய்யின் மீதுள்ள இகரமும் குற்றியலிகரம் எனப்படும். (உ-ம்) வீடு+யாது=வீடியாது.

**(6) மாத்திரை என்றால் என்ன?**

மக்கள் இயல்பாகக் கண் இமைக்கும் நேரமும், ஒருமுறை கை நொடிக்கும் கால அளவும் மாத்திரை எனப்படும்.

**(6)A எவ்வெவ்வெழுத்துக்கள் எத்தனை எத்தனை மாத்திரை ஒலிக்கும்?**

குற்றெழுத்துக்கள், ஐகாரக் குறுக்கம், ஔகாரக் குறுக்கம், ஒற்றளபெடை ஆகிய இவைகள் தனித்தனி ஒவ்வொரு மாத்திரையுப; நெட்டெழுத்துக்கள் தனித்தனி இரண்டு மாத்திரைகளும்; மெய்யெழுத்துக்களும், குற்றியலிகரம, குற்றியலுகரமும்; முற்றாய்தமும தனித்தனி அரை அரை மாத்திரையுப; மகரக் குறுக்கமும், ஆய்தக் குறுக்கமும் தனித்தனி கால் மாத்திரையும; உயிரளபெடை மூன்று மாத்திரைகளும் சில இடங்களில் அதிகமாகவும் பெற்று ஒலிக்கும்.

(7) நெட்டெழுத்து, உயிரளபெடை, ஆய்தக்குறுக்கம் இவைகளுக்குரிய மாத்திரை யாது?

| | |
|---|---|
| நெட்டெழுத்து | — இரண்டு மாத்திரை |
| உயிரளபெடை | — மூன்று மாத்திரை |
| ஆய்தக் குறுக்கம் | — கால் மாத்திரை |

(8) பதமாவது யாது?

ஓரெழுத்து தனித்து நின்றேனும், இரண்டு முதலிய எழுத்துக்கள் தொடர்ந்து நின்றேனும் பிற பொருளை உணர்த்தி நிற்குமாஞல் அது பதமாகும்.

(8)A பகுபத உறுப்புகள் எவை?

1. பகுதி   2. விகுதி   3. இடை நிலை
4. சாரியை   5. சந்தி   6. விகாரம்.

II (1) ஒரெழுத்து ஒருமொழி என்ருல் என்ன?

ஓர் எழுத்து தனித்து நின்று ஒரு பொருளை உணர்த்துமேயாஞல் அஃது ஓரெழுத்து ஒரு மொழியாம். ஆ, ஈ, தீ, நீ என்பன போல்பவை ஒரெழுத்து ஒரு மொழிகள். இவை எழுத்துக்கள் என்று தம்மை உணர்த்துவதோடல்லாமல் ஆ என்பது பசுவினையும், ஈ என்பது ஈக்களையும், தீ என்பது நெருப்பினையும் நீ என்பது முன் நிற்கும் ஒருவனையும் உணர்த்தி வேறு பொருள்களைத் தந்தன.

(2) ஆகு பெயர் என்ருல் என்ன?

ஒரு பொருளினுடைய இயற்பெயர் அதனோடு தொடர்புடைய மற்றொரு பொருளுக்கு ஆகி வருவது ஆகுபெயர் என்று சொல்லப்படும்.

**(3) பொருளாகு பெயர், இடவாகு பெயர், சினையாகு பெயர் இவைகளை உதாரணத்துடன் விளக்குக.**

பொருளாகு பெயர் :– முதற் பொருளின் பெயர் அதன் சினைப்பொருளுக்கு ஆகி வருவது.
(உ-ம்) மல்லிகை சூடினாள். மல்லிகை என்னும் செடியின் பெயர் அதன் மலரைக் குறிப்பதால் முதலாகு பெயராயிற்று.

**இடவாகுபெயர் :–**

ஓர் இடத்தின் பெயர் இடத்திலுள்ள பொருளுக்கு ஆகி வருதாம்.
(உ–ம) ஊர் உறங்கிற்று.

**சினையாகு பெயர் :-**

ஒரு சினையின் பெயர் அதனையுடைய முதற் பொருளுக்குப் பெயராய் வழங்குவது சினையாகு பெயர் எனப்படும்.
(உ–ம்) வெற்றிலே நட்டான்.

**(4) தொழிற் பெயர் விகுதிகள் யாவை ?**

தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, உள், காடு, பாடு, அரவு, ஆனை, மை, து என்ற பத்தொன்பதும் தொழிற் பெயர் விகுதிகள் எனப்படும்.

**(5) அல், கை, உ, காடு இந்நான்கு தொழிற் பெயர் விகுதிகளுக்கு உதாரணம் தருக.**

உண்ணல் — அல்
நடக்கை — கை
வரவு — உ
சாக்காடு — காடு

**(6) பண்புப் பெயர் விகுதிகள் யாவை?**

மை, ஐ, சி, பு, உ, கு, றி, று, அம், நர்—இவைகள் பண்புப் பெயர் விகுதிகள் எனப்படும்.

**(7) பண்புப் பெயர் விகுதிகள் ஐந்திற்கு உதாரணம் தருக.**

செம்மை — மை
மாண்பு — பு
நன்றி — றி
தொல்லை — ஐ
நலம் — அம்

**(8) முதனிலைத் தொழிற் பெயர் முதனிலை திரிந்த தொழிற் பெயர் இவற்றை விளக்குக.**

ஒரு தொழிற் பெயரில் விகுதி இல்லாமல் பகுதி மட்டும் தனித்து நின்று, தொழிலை உணர்த்துமாயின் அது முதனிலைத் தொழிற் பெயர் என்று சொல்லப்படும்.

(உ-ம்) அடி, கெடு, விடு, இன்ன பிறவும் ஆம். ஒரு தொழிற் பெயரில் பகுதி திரிந்து தொழிற் பெயர்ப் பொருளைத் தருமாயின் அது முதனிலை திரிந்த தொழிற் பெயர் எனப்படும்.

**(உ-ம்)** கொள் என்ற சொல் **கோள்** என்று வருவது. கெடு என்ற சொல் **கேடு** என்று வருவது.

**(9) வினையாலணையும் பெயரை விளக்குக?**

ஒரு வினை முற்றுச் சொல் தனக்குரிய முற்றுப் பொருளில் வராமல், பெயர்ப் பொருள் பட்டு நின்று வேற்றுமை உருபை ஏற்று வருவது வினையாலணையும் பெயர் என வழங்கப்படும்.

**(உ-ம்) பாடினவனைப் பார்த்தேன்.**

**(10) வினையாலணையும் பெயருக்கும், தொழிற் பெயருக்கும் உள்ள வேறுபாட்டினை விளக்குக.**

1. தொழிற் பெயர் தொழிலைக் குறிக்கும். வினையாலணையும் பெயர் தொழில் செய்யும் பொருளைக் குறிக்கும்.

2. தொழிற்பெயர் படர்க்கை இடத்தில் மட்டும் வரும. வினையாலணையும் பெயர் மூன்று இடத்திலும் வரும்.

3. தொழிற் பெயர் காலம் காட்டாது, வினையாலணையும பெயர் காலங் காட்டும்.

**(11) வேற்றுமை என்றால் என்ன? அஃது எத்துணையன?**

தம்மை ஏற்றுக்கொள்வதற்கு உரிய எல்லா வகைப்பட்ட பெயர்கட்கும் இறுதியில் வருவன வாம், அப்பெயர்களின் பொருளை வேறுபடுத்து வன வேற்றுமை எனப்படும். வேற்றுமை எட்டாகும்,

**(12) இரண்டாம் வேற்றுமையின் உருபு யாது? அஃது எப்பொருள்களில் வரும் ?**

இரண்டாம் வேற்றுமையின் உருபு—ஐ
அஃது ஆக்கல், அழித்தல். அடைதல். நீத்தல், ஒத்தல, உடைமை என்னும் ஆறு பொருள் களில் வரும்.

**(13) கருவி. கருத்தா, உடனிகழ்ச்சி - இவற்றை உதாரணத்துடன் விளக்குக.**

கருவிப் பொருள் - வாளால் வெட்டினான்.
கருத்தாப் பொருள் -திருவள்ளுவரால் இயற்றப் பட்ட குறள்.
உடனிகழ்ச்சிப் பொருள் - தந்தையொடு மகன் வந்தான்.

**(14) நான்காம் வேற்றுமையுருபு எப்பொருள்களில் வரும் என்பதை மேற்கோள் காட்டி விளக்குக.**

நான்காம் வேற்றுமையுருபு கொடை, பகை, நட்பு, முதற்காரணம், நிமித்தகாரணம், முறை முதலிய பொருள்களில் வரும்.

இரவலர்க்குப் பொன்னைக்கொடுத்தான் — கொடை
பாம்புக்குப்பகை கருடன் — பகை
கபிலர்க்கு நண்பர் பரணர் — நட்பு
அரசர்க்கு உரியது முடி — தகவு
வளையலுக்குப் பொன் தேவை—முதற்காரணம்
கூலிக்கு வேலை செய்தான் — நிமித்தகாரணம்
தசரதனுக்கு மகன் இராமன் — முறை

**(14) A ஐந்தாம் வேற்றுமை உருபு எவ்வப்பொருள்களில் வரும் என்பதை உதாரணத்துடன் விளக்குக.**

ஐந்தாம் வேற்றுமை உருபு இல், இன் ஆகும், நீங்கல், ஒப்பு, எல்லை, ஏது என நான்கு பொருள்களில வரும்.

மரத்தின் வீழ்பழம் — நீங்குதற்பொருள்
இராமனிற சிறந்தவன் பரதன்—ஒப்புப்பொருள்
சென்னையின தெற்கு சிதம்பரம் — எல்லைப் பொருள்
கல்வியிற் பெரியன் கம்பன் — ஏதுப் பொருள்

**(15) ஆறும் வேற்றுமையை விளக்குக.**

ஆறும் வேற்றுமையின் உருபுகள் ' அது ', 'ஆது' 'அ', இவ்வேற்றுமை உருபுகள் தற் கிழமைப் பொருளிலும், பிறிதின் கிழமைப் பொருளிலும் வரும். தற்கிழமை :– தன்னுடன் பிரியாமல் ஒற்றுமையுடைய உரிமைப்பொருள். இது பண்புத்தற்கிழமை, உறுப்புத் தற்கிழமை

ஒன்றன் கூட்டத் தற்கிழமை, பலவினீட்டத் தற்கிழமை, திரிபின் ஆக்கத் தற்கிழமை எனப் பலவகைப்படும்.

இராமனது நன்மை – பண்புத்தற்கிழமை
கந்தனது தலை – உறுப்புத்தற்கிழமை
மக்களது கூட்டம் –ஒன்றன் கூட்டத்தற்கிழமை
பறவைகளது ,, – பலவினீட்டத்தற்கிழமை
பிறிதின் கிழமை – தனனின் வேறாகிய உரிமைப் பொருள். இது பொருள, இடம, காலம் என மூவகைப்படும்.

இராமனது புத்தகம் – பொருட் பிறிதின்கிழமை
இராமனது நகரம் – இடப் ,,
இராமனது நாள் – காலப் ,,

(15) A எனது பைகள், எனது பை, எனபை. எனபைகள் - இவற்றில் எவை தவறு என்பதைக் காரணத்தோடு விளக்கிக் காட்டுக.

எனது பைகள், எனபை – இரண்டுந் தவறு. எனதுபை, எனபைகள் – இரண்டுஞ்சரி.

வருமொழி ஒருமையானல அது உருபும், வருமொழி பன்மையானல அகர உருபும வரும்

(16) மணியின் கண் உள்ளது ஒளி, மரத்கின் கண் உள்ளது கிளி – இந்த இரண்டு வாக்கியங்களில் வேற்றுமை உருபினை விளக்குக.

இச் சொற்றொடர்களின் "கண்" என்ற ஏழாம் வேற்றுமையின் உருபு வந்துள்ளது.

முதல் வாக்கியத்தில் 'கண்' என்ற உருபு தற்கிழமை இடப்பொருளில் வந்துள்ளது.

இரண்டாவது வாககியத்தில் "கண்" என்ற உருபு பிறிதின்கிழமை இடப்பொருளில வந்துள்ளது.

(17) எட்டாம் வேற்றுமையினை விளக்குக ?

ஒரு பெயரில் ஈற்றெழுத்து மாறுபட்டும், குறைந்தும் மிகுந்தும், இயல்பாக நின்றும், ஈற்றுக்கு அயல் எழுத்து வேறுபட்டும் அழைப்புப் பொருளைத் தந்தால் அது எட்டாம் வேற்றுமை ஆகும்.

குழந்தை–குழந்தாய் வா – ஈற்றெழுத்து மாறுபட்டது
நண்பன் – நண்ப நலமா – குறைந்தது
தாய் – தாயே வணக்கம் – மிகுந்தது
தம்பி – தம்பி! கேள் – இயல்பு
இராமன் – இராமா படி – ஈற்றயலெழுத்து மாறியது

(17) A அண்மைவிளி, சேய்மைவிளி என்றால் என்ன?

பக்கத்தில் இருப்பவரை அழைப்பதாக அமையுஞ் சொல் அண்மை விளி.

தூரத்தில் இருப்பவரை அழைப்பதாக அமையுஞ் சொல் சேய்மை விளி.

(18) வேற்றுமை ஏற்காத பெயர்கள் யாவை?

நீயிர், நீவிர், நீ என்ற முன்னிலைப் பெயர்களும், நான் என்ற தன்மைப்பெயரும் எழுவாயல்லாத மற்ற ஏழு வேற்றுமைகளையும் ஏற்கா.

(19) வினைச் சொல்லின் இலக்கணம் யாது?

வினைச்சொல் என்பது ஒரு பொருளின் தொழிலை உணர்த்தும் சொல்லாகும். அது வேற்றுமையை ஏற்காமல் காலத்துடன் தோன்றும். இது தெரிநிலை வினை, குறிப்பு வினை என இரண்டு வகைப்படும்.

(20) வினை முற்றுக்கள் எவ்வெவற்றைக் காட்டும் ?

வினை முற்றுக்கள் திணை, பால், எண், இடம், காலம் ஆகியவற்றைக் காட்டும்.

(21) தெரிநிலை வினை, குறிப்பு வினை இவற்றை விளக்குக?

செய்பவன், கருவி, இடம், செயல், காலம், செயப்படு பொருள் ஆகிய ஆறுவகைப் பொருளையும் வெளிப்படையாக உணர்த்துவது தெரிநிலை வினைமுற்று எனப்படும்.

(உ-ம்) குயவன் பானையை வனைந்தான்.

இத் தொடரில் மேற்கூறிய ஆறும் வெளிப் படையாய் இருப்பது காண்க.

குறிப்பு வினை :- பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற ஆறினையும் அடிப் படையாகக் கொண்டு தோன்றி, கருத்தா, கருவி இடம், செயல், காலம், செயப்படு பொருள் ஆகிய ஆறினுள் கருத்தா. ஒன்றை மட்டும் காட்டுவது குறிப்பு வினை எனப்படும்.

(உ-ம்) இவன் திருவோணத்தான்.

(22) செய்யும் என்னும் வினைமுற்றை விளக்குக?

ஈற்றில் 'உம்' என்னும் விகுதியைப் பெற்று வருகின்ற வினைமுற்று செய்யும் என்னும் வினை முற்றாகும்.

படர்க்கையில் ஆண்பால், பெண்பால், ஒன்றன் பால், பலவின்பால் என்னும் நான்கிலும் வரும் பலர்பால் படர்க்கையிலும், முன்னிலையிலும் தன்மையிலும் வராது.

(23) இடைச் சொல்லாவது யாது ?

தனித்து இயங்கும் ஆற்றல் இல்லாமல், பெயர் வினைகளோடு சேர்ந்து வருகிற வேற்றுமை உருபு, வினையுருபு, சாரியை, உவமையுருபு முதலியவை இடைச் சொல் எனப்படும்.
[பெயருமின்றி வினையுமின்றி அவற்றின் வேறுமாகாமல் இடைத்தன்மையாய் நிற்கும் சொல் இடைச்சொல் என்பதாகும்]

(24) ஏ, ஓ, கொல்-மூன்று இடைச் சொற்களையும் விளக்குக.

'ஏ' என்ற இடைச்சொல் பிரிநிலை, வினா, எண் ஈற்றசை, தேற்றம், இசைநிறை என்ற ஆறு பொருள்களிலும் வரும் உ-ம் :-

இவனே கள்வன் — பிரிநிலை
நீயே எடுத்தாய் — வினா
நிலமே, நீரே, தீயே — எண்
இயம்புவன் எழுத்தே — அசை நிலை
உண்மையே வெல்லும் — தேற்றம்
ஏ ஏ இவளொருத்தி பேடி — இசை நிறை

'ஓ' என்ற இடைச் சொல் ஒழியிசை, வினா, சிறப்பு, எதிர்மறை, தெரிநிலை, கழிவு, அசை நிலை,பிரிப்பு என எட்டுப்பொருள்களிலும்வரும்

(உ-ம்) படிக்கவோ வந்தாய் — ஒழியிசை
நாளை நீ செல்வாயோ — வினா
ஓ ஓ உயர்ந்தவர் — சிறப்பு
நானோ செய்தேன் — எதிர்மறை
ஆணோ பெண்ணோ அலியோ என்று காண முடியாக் கடவுள்—தெரிநிலை
ஓ ஓ தமக்கோர் உறுதி உணராரோ-கழிவு
காணிய வம்மினோ—அசை நிலை
இவனோ அப்பொருளைத் திருடியவன்-பிரிநிலை

"கொல்" என்ற இடைச்சொல் ஐயம், அசை நிலை என இரு பொருள்களிலும் வரும்.

(உ-ம்) அவன் இராமன் கொல்-ஐயப்பொருளில் வந்தது. கற்றதனாலாய பயனென் கொல் - அசைநிலைப் பொருளில் வந்தது.

(25) உம் என்ற இடைச்சொல் எப்பொருளில் வரும்?
எதிர்மறை, சிறப்பு, ஐயம், எச்சம், முற்று, எண், தெரிநிலை, ஆக்கம் என்ற எட்டுப் பொருள்களிலும் வரும்.

(26) உரிச்சொல்லின் இலக்கணம் யாது?
பலவகைப்பட்ட பண்புகளைத் தெரிவிக்கின்ற பெயராய், அவ்வாறு தெரிவிக்குமபோது, ஒரு குணத்தையும், பலகுணங்களையும் தெரிவிப்பனவாய், பெயர்வினைச் சொற்களை விட்டு நீங்காதனவாய், செய்யுட்கே உரியனவாய் வருபவை உரிச் சொற்களாம்.

(27) கடி என்ற உரிச்சொல் தரும் பொருள்கள் யாவை?
கடி என்ற சொல் காவல், கூர்மை, மணம், அச்சம், ஒளி, ஒலி, புதுமை, மிகுதி, மன்றல், கரிப்பு, சிறப்பு, விரைவு முதலிய பலகுணங்களை உணர்த்தும்.
(உ-ம்) கடியுடை வியனகர் – காவல்
கடி நுனைப் பகழி – கூர்மை

(28) 'மிகுதி' என்னும் பண்பை உணர்த்தும் உரிச் சொற்கள் யாவை?
சால, உறு, தவ, நனி, கழி, கூர் என்னும் உரிச் சொற்கள் 'மிகுதி' என்னும் பண்பை உணர்த்துவனவாகும்.
(உ-ம்) 1. சாலப் பேசினன் 2. உறுபொருள்
2. தவப்பல 4. நனிமேதை
5. அன்பு கூர் மனம் 6. கழிபேருவகை

III (1) வழக்கு என்பது யாது? அஃது எத்தனை வகைப் படும்?
உலக நடையிலும், செய்யுள் நடையிலும் மக்கள் சொற்களை வழங்கும் முறை வழக்கு எனப்படும். அது இயல்பு வழக்கு, தகுதி வழக்கு என இரண்டு வகைப்படும்.

(2) இயல்பு வழக்கு தகுதி வழக்கு - இதனை விளக்குக?

இயல்பு வழக்கு — மக்களால் இயல்பாகப்பேசப் படுவது இயல்பு வழக்காகும் அஃது இலக்கணம் உடையது, இலக்கணப் போலி, மரூஉ என மூவகைப்படும். இலக்கணம உடையது— இலக்கண அமைதியுடன் வருவன எல்லாம் (உ-ம்) மனிதன், மிருகம்.
இலக்கணப்போலி — இலக்கணம் இல்லையாயினும் இலக்கணமுடையது போல நெடுநாட்களாக வழங்கிவரும் சொல்
(உ-ம்) நகர்ப்புறம், வாயில்
மரூஉ ஒரு சொல் தன் நிலையினின்றும் மாறித் தனக்கே உரிய பொருளை உணர்த்துவது.
மயிலாப்பூர் — மயிலை
தஞ்சாவூர் — தஞ்சை
தகுதி வழக்கு - ஒரு பொருளுக்கு இயல்பாய் அமைந்த சொல்லைத் தகுதியன்று என்று நீக்கி இங்ஙனம் வழங்குதலே தகுதி எனப் பலரும் புதியமுறையில் பெயரிட்டுக் கூறுதல் தகுதி வழக்காம். அஃது இடக்கரடக்கல், மங்கலம். குழூஉக்குறி என மூவகைப்படும்.
கண்ணைத் துடைத்துக்கொள் — இடக்கரடக்கல்
காந்தியடிகள் துஞ்சினார் — மங்கலம்
பறி (பொன்—பொற்கொல்லர் வழங்கும் சொல்) — குழூஉக் குறி

(2) A கீழ் வருவன எவ்வெவ்வாறு மருவி வரும என வரைக?
யாறு, பொழுது, பெயர், உறையூர், வாயில், யாமை, உவகை.
இவை ஆறு, போழ்து, பேர், உறந்தை, வாசல், ஆமை, ஓகை என மருவி வரும்.

(2) B இடக்கரடக்கல், குழூஉக்குறி — இவற்றிற்குப் பொருள் எழுதி ஒவ்வொன்றிற்கும் எடுத்துக் காட்டும் தருக.
**இடக்கரடக்கல்** — அவையிலே சொல்லத் தகாத சொல்லை அவ்வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற் சொல்லுதல்.
உ-ம் :— கால் கழுவி வந்தேன்.

குழூஉக்குறி — ஒவ்வொரு கூட்டத்தார் ஒரு பொருளுக்கு இயல்பாய் அமைந்த சொல்லை பொருள் விளங்குமாறு பேசும் சொற்குக் குழூஉக்குறியென்று பெயர் உ-ம் : வேடர்களைச் சொல் விளம்பி, என்பர். இக்காலத்தில் இவ்வழக்கினை வணிகர்களிடத்தில் காணலாம்.

(3) தொகை நிலைத் தொடர் — இதனை விளக்குக ?
பெயர்ச் சொல்லோடு பெயர்ச் சொல்லும், வினைச் சொல்லும் தொடர்ந்து நிற்க, வேற்றுமையுருபோ, உவமையுருபோ, பண்புருபோ, பிறவோ மறைந்து நின்று பொருளைவிளக்குமேயானால் அது தொகைநிலைத் தொடர் எனப் படும்.

(4) தொகை நிலைத் தொடர் ஆறினையும் விளக்குக ?
பாடம் படித்தான் — வேற்றுமைத் தொகை
கொல்யானை — வினைத் தொகை (மூன்று காலம் காட்டும்)
கருங்குதிரை — பண்புத்தொகை
மதிமுகம் — உவமைத் தொகை
சேர, சோழ, பாண்டியர்-உம்மைத்தொகை
பொற்றொடி வந்தாள் — அன்மொழித்தொகை

(4) A அன்மொழித் தொகை — பொருள் என்ன ?
அல் + மொழி + தொகை. அல்லாத மொழி மறைந்து நிற்றல். அதாவது வேற்றுமைத் தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத் தொகையின் புறத்தே அல்லாத மொழி மறைந்து நிற்றல் என்பதாம்.

(1) B **கீழ்க்கண்டவைகள் இன்னின்ன தொகை நிலைத் தொடர் என்பதைக் குறிப்பிடுக.**
**1. புலிப்பாய்ச்சல், 2. மதிமுகம், 3. ஆடுபாம்பு, 4. கருமேகம், 5. சேர சோழர், 6. தாழ்குழல் (வந்தாள்).**

1. ஆறும் வேற்றுமைத் தொகை, 2. உவமைத் தொகை, 3. வினைத்தொகை, 4. பண்புத் தொகை, 5. உம்மைத்தொகை, 6. அன் மொழித் தொகை.

(5) தொகா நிலைத் தொடர் என்றால் என்ன ?
நிலைமொழியும் வருமொழியும் புணரும்போது இடையில் ஒன்றும் மறையாமல் அவ்வாறே நிற்பது.
இது தெரிநிலை வினை முற்றுத் தொடர், குறிப்பு வினைமுற்றுத்தொடர், பெயரெச்சத்தொடர், வினையெச்சத்தொடர், எழுவாய்த் தொடர், விளித் தொடர், இடைச்சொல் தொடர், உரிச் சொல் தொடர், அடுக்குத் தொடர் என ஒன் பது வகைப்படும்.

(5) A கீழ்க்கண்டவை என்னென்ன தொடர்கள் என் பதைக் குறிப்பிடுக?

1. முருகன் வந்தான், 2. வந்தான் கண்ணன், 3. வந்த இராமன், 4. வந்து போ, 5. நல்ல பையன், 6. கண்ணனைக் கூப்பிடு, 7. கண்ணா வா, 8. தீத்தீ.
1. எழுவாய்த் தொடர், 2. தெரிநிலை வினை முற்றுத் தொடர், 3. தெரிநிலை பெயரெச்சத் தொடர், 4. தெரிநிலை வினையெச்சத் தொடர் 5. குறிப்புப் பெயரெச்சத் தொடர், 6. இரண் டாம் வேற்றுமைத் தொகா நிலைத் தொடர் 7. விளித்தொடர், 8. அடுக்குத்தொடர்.

(6) புணர்ச்சி என்பது யாது? அஃது எத்தனை வகைப்படும் ?
மெய்யெழுத்தையோ, உயிரெழுத்தையோ இறுதியாக உடைய நிலைமொழி, மெய்யெழுத் தையோ, உயிரெழுத்தையோ முதலாகவுடைய வருமொழியுடன் ஒன்று சேர்வது புணர்ச்சி எனப்படும்.
அஃது இயல்புப் புணர்ச்சி, விகாரப் புணர்ச்சி என இருவகைப்படும்.

(7) இயல்பு புணர்ச்சி என்றால் என்ன?
நிலைமொழியும் வருமொழியும் சேரும்போது யாதொரு மாறுபாடும் அடையாதிருப்பதும், நிலைமொழி இறுதியிலுள்ள மெய்யெழுத்தின் மேல வருமொழி முதலில் வரும் உயிரெழுத்து ஏறிமுடிவதும் இயல்பு புணர்ச்சி எனப்படும்.
(உ-ம்) மணி + பெரிது மணிபெரிது.
வேல் + எறிந்தான = வேலெறிந்தான்.

(8) விகாரப் புணர்ச்சி என்றால் என்ன? விளக்குக.
நிலைமொழியும் வருமொழியும் தோன்றல், திரிதல், கெடுதல் என்னும விகாரங்களில் ஒன்றோ பலவோ அடைந்து புணர்வது விகாரப் புணர்ச்சியாகும்.
பூ + கொடி = பூக்கொடி--தோன்றல்.
கள் + குடம் = கட்குடம்—திரிதல.
மரம் + வேர் = மரவேர்—கெடுதல்.

(9) உடம்படு மெய் என்றால் என்ன! விளக்குக?
நிலைமொழி ஈற்றிலுள்ள உயிரெழுத்தோடு வருமொழி முதலில் வரும் உயிரெழுத்துப புணரும்போது இரண்டிற்கும் இடையில் ய், வ் என்னும் மெய் எழுத்துக்கள் தோன்றும், அவை யகரஉடம்படு மெய். வகர உடம்படு என இருவகைப்படும்.
மணி + அழகு = மணியழகு — யகர உடம்படு மெய்
நிலா + அழகு = நிலாவழகு — வகர ,, ,,

(10) புளியங்காய் – இப்புணர்ச்சியில் உள்ள சொற்களைப் பிரித்து, அவை புணருங்கால உண்டான விகாரங்களை வரைக
புளி + காய் என்பது, அபசாரியைய தோன்றி, புளி + அம் + காய் என்றாகி புளி + அம் என்பதற்கிடையில் 'ய்' உடம்படுமெய் பெற்று புளி + ய் + அம் என்றாகி அம் + காய் என்பது மகரம் வருமொழிக் ககரத்துக்கு இனமான ஙகரமாய்த் திரிந்து புளியங்காய் என்றாயிற்று.

(11) மெய்யீற்றின்முன் உயிர் வருங்கால் எங்கு ஒற்றிரட்டிக்கும்? எங்கு இரட்டிக்காது? உதாரணத்தொடு விளக்குக.

தனிக்குறில் முன் ஒற்றுக்கள் உயிர் வருங்கால் இரட்டிக்கும்.

உ-ம்: பொன் + அரிது = பொன்னரிது.
கல் + எறிந்தான் = கல்லெறிந்தான்.

பிற இடங்களில் ஒற்று இரட்டிக்காது.

உ-ம்: கந்தன் + ஓடினன் = கந்தனோடினன்.
புயல் + எழுந்தது = புயலெழுந்தது.

(12) வரக்கண்டான், பலாக்காய் இதனைப் பிரித்துப் புணர்ச்சி விதி கூறுக.

வர + கண்டான் = வரக்கண்டான்
பலா + காய் = பலாக்காய்

"இயல்பினும் விதியினும் நின்ற உயிர் முன் கசதபமிகும் விதவாதன மன்னே" என்ற விதியினல் "க்" என்ற எழுத்துத்தோன்றியது

(13) காசமைத்தான், காசியாது–இதனைப் பிரித்து விதி கூறுக

காசு + அமைத்தான் = காசமைத்தான்.
காசு + யாது = காசியாது.

விதி :– 'உயிர்வரின் உக்குறள் மெய் விட்டோடும் யவ்வரின் இய்யாம் முற்றும் அற்று ஒரோவழி'

(14) பிரித்துக் காட்டுக :-

கோயில், செய்வதியாது, பூட்டுடைந்தது, குருட்டுக்கண், பலாவிலை, மனத்துயர்.

கோ + இல், செய்வது + யாது, பூட்டு + உடைந்தது, குருடு + கண், பலா + இலை, மனம் + துயர்.

(15) யாப்பின் உறுப்புக்கள் எவை ?

எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்பன யாப்பின் உறுப்புக்களாகும்.

(16) அசையாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்?
எழுத்தினால் ஆக்கப்பட்டு சீர்க்கு உறுப்பாய் வருவது அசை, அது நேரசை, நிரையசை என இருவகைப்படும்.

(17) சீர் என்றால் என்ன? அஃது எத்தனை வகைப் படும்?
அசைகள் சிறுபான்மை தனித்தும், பெரும் பான்மை இரண்டு முதல் நான்கு வரை தொடர்ந்தும் வருவது சீர் எனப்படும்.
ஓரசைச் சீர், ஈரசைச் சீர், மூவசைச் சீர், நாலசைச் சீர் என நான்கு வகைப்படும்.

(18) மாச்சீர், விளச்சீர். காய்ச்சீர், கனிச்சீர் – ஒவ் வொன்றையும் விளக்கி உதாரணம் தருக
ஈரசைகளாலாகிய சீர்களில் 'நேர்' ஈற்றில் பெற்று வருவது மாச்சீராகும். அவைகள் நேர்நேர்-தேமா, நிரைநேர்—புளிமா.
ஈரசைச் சீர்களில் நிரையசையால் முற்றுப் பெறும் சீர்விளச் சீராகும். அவைகள் நேர் நிரை கூவிளம்; நிரை நிரை கருவிளம்.
மூன்று அசைகளாலாகிய சீர்களால் நேரசை முற்றுப் பெருஞ்சீர் காய்ச்சீராகும். அவைகள் நேர் நேர் நேர்-தேமாங்காய்; நிரைநேர்நேர்-புளிமாங்காய், நேர்நிரைநேர் – கூவிளங்காய், நிரை நிரை நேர் – கருவிளங்காய்.
மூவசைச் சீர்களில் 'நிரை யசையை ஈற்றில் பெற்று வருஞ்சீர் கனிச்சீராகும். அவைகள் : நேர் நேர் நிரை – கருவிளங்கனி.

(19) 'ஆன முதலில் அதிகம் செலவானால்
மான மழிந்து மதிகெட்டுப் – போனதிசை
எல்லார்க்குங் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.
இச்செய்யுளில் வந்துள்ளசீர்களை அசைகளாகப் பிரித்து, ஒவ்வொரு சீருக்கும் உரிய வாய்ப் பாட்டைக்கூறுக.

| தேமா | புளிமா | புளிமா | புளி மாங்காய் |
|---|---|---|---|
| நேர்நேர் | நிரைநேர் | நிரைநேர் | நிரைநேர்நேர் |

ஆன முதலில் அதிகம் செலவானல்
தேமா புளிமா புளிமாங்காய் கூவிளங்காய்
நேர்நேர் நிரைநேர் நிரைநேர்நேர் நேர்
நிரைநேர்

மான மழிந்து மதிகெட்டுப் – போனதிசை
தேமாங்காய் கூவிளம் கூவிளங்காய் கூவிளம்
நேர் நேர் நேர் நேர்நிரை நேர்நிரைநேர்
நேர்நிரை

எல்லார்க்குங் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
தேமாங்காய் கூவிளம் காசு
நேர் நேர் நேர் நேர் நிரை நேர் நேர்
நல்லார்கும் பொல்லனும் நாடு

(20) அணியாவது யாது ?

செய்யுட்கு அழகு செய்து நிற்பது அணி எனப்படும்.

(20) A இயல்பு நவிற்சியணியை விளக்குக.

யாதேனும் ஒன்றை, அஃது உள்ளது உள்ள படியே அழகுற எடுத்துக் கூறின் அஃது இயல்பு நவிற்சி யணியாகும்
(உ-ம்) தீ சுடும் தன்மையது.

(21) உயர்வு நவிற்சி அணியை விளக்குக.

புலவன் தான் கருதிய பொருளின் சிறப்பைச் சொல்லுங்கால் அதன் சிறப்பினை எல்லை கடந்து மிகுத்துச் சொல்வது.
''காற்றினும் கடிது சென்ருன்''-இத் தொடரில் கடிது சென்ற தன்மையை மிகைப்படுத்திக் கூறியுள்ளமை காண்க.

(22) உருவக அணியை விளக்குக

உவமானத்தில் உவமேயத்தின் தன்மையை ஏற்றிக் கூறுவது உருவக அணி எனப்படும். இரண்டையும் வேறுபாடின்றிக் கூறுவது.
(உ-ம்) வையந் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச்–செய்ய
சுடரொளியான் அடிக்கே சூட்டுவன்
சொல்மாலை
இடராழி நீங்கவே யென்று

இப்பாட்டில் உலகத்தை அகலாகவும், நீண்ட கடலை நெய்யாகவும், கதிரவனை விளக்காகவும், சொல்லை மாலையாகவும், துன்பத்தைக் கடலாக வும் உருவகப்படுத்தியுள்ளமை காண்க.

(23) உவமைக்கும் உருவகத்திற்கும் உள்ள வேறு பாடுகள் யாவை ?

| உவமையணி | உருவக அணி |
|---|---|
| (1) உவமை முன்னும் பொருள் பின்னுமாக நிற்கும். | (1) பொருள் முன்னும் உவமை பின்னுமாக நிற்கும். |
| (2) உவமை வேறு. பொருள் வேறு என்பது தெரியுமாறு கூறுவது. | (2) உவமையும் பொருளும் ஒன்றென எண்ணுமாறு கூறுவது. |
| (3) போலி முதலிய உவம உருபுகளில் ஒன்று உவமைக்கும் பொருளுக்கும் இடையே மறைந்தோ வெளிப்பட்டோ வருவது. | (3) உவம உருபுகளே வாரா. 'ஆனல்', 'ஆகிய', 'என்னும்' என்பன போன்ற சொற்கள் இடையே மறைந்தோ வெளிப்பட்டோ வருவது. |

(24) பின்வரும் உவமைகளை உருவகமாக மாற்றுக :- (1) மேகம் போன்ற பாரி (2) சிங்கம் போன்ற சீவகன் (3) யானை யனைய கட்டியங்காரன்.

உருவகம் :- பாரியாகிற மேகம், சீவகன் என்னும் சிங்கம், கட்டியங்காரனுகிய யானை.

# பத்தாம் வகுப்பு.

## [இலக்கண வினு விடை]

---

(1) உயிரளபெடையாவது யாது? அதன் வகைகள் யாவை?

உயிரெழுத்து தனக்குரிய மாத்திரையின் மிக்கொலித்தலுக்கு உயிரளபெடை என்று பெயர். உயிர் + அளபு + எடை = உயிரெழுத்து தனக்குரிய ஓசை அளவின் (மாத்திரையின்) மிகுதல். செய்யுளில் ஓசை குறையும் பொழுது அவ்வோசையை நிறைக்க சொல்லுக்கு முதலிலும் இடையிலும் இறுதியிலும் நின்ற நெடடெழுத்துக்கள் ஏழும் தமக்குரிய இரண்டு மாத்திரைகளின் மிகுந்து ஒலிக்கும். அவ்வாறு அளபெடுத்தமையை அறிதற்கு அறிகுறியாக அளபெடுத்த நெட்டெழுத்துக்களுக்குப் பின் அவ்வவற்றிற்கு இனமான குற்றெழுத்துக்கள் வரி வடிவில் அமைக்கப்படும்

(உ-ம்) ஓ ஓதல வேண்டுர்; செருஅஅய் வாழிய நெஞ்சு; நலல படாஅபறை.

உயிரளபெடை :- செய்யுளிசை யளபெடை, இன்னிசையளபெடை, சொல்லிசையளபெடை என்று மூன்று வகைப்படும். மேலே கூறப்பட்ட அளபெடை செய்யுளிசையளபெடையாம் இவ்வளபெடைக்கு இசை நிறையளபெடை என்ற வேறு பெயரும உண்டு.

**இன்னிசையளபெடை :-** செய்யுளில் ஓசை குறையாதவிடத்தும் இனிய ஓசை உண்டாதற் பொருட்டு அளபெடுத்தலாம.

(உ-ம) "கெடுப்பதூஉம் கெட்டார்க்குச்சார்வாய் மற்றுங்கே எடுப்பதூஉம் எல்லாம் மழை."

**சொல்லிசை யளபெடை:-** செய்யுளில் ஓசை குறையாதவிடத்தும், பெயர்ச்சொல் வினைச் சொல்லாதற் பொருட்டு அளபெடுத்தலாம்.

(உ-ம்) 'உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார் வரனசைஇ யின்னு முளேன்'

நசை — விருப்பம் என்னும் பொருளைத்தந்த பெயர்ச் சொல். 'நசைஇ' என்று அளபெடுத்த பின் விரும்பி என்று வினையெச்சப் பொருள் படுகின்றது.

(2) ஒற்றளபெடை என்பது யாது? அஃது எவ்வாறு வரும்?

ஒற்று + அளபு + எடை = மெய்யெழுத்து தன் அரை மாத்திரையின் மிக்கொலித்தல.
செய்யுளில ஓசை குறையும்போது சொல்லின் இடைகடையாகிய இடங்களில் ஒரு குற்றெழுத்துக்குப் பின்னும், இரண்டு குற்றெழுத்துக் களுக்குப் பின்னும ங். ஞ், ண், ந். ம், ன், வ், ய், ல், ள் என்ற பத்து மெய்யெழுத்துக்களும், ஆய்த எழுத்தும் அளபெடுக்கும். அவ்வாறு அளபெடுததமையை அறிவதற்கு அடையாள மாக அந்தந்த மெய்யெழுத்துக்களே மீண்டும வரி வடிவில அமைககப்படும்.
(உ-ம்) எங்ங்கிறைவனுளன்; இலங்ங்கு வெண் பிறை; கண்ண்; அரண்ண்.

(3) போலி என்றால் என்ன? அஃது எத்தனை வகைப்படும்?

ஒரு சொலலின் முதல், இடை, கடைகளில் ஓரெழுத்துக்குப் பதிலாக மற்றோரெழுத்து வந்தாலும பொருள் மாறுபடாமலிருப்பது போலி எனப்படும் மொழி முதற்போலி. மொழியிடைப் போலி, மொழியிறுதிப் போலி என மூவகைப்படும்.
(உ-ம்) மஞ்சு – மைஞ்சு; இலஞ்சி – இலைஞ்சி; மரம்–மரன்

(4) எவ்வெவ்வெழுத்துக்களுக்கு எவை யெவை சாரியைகளாக வரும்?

மெய்யெழுத்துக்களுக்கு அகரச் சாரியையும், உயிர் நெட்டெழுத்துக்களுக்குக் காரச்சாரியை யும், ஐ, ஔ என்னும் எழுததுக்களுக்குக் காரச் சாரியையுடனே கான்சாரியையும், உயிர்க் குற்றெழுத்துக்களுக்கும் உயிர்மெய்க்

குற்றெழுத்துக்களுக்கும் காரம், கான்சாரியை களுடன் கரம் என்னும் சாரியையும் வரும்.

(5) பெயர்கள் விளி வேற்றுமை ஏற்கும்போது எவவாறு வேறுபடும் ?

பெயர்கள் விளிவேற்றுமை ஏற்கும்போது இயல்பாய் வருதலன்றி ஈறு திரிதல், ஈறு குன்றல், ஈறு மிகுதல், ஈற்றயல் திரிதல் முதலிய விகாரங்களைப் பெற்று வரும்.

(உ—ம) நம்பி, அன்னாய்; நண்ப; அரசனே; மக்காள்.

(5) A வேற்றுமை உருபை ஏற்கும்பொழுது தன்மை, முன்னிலை படர்க்கைப் பெயர்கள் எவ்வாறு வேறுபடும் ?

**தன்மை** :—. **யான்**. **நான்** என்பவை **'என்'** என்றும் **யாம்** என்பது **எம்** என்றும் **நாம்** என்பது **நம்** என்றும் **யாங்கள், நாங்கள்** என்பன **எங்கள்** என்றும் திரியும்.

**முன்னிலை**.:— **நீ** என்பது **உன்** என்றும், **நீயிர், நீவிர். நீர்** என்பன **நும்** என்றும். **நீங்கள்** என்பது **உங்கள்** என்றும் திரியும்.

**படர்க்கை** :- **தான்** என்பது **தன்** என்றும், **தாம்** என்பது **தம்** என்றும். **தாங்கள்** என்பது **தங்கள்** என்றும் திரியும்.

(6) விளி ஏலாத பெயர்கள் யாவை ?

தன்மைப்பெயர்களும் முன்னிலைப் பெயர்களும். நுமன், நுமள், நுமர் முதலிய கிளைப் பெயர் களும், சுட்டுப் பெயர்களும், வினைப்பெயர்களும் தான் தாம் என்ற பொதுப் பெயர்களும், பிறன் பிறள், பிறர் முதலிய பெயர்களும விளியேலாப் பெயர்களாம்.

(7) தெரிநிலை வினைமுற்று. குறிப்பு வினை முற்று இவைகளை விளக்கி உதாரணந் தருக.

வினை செய்யுங் கருத்தா, வினைக்குரிய காரணங்கள். வினை நிகழும் இடம், வினையின் நிகழ்ச்சி, காலம், செய்யப்பட்ட பொருள்

ஆறினையும் வெளிப்படையாக உணர்த்திவரும் வினைமுற்று தெரிநிலை வினைமுற்றாகும்.
(உ-ம) குயவன் குடம் வனைந்தான்
பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் ஆறனுள் ஒன்றினடியாக அதனிடத்தே பிறந்து மேல் தெரிநிலை வினைக்குச் சொல்லப்பட்ட ஆறனுள் செய்ப வனை மட்டும் தெரிவித்து வருவது குறிப்புவினை முற்றாகும். (உ-ம) கமலம் குழையள்.

(9) பகுபத உறுப்புக்கள் யாவை?
(i) பகுதி அல்லது முதனிலை (ii) விகுதி அல்லது இறுதி நிலை (iii) இடை நிலை (iv) சாரியை (v) சந்தி (vi) விகாரம் என்னும் ஆறும் பகுபத உறுப்புக்களாகும.

(9) பாடினான், சென்றான், வருகின்றார், கூறுவாள்-இவற்றில் எவ்வுறுப்புக்கள் அமைந்துள்ளன? பிரித்து எழுதுக
பாடு+இன்+ஆன்.—பாடு-பகுதி, இன்-இறந்த கால இடைநிலை, ஆன்—ஆண்பால் வினைமுற்று விகுதி, செல்(ன்)+ற்+ஆன்; செல்—பகுதி 'ல்' என்பது 'ன்', ஆனது விகாரம். ற்—இறந்தகால இடைநிலை, ஆன-ஆண்பால் வினைமுற்று விகுதி வா (வரு)+கின்று+ஆர்; வா—பகுதி, வரு—என்றாகியது விகாரம், கின்று-நிகழ்கால இடைநிலை; ஆர்—பலர்பால் வினைமுற்று விகுதி.

(10) வலைஞன், இடைச்சி, மறவன். நுளையர், குறத்தியர்—இவற்றில் வந்த பெயரிடை நிலைகளை எழுதுக.
ஞ், ச், வ், ய், த்—இவைகளே பெயரிடை நிலைகள்

(11) வினையெச்சம் எவற்றைக் கொண்டு முடியும்? ஒவ்வொன்றுக்கும் உதாரணம் தருக
வினையெச்சமானது வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம். வினையாலணையும் பெயர் தொழிற் பெயர் ஆகியவைகளைக் கொண்டு முடியும்.

(உ-ம்) கேட்டு அறிந்தான்; கேட்டு அறிந்த செயல்; கேட்டு அறிந்து செய்தான்; கேட்டு அறிந்தவன் வந்தான்; கேட்டு அறிதல் நல்லது.

(12) படர்க்கையில் ஒருமைக்குரிய வினைமுற்றுக்கள் யாவை? பன்மைக்குரியன யாவை?

படர்க்கையில் ஆண்பால் வினைமுற்று, பெண்பால் வினைமுற்று, ஒன்றன்பால் வினைமுற்று மூன்றும் ஒருமைக்குரிய வினைமுற்றுக்களாம். பலர்பால் வினைமுற்று, பலவின்பால் வினைமுற்று இரண்டும் பன்மைக்குரிய வினைமுற்றுக்களாம்.

(13) ஏவல்வினைமுற்று, வியங்கோள் வினைமுற்று — இவைகளின் இலக்கணத்தை எழுதி உதாரணம் தருக.

ஏவல் வினைமுற்று :- கட்டளைப் பொருளை உணர்த்தும் வினைமுற்றாகும். இது முன்னிலை இடத்திற்கே உரியதாய் எதிர்காலத்தைக் காட்டுகிறது. [best reading: யுணாதகி நிறகும]

(உ-ம்) நீ நடவாய் நீர் உண்ணும்.

வியங்கோள் வினைமுற்று :- கட்டளை, வேண்டிக்கோடல், வாழ்த்துதல், வைதல் முதலிய பொருள்களில் ஐம்பால் மூவிடங்கட்கும் பொதுவாகி க, ய, ர முதலிய விகுதிகளைப் பெற்று வரும் வினைமுற்றாகும். அ, அல், தல் என்ற விகுதிகளைப் பெற்று வருதலும் உண்டு.

(உ-ம்) நீ செய்க, அரசே அமர்க, அரசே வாழ்க, பரந்து கெடுக.

(14) செல்வாய் செய்மின்—இவைகளை ஏவல் வினைமுற்றுக்கள் என்று ஏன் கூறுதல் வேண்டும்?

இவைகள் முறையே ஒருமையிலும், பன்மையிலும் கட்டளைப் பொருளை உணர்த்தி வருகின்றபடியால் ஏவல்வினை முற்றுக்களாம்.

(15) ஏவல் வினைமுற்றுக்கும், வியங்கோள் வினைமுற்றுக்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?

| ஏவல் | வியங்கோள் |
| --- | --- |
| (1) கட்டளைப்பொருளில் மட்டும் வரும் | (1) வாழ்த்துதல் வைதல் பொருள்களில் வரும் |
| (2) முன்னிலையில் மட்டும் வரும் | (2) ஐம்பால் மூவிடங்களில் வரும் |
| (3) ஒருமை, பன்மை என்ற பிரிவு உண்டு. | (3) அப்பிரிவு இல்லை. |

(16) முக்கால இடைநிலைகள் யாவை?

த், ட், ற், இன் — இறந்தகால இடைநிலைகளாம்.
ஆநின்று, கின்று, கிறு — நிகழ்கால இடைநிலைகளாம்.
ப், வ் — எதிர்கால இடைநிலைகளாம்.

(17) இடைச்சொல்லின் இலக்கணம் யாது?

பெயர்ச்சொல், வினைச்சொற்களைப் போலத் தனித்து வந்து பொருளுணர்த்தாமல் அவற்றைச் சார்ந்து முன்னும் பின்னும் இடையிலும் வந்து பொருளுணர்த்தும். வேற்றுமை உருபு, உவமையுருபு, சுட்டு, வினா, சாரியை, விகுதி முதலியனவும், தமக்கெனப் பொருளுடைய ஏ, ஓ, மன், மற்று முதலியனவும், இடைச்சொற்களாம்.

(18) மன் என்னும் இடைச்சொல் எவ்வெப்பொருள்களில் வரும்? உதாரணம் தருக.

மன் என்னும் இடைச்சொல்லானது அசைநிலை, ஒழியிசை, ஆக்கம், கழிவு, மிகுதி, நிலைபேறு என்னும் ஆறு பொருள்களில் வரும்.

(உ-ம்) அதுமன் கொண்கன் தேரே — அசைநிலை
கூறியதோர் வாள்மன் — ஒழியிசை
பண்டுகாடுமன் — ஆக்கம்
சிறியகட் பெறினே எமக்கீயுமன்னே — கழிவு
எந்தை எமக்கருளுமன் — மிகுதி
மன்னுயிர் — நிலைபேறு.

(18) A 'மற்று' என்னும் இடைச்சொல் எவ்வெப் பொருளில் வரும்?

"மற்று" என்னும் இடைச்சொல் வினைமாற்று, அசைநிலை, பிறிது என்னும் பொருள்களில் வரும்.

(உ-ம்) 'மற்று அறிவாம் நல்வினை யாம் இளையம் என்னாது' இதனுள் நல்வினையை விரைந்து அறிவாம் என்னும் வினைக்கு மாறாக, விரையாது அறிவாம் என்னும் பொருளைத் தருதலின் வினைமாற்று

மற்றென்னை ஆள்க — அசைநிலை

இது விடுத்து மற்றொன்று செய் — வேறு என்னும் பொருளை தருதலால் — பிறிது.

(18) B 'என' "என்று" என்னும் இடைச்சொற்கள் எவ்வெப் பொருளில் வரும்?

வினை, பெயர், குறிப்பு, இசை, எண், பண்பு என்னும் ஆறு பொருள்களில் வரும்?

கொள்ளெனக் கொண்டான் — வினை
அழுக்காறு என ஒரு பாவி — பெயர்
தலை விண்ணென்ன இசைத்தது — குறிப்பு
ஒல்லென ஒலித்தது — இசை
நிலனென, நீரென, தீயென
வளியென வானென
பூதங்களைந்து — எண்
வெள்ளென விளர்த்தது — பண்பு

என்று என்பதையும், என என்பதை எடுத்து விட்டுச் சேர்த்துப் பொருள் கூறுக.

(19) உரிச்சொல்லின் இலக்கணம் யாது?

பெயர் வினைகளைப் போலத்தனித்து வழங்குதல் இலலாமல் அப்பெயர் வினைகளைச் சார்ந்து அவற்றின் குணத்தை உணர்த்துவனவாயும், செய்யுளுக்கு உரியனவாயும் வரும் சொல் உரிச்சொலாகும்.

(20) மல்லல், 'கெழு' என்னும் உரிச்சொற்கள் எவ்வெப் பொருள்களில் வரும்?

மல்லல் என்னும் உரிச்சொல் வளப்பம் என்னும் பொருளிலும், 'கெழு', என்னும் உரிச்சொல் நிறம் என்னும் பொருளிலும் வரும். (கெழு என்பது கேழ் என்று வரும்)

(உ-ம்) மல்லல மாலவரை; மாக்கேழ் மடநல்லார்.

(21) குறிப்பினால் பொருள்தரும் சொற்கள் யாவை?
ஒன்றொழி பொதுச்சொல், விகாரம், தகுதி, ஆகுபெயர், அன்மொழித்தொகை, வினைக்குறிப்பு, முதற்குறிப்பு, தொகைக் குறிப்பு முதலிய பலவும் குறிப்பால் பொருளுணர்த்துவன வாகும்.

(22) ஒன்றொழி பொதுச்சொல், முதற் குறிப்பு, தொகைக் குறிப்பு — இவை பொருள்தரும் முறைகளை விளக்கு

(i) ஒன்றொழி பொதுச்சொல் : — இம்மாடுகள் பால் கறந்தன. 'கறந்தன' என்ற குறிப்பால் மாடுகள் என்ற அஃறிணை பொதுப் பெயர் காளைகளை விலக்கிப் பசுக்களை உணர்த்தியது.

(ii) முதற் குறிப்பு :— 'கோடையிலே' என்பது பாடினன். இது கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் என்று தொடங்கும் அருட்பாவின் பாடலைக் குறிப்பால் உணர்த்தியது.

(iii) தொகைக் குறிப்பு:— கண்ணன் ஐவருக்கு உதவி செய்தான். இதில் ஐவருக்கு என்னும் தொகைச்சொல் கண்ணன் என்னும் குறிப்பால பாண்டவரை உணர்த்தியது.

(23) ஒன்பது வகை விகாரங்கள் எவை ?
வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல் விரித்தல், தொகுத்தல், முதற்குறை, இடைக்குறை, கடைக்குறை என்பன. இவை செய்யுளில் வரும்.

(2 ) மரபு என்றால் என்ன? சில உதாரணங்கள் காட்டி விளக்குக.

எந்தப் பொருளை எந்தச் சொல்லால் எவ்வாறு சான்றோர் வழங்கி வந்தார்களோ அந்தப் பொருளை அந்தச் சொல்லால் அவ்வாறு வழங்கி வருதல் மரபாகும்.

யானை மேய்ப்பானைப் பாகன் என்றும் ஆட்டின் இளமைப் பெயரைக் குட்டி என்றும் கூறுவது மரபாம்.

(25) அடிசில், அணி என்னும் பொதுச்சொற்களை எவ்வினை கொடுத்து முடிக்க வேண்டும்?

அடிசில் என்பது உணவு, அது உண்பன, தின்பன, நக்குவன, பருகுவனவற்றிற்கெல்லாம் பொதுவான சொல், ஆதலால் அடிசில் அயின்றார், மிசைந்தார் என்று பொதுவினையால் முடித்தல் வேண்டும்.

அணி என்பது நகை. அது கவிப்பன, கட்டுவன, இடுவன, தொடுவனவற்றிற் கெல்லாம் பொதுச் சொல். ஆதலால் அதனை அணிந்தார், தாங்கினார் என்னும் பொதுச்சொல்லால் முடித்தல் வேண்டும்.

26) வழுவமைதி என்றால் என்ன? அதன் வகைகளைக் கூறுக.

முடிக்கப்படும் சொற்களோடு முடிக்கும் சொற்கள் திணை, பால், இடம், காலம், மரபு முதலியவற்றில் மாறி நின்று வழுவாக இருப்பினும், அஃது அவ்விதம் இருக்கலாமென்று ஆன்றோர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு வழங்கி வருவது வழுவமைதியாம்.

அவைகள் திணைவழுவமைதி, பால்வழுவமைதி, இடவழுவமைதி, காலவழுவமைதி, மரபு வழுவமைதி எனப்பலவாம்.

(உ-ம்) ஒரு பசுவை 'என் அம்மை வந்தாள்' என்பதில் மகிழ்ச்சியினால் அஃறிணை உயர்திணையாயிற்று—திணை வழுவமைதி.

தன்மகனை 'என் அம்மை வந்தாள்' என்பதில் உவப்பினால் ஆண்பால் பெண்பாலாயிற்று— பால்வழுவமைதி.

தாய் இப்படிச் செய்வேனோ — இதில் 'யான்' என்று கூறவேண்டிய தன்மையிடத்தில் தாய் என்னும் படர்க்கைச் சொல்மயங்கி வந்தது— இடவழுவமைதி. நீ அக்காட்டுவழியே செல்லின் பொருளைப் பறிகொடுத்தாய்—இதில் மிகுதியால் 'பறிகொடுப்பாய்'' என்னும் எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்டது — கால வழுவமைதி.

இம்மாடு யான் கொண்டது — இதில் என்னால் கொள்ளப்பட்டது என்று கூறவேண்டிய மரபினைக் கொண்டது என்று சொல்லப்பட்டது— மரபு வழுவமைதி.

(27 இனங்குறித்தல் ஒருபொருட்பன்மொழி-இவைகளை விளக்குக

ஒருமொழி, ஒழிந்த தன் இனத்தையும் சேர்த்துக குறித்தல் உண்டு. அஃது இனங்குறித்தல் என்று கூறப்படும்.

(உ-ம்) வெற்றிலை தின்றான், நஞ்சுண்டவன் சாவான்—இவைகளில் வெற்றிலை என்னும் பெயர்ச்சொல் ஒழிந்த பாக்கு சுண்ணாம்பு முதலியவற்றையும், நஞ்சுண்டவன் சாவான் என்னும் ஆண்பாற் பெயர், வினைச்சொற்கள் நஞ்சுண்டவள் சாவாள், நஞ்சுண்டவர் சாவார், நஞ்சுண்டது சாகும், நஞ்சுண்டவை சாம் என்னும் ஏனைய நான்குபாற் பெயர்வினைகளையும் கொள்ளுதற்கு உரியனவாய் நின்றமையால் இவை இனங் குறித்தல் என்று வழங்கப்படும்.

**ஒரு பொருட் பன்மொழி:— ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்களைக் கூறுதல் சிறப்புப் பொருளைக் கருதியதானால் அது வழுவன்று.**

அஃது ஒரு பொருட் பன்மொழி என்று வழங்கப்படும்.

(உ–ம) உயர்ந்தோங்கிய மலை—உயர்ந்து என்பதும், ஓங்கிய என்பதும் ஒரே பொருளைத் தருவதாயினும் 'மிகவுயர்ந்த' என்னும சிறப்புப் பொருளை உணர்த்தி வந்தன.

(28) அடுக்குத்தொடருக்கும், இரட்டைக்கிளவிக்கும் உள்ள வேறுபாட்டை விவரிக்க.

| இரட்டைக்கிளவி | அடுக்குத்தொடர் |
|---|---|
| (1) எப்போதும் இரட்டைச் சொல்லாகவே இருக்கும். | (1) இரண்டு, மூன்று, நான்கு முறைவரை அடுக்கிவரும். |
| (2) பிரித்தால் பொருள் தராது | (2) பிரித்தால் ஒவ்வொரு சொல்லும் பொருள் தரும. |
| (3) வினைக்கு அடைமொழியாய்க் குறிப்புப பொருளை உணர்த்தி வரும. | (3) விரைவு, அச்சம், உவகை முதலிய பல பொருள்களை உணர்த்தி வரும். |

(29) பண்புச்சொற்கள் வருமொழியோடு புணரும்போது என்னென்ன மாறுபாடுகளை அடையும்?

பண்புப்பெயர்கள் ஈற்றில் உள்ள 'மை' விகுதி கெட்டும் இடையில உள்ள உகரம் இகரமாயும், முதல் நீண்டும், முதலில் உள்ள அகரம ஐகாரமாகியும், ஒற்று இரட்டித்தும், மெய் திரிந்தும், இனம் மிகுந்தும் வருமொழியோடு புணரும்.

(29) A பைந்தார், வெண்டாமரை, செந்தளிர், கருங்குதிரை இவற்றைப் பிரித்தெழுதுக.

பசுமை + தார்; வெண்மை + தாமரை; செம்மை + தளிர்; கருமை + குதிரை.

(30) எகர வினா முன்னும், முச்சுட்டின் முன்னும் நாற்கணமும் எவ்வாறு புணரும் ?

எகர வினு முன்னும் அ, இ, உ என்னும் மூன்று சுட்டெழுத்துக்களின் முன்னும் உயிரும் யகரமும் வந்தால் வகர மெய் தோன்றும்; யகரம் ஒழிந்த மெய்கள் வரின் அவ்வாறு வந்த மெய்கள் மிகும். செய்யுளில் சுட்டெழுத்து நீண்டு வரின் யகரமெய் தோன்றும்.

(i) எ + உயிர் = எவ்வுயிர் எ + யானை = எவ்யானை
அ + உயிர் = அவ்வுயிர் அ + யானை = அவ்யானை
இ + உயிர் = இவ்வுயிர் இ + யானை = இவ்யானை
உ + உயிர் = உவ்வுயிர் உ + யானை உவ்யானை

(ii) எ + குதிரை = எக்குதிரை
எ + படை = எப்படை
எ + ஙனம் = எங்ஙனம் எ + மனை - எம்மனை
எ + சேனை — எச்சேனை எ + வளை எவ்வளை
எ + ஞாலம் = எஞ்ஞாலம் எ + தண்டு = எத்தண்டு
எ + நாடு - எந்நாடு

மூன்று சுட்டெழுத்துக்களோடும் இவ்வாறே கூட்டிக் காண்க.

(iii) ஆ + இடை = "ஆயிடை"
[அகரச் சுட்டு ஆ என நீண்டது]

**(31) யகரம் ஒழிந்த மெய்யீற்றின் முன் யகர முதன் மொழி வந்தால் எவ்வாறு புணரும் ?**

யகரம் ஒழிந்த ஞ், ண், ந், ம், ன், ம், ர், ல், வ், ழ், ள் என்னும் பத்து மெய்களுள் ஒன்று நிலைமொழியீற்றில் நிற்க, வருமொழி முதல் யகரம் வந்தால் இடையில் இகரம் தோன்றும்.

(உ-ம்) வேள் + யாவன் = வேளியாவன், மண் + யாது = மண்ணியாது தெவ் + யாது = தெவ்வியாது

சில இடங்களில் வேள்யாவான், மண்யாது என இகரம் பெறுமலும் வருதல் உண்டு.

(31) A மெய், கை, நொ, து என்னும் சொற்களுக்கு முன்வரும் மெல்லினம் எவ்வாறு புணரும் ?

இவைகளுக்கு முன்வரும் மெல்லினம் மிகுந்து முடியும்.

(32) ணகர, னகர ஈற்று மொழிகள் வேற்றுமையில் எவ்வாறு புணரும் ? அல்வழியில் எவ்வாறு புணரும்?

ணகர, னகர ஈற்று மொழிகள் வேற்றுமையில் வல்லினம் வர முறையே டகர றகர மெய்களாகத் திரிந்து முடியும்.

மட்குடம், பொற்பணி.

வேற்றுமையில் மெல்லினமும், இடையினமும் வர இயல்பாகும்.

மண்மலை, மண்வன்மை.

பொன்மலை, பொன்வன்மை

அல்வழியில் மூவினமும்வர ணகர னகர மெய் கள் இயல்பாகும்

மண்பெரிது, மண்மாண்டது, மண்யாது.

பொன்பெரிது, பொன்மாண்டது. பொன்யாது.

(33) வேற்றுமைப் புணர்ச்சி என்றால் என்ன? அஃது எத்தனை வகைப்படும் ?

வேற்றுமைப் புணர்ச்சியாவது இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை முடிய வுள்ள ஆறு வேற்றுமையுருபுகளும் இடையில் மறைந்தேனும் வெளிப்பட்டேனும்வர சொற் கள் பொருந்தும் புணர்ச்சியாம்.

உருபு மறைந்து நிற்பது வேற்றுமைத் தொகை என்றும், வெளிப்பட்டது நிற்பது வேற்றுமை விரி என்றுங் கூறப்படும். எனவே வேற்றுமைத் தொகை ஆறு, விரி ஆறுகும்.

(34) அல்வழிப் புணர்ச்சியாவது யாது? அதன் வகை களை உதாரணந் தந்து விளக்குக.

வேற்றுமை அல்லாத வழியில் சொற்கள் வந்து பொருந்தும் புணர்ச்சி அல்வழிப் புணர்ச்சியாம்.

தொகை நிலைத்தொடர், தொகா நிலைத்தொடர் என இருவகைப்படும். அல்வழிப் புணர்ச்சியில் தொகை நிலைத்தொடர் வினைத்தொகை, பண்புத் தொகை, உவமைத்தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை என ஐந்து வகைப்படுப.

**வினைத்தொகை**— பெயரெச்சத்தில் காலங்காட்டும் இடைநிலை, விகுதிகள் குறைந்து, வினைப் பகுதி மாத்திரம் நின்று வருமொழி பெயர்ச் சொல்லோடு சேர்ந்து வருவது.

(உ—ம்) கொல் யானை.

**பண்புத் தொகை**—பண்புச்சொல்லும் பண்பை யேற்ற சொலலும் சேர்ந்து நின்று இடையே பண்பை விளக்கும் மொழியான ஆகிய என்னும் பண்புருபு தொக்கு நிற்பதும், ஒரு பொருளுக்கிருபெயா வருவதுமாம்.

(உ—ம்) செந்தாமரை; சாரைப்பாம்பு.

**உவமைத் தொகை** — உவமானமும் உவமேய மும் சேர்ந்து நின்று இடையில் ஒப்புமையை விளக்கும்போல, புரைய முதலிய உவமையுருபு கள் மறைந்து வருவதாம்.

(உ—ம்) தாமரை முகம்.

**உம்மைத் தொகை** — எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் நால்வகை அளவு களுள் உம் என்னும் இடைச்சொல் மறைந்து வருவதாம்.

(உ—ம்) இராப் பகல்.

**அன்மொழித் தொகை**—வேற்றுமைத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத் தொகை உம்மைத் தொகைகளின் புறத்தே வேறுசொற்கள் மறைந்து வருவனவாம்.

(உ—ம்) பொற்றொடி நின்றாள், தாழ்குழல் வந்தாள், பெருந்தகை பேசினான், துடியிடை வந்தாள், உயிர்மெய்.

அவ்வழிப் புணர்ச்சியில் தொகாநிலைத்தொடர் ஒன்பது வகைப்படும். அஃதாவது:- எழுவாய், விளி, பெயரெச்சம், வினையெச்சம், தெரிநிலை வினைமுற்று, குறிப்பு வினைமுற்று, இடைச்சொல், உரிச்சொல் என்பவைகளில் ஒன்று நிலைமொழியாக நிற்க அதனோடு வருமொழி சேர்தலும், ஒரே சொல இரண்டு, மூன்று நான்கு எல்லைவரை அடுக்கி வருதலுமாகும்.

உதாரணம் .—

கண்ணன் வந்தான்—எழுவாய்த் தொடர்.
முருகா வா—விளித்தொடர்.

| | |
|---|---|
| பெரிய மனிதன்<br>படித்த பாடம் | } பெயரெச்சத்தொடர். |
| வந்து சென்ருன்<br>மெல்லப் பேசினன் | } வினையெச்சத் தொடர். |
| வந்தான் இராமன் | — தெரிநிலை வினைமுற்றுத்தொடர். |
| பெரியன் கண்ணன் | — குறிப்பு வினைமுற்றுத் தொடர் |
| மற்றொன்று | — இடைச் சொற்றொடர். |
| தடக்கை | — உரிச்சொல் தொடர். |
| வருக வருக | — அடுக்குத் தொடர். |

(15) தளை என்றால் என்ன? அஃது எத்தனை வகைப் படும்? அவை யாவை?

செய்யுளில் நின்ற சீரின் ஈற்றசையும். வருஞ் சீரின் முதலசையும் ஒன்றியேனும் ஒன்ருமலேனும் கூடி நிற்பது தளை எனப்படும். அஃது ஏழு வகைப்படும்.

மாச்சீர்முன் நேர் வருதல்—நேரொன்ருசிரியத் தளை. விளச்சீர்முன் நிரைவருதல் — நிரையொன்ரு சிரியத்தளை

காய்ச்சீர் முன் நேர் வருதல்—வெண்சீர் வெண்டளை

| | |
|---|---|
| மாச்சீர் முன் நிரை வருதல்<br>விளச்சீர் முன் நேர் வருதல் | } —இயற்சீர் வெண்டளை |

கனிச்சீர் முன் நிரை வருதல்—ஒன்றிய வஞ்சித்தளை
கனிச்சீர் முன் நேர் வருதல்—ஒன்றா வஞ்சித்தளை

(36) அடி எத்தனை வகைப்படும்? அவை எவை?

அடி ஐந்து வகைப்படும். அவை :—

இரு சீர்களால் வரும் அடி — குறளடி.
முச்சீர்களால் வரும அடி — சிந்தடி.
நாற்சீரான் வரும் அடி—அளவடி அல்லது நேரடி.
ஐஞ்சீரான் வரும அடி — நெடிலடி.

அறுசீர்களாலும் அதற்கு மேற்பட்ட சீர்களாலும வரும் அடி — கழி நெடிலடி.

(35) தொடை எத்தனை வகைப்படும்? அவை யாவை?

தொடை :— மோனைத் தொடை, எதுகைத தொடை, முரண் தொடை எனப் பலவகைப் படும்.

பல அடிகளிலேனும், ஓரடியிலுள்ள பல சீர்களிலேனும முதலெழுத்து ஒன்றி வரத் தொடுப்பது **மோனைத் தொடை**. ஒரே எழுத்து ஒன்றி வருதலோடு மட்டுமன்றி அவற்றிற்கு இனமான எழுத்துக்களும் ஒன்றிவரத் தொடுததலும் உண்டு.

இன எழுத்துக்கள் :— அ, ஆ, ஐ, ஔ.
இ, ஈ, எ ஏ.
உ, ஊ, ஒ, ஓ.
ச், த்.
ஞ், ந்.
ம், வ்.

பல அடிகளிலேனும், ஓரடியிலுள்ள பல சீர்களிலேனும் முதலெழுத்து அளவொத்து நிற்க, இரண்டாம் எழுத்துக்கள் ஒன்றிவரத் தொடுப்பது எதுகைத் தொடையாம். சொல்லாலும்

பொருளாலும் மாறுபடத் தொடுப்பது **முரண் தொடை** ஆகும்.

(38) வெண்பா ஆசிரியப்பா — இவைகளின் இலக்கணத்தை எழுதி உதாரணங் காட்டு.

வெண்பா :— ஈற்றடி முச்சீரும் ஏனைய அடி நாற்சீரும் பெற்று, மாச்சீரும், விளச்சீரும், காய்ச்சீரும் கொண்டு இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளைகளன்றி வேற்றுத்தளை விரவாமல் ஈற்றடி யிறுதிச்சீர் காசு, பிறப்பு நாள், மலர் என்ற வாய்ப்பாட்டினுள் ஒன்றால் முற்றுப் பெறுவது வெண்பாவாகும். (உ-ம்)

சங்கம் வளர்த்த தனிப்பொருளே! இன்பநலம்
பொங்கும் பல கலைகள் பூண்டிருப்போய்! —
துங்கமிகும்
நன்மைக் கருத்து நனிசுரக்கும் பேரூற்றே!
தொன்மைத் தமிழே! துணை.

ஆசிரியப்பா :— ஒவ்வோரடியிலும் நான்கு சீர்களைப் பெற்று, மாச்சீர், விளச்சீர்களை மிகுதியாகக் கொண்டு தன்தளை தழுவியும், பிறதளை மயங்கியும் கருவிளங்கனி, கூவிளங்கனி என்னும் இருசீரும் கலவாமல் மூன்றடி முதல் பலவடிகளால் வருவது ஆசிரியப்பாவாகும். (உ-ம்)

பல்லவர் பழகினும் நல்லவர் சிலரே
ஊரினி லொருவனே தோழனு மாதலின்
குணங்குடி குற்றம் இனங்களைத் தெரிந்தே
ஆய்ந்தே நட்பை அடைந்திட வேண்டும்
பேயொடு பழகினும் பிரிதலோ அரிதே.

(39) கலிப்பா, வஞ்சிப்பா — இவற்றின் இலக்கணம் யாது?

கலிப்பா :— வெண்சீர் மிகுதியாகப் பயின்று, மாச்சீரும் விளங்கனிச்சீரும் பெறாமல், பிற சீர்களும் சிறுபான்மை கலந்து, கலித்தளையும், அயற்றளையும் தழுவி, தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறுருப்புகளுள் ஏற்பன கொண்டு நாற்சீரடியால் வருவதாகும்.

வஞ்சிப்பா :— பெரும்பாலும் வஞ்சித்தளையும், சிறுபான்மை பிறதளையும் தழுவி இரு சீரடியாலேனும் முச்சீரடியாலேனும் மூன்று முதலிய பல அடிகளைக்கொண்டு தனிச்சொல் பெற்று அகவல் சுரிதகத்தால் முடிவதாம்.

(40) எடுத்துக்காட்டுவமையணி எவ்வாறு வரும்?

உவமானம் ஒரு வாக்கியமாகவும், உவமேயம் ஒரு வாக்கியமாகவும் அமைய, இடையில் ஒப்புமையை விளக்கும்போல முதலிய உவமை உருபுகள் மறைந்து வருவதாம்.

உதாரணம் :—

தொட்டனைத்தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.

(41) ஏகதேச உருவக அணியின் இலக்கணத்தை உதாரணத்துடன் விளக்குக.

எடுத்துக்கொண்ட. பொருள்களில் சிலவற்றை உருவகம் செய்து, சிலவற்றை உருவகம் செய்யாது விட்டு விடுதலாம். (உ—ம்)

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்.

இதில் பிறவியைக் கடலாக உருவகம் செய்ததற்கு எற்ப' இறைவனடியை மரக்கலமாக உருவகம் செய்யாது விடப்பட்டமையால் ஏகதேச உருவக அணியாம்.

(42) தற்குறிப்பேற்ற அணி, பிறிது மொழிதலணி — இவைகளை விளக்குக.

தற்குறிப்பேற்ற அணி—இயற்கையாக நிகழும் நிகழ்ச்சியின்மேல் புலவர் தம் கற்பனைக் கருத்தை ஏற்றிக் கூறுதலாகும்.

(உ-ம்) "ஈண்டுநீ வரினுமெங்கள் எழிலுடை
எழிலி வண்ணன்
பாண்டவர் தங்கட் கல்லால் படைத்துணை
யாகமாட்டான்
மீண்டுபோ கென்றன் றந்த வியன்மதிற்
குடுமி தோறும்
காண்டகு பதாகை யாடைகைகளால்
தடுப்ப போன்ற"

பிறிது மொழிதலணி :— புலவன் தான் கூற நினைத்த பொருளை மறைத்து அதனோடு ஒப்புடைய மற்றொரு பொருளைக் கூறி அதனைப் பெற வைப்பதாம், இவ்வணி ஒட்டணி எனவும், நுவலா நுவற்சி எனவும் பெயர் பெறும்.

(உ-ம்) "பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்"

(43) இல் பொருள் உவமையணியின் இலக்கணம் யாது? உதாரணம் தருக.

உலகத்தில் இல்லாத பொருளை ஒரு பொருளுக்கு உவமையாக உரைப்பது இல்பொருள் உவமை அணியாம்.

(உ-ம்) "இருகைவேழத் திராகவன் தன் கதை"

# பதினொன்றும் வகுப்பு.

## [இலக்கண வினு விடை]

---

(1) எழுத்துக்களின் பிறப்பாவது யாது ?

உடலின் உள்ளே நின்ற உயிரினது முயற்சியால் உதானன் என்னும் காற்ருனது மேல் எழுப்ப எழுகின்ற ஒலி அணுக் கூட்டங்கள் மார்பு, கழுத்து, தலை, மூக்கு இவ்விடங்களில் ஏதேனும் ஓரிடத்தைப் பொருந்தி, உதடு, நாக்கு, பல், மேல்வாய் ஆகிய நான்கு உறுப்புக்களின் தொழில் வேறுபாட்டால் வேறு வேறு எழுத்தாகிய ஓசைகளாய்த் தோன்றுதலே எழுத்துக்களின் பிறப்பாம்.

(2) எவ்வெவ்வெழுத்துக்கள் எங்கெங்கே பிறக்கும்?

உயிரெழுத்துக்களும் இடையின மெய்யெழுத்துக்களும் கழுத்திலும், வல்லெழுத்துக்கள் மார்பிலும், மெல்லெழுத்துக்கள் மூக்கிலும், ஆய்த வெழுத்து தலையிலும் பிறக்கும்.

(3) ஆய்த எழுத்துக்குரிய இடப்பிறப்பும், முயற்சிப் பிறப்பும் ஆகியவைகளைக் கூறுக.

ஆய்தம் பிறத்தற்கு உரிய இடம் தலையாகும். முயற்சி வாயைத திறந்து ஒலித்தலாம்.

(4) இயற்சொல், திரிசொல் — இன்னவென்பதை விளக்கு

**இயற்சொல்**— செந்தமிழ்ச் சொல்லாகிப் படித்தவரே யல்லாமல் படிக்காதவர்களும் எளிதாய்ப் பொருளுணரத்தக்க சொற்களாம்.

வீடு, நீர், பூ, மரம் —பெயரியற் சொல்.
போனுன், வந்தான் —வினையியற் சொல்.
(முருகனை, கந்தனுல்)
ஐ, ஆல் – உருபுகள் } –இடையியற் சொல்.
மாதவம், கூர் நுனி—உரியியற் சொல்.

திரிசொல் — கற்றவர்களாலல்லாமல் மற்றவர்களால் எளிதிற் பொருளறியப்படாத அருஞ்சொற்களாகும். அவை ஒரு பொருளைக் கருதிய பல சொற்கள் என்றும், பல பொருள்களைக் கருதிய ஒரு சொல் என்றும் இரண்டு வகைப்படும்.

கிளி என்ற ஒரு பொருள் குறித்த பல சொற்கள் சுகம் தத்தை, கிள்ளை

கோழி, சங்கு, யானை என்ற பல பொருள் குறித்த ஒரு சொல வாரணம்.

(4) A ஒரு பொருள் குறித்த பலவினைத் திரிசொல்லுக்கு எடுத்துக்காட்டுத் தந்து விளக்குக.

படர்ந்தான், ஏகினன், சென்றான் என்னும் வினைச்சொற்கள் போனான் என்னும் ஒரு பொருளைக் குறித்து வருவன.

(5) தற்சமம், தற்பவம் என்பனவற்றை விளக்கி வரைக.

தற்சமம்: — தமிழ்மொழிககும் வடமொழிக்கும் பொதுவெழுத்துக்களாலாகித் தமிழில் வந்து வழங்கும் வட சொல்லாகும்.

(உ—ம்) அமலம், குங்குமம், காரணம்.

தற்பவம்: வடமொழிக்குரிய சிறப்பெழுத்துக்களால் ஆகித்தமிழில் வந்து திரிந்து வழங்குவனவும், பொதுவும் சிறப்புமான ஈரெழுத்துக்களாலுமாகித் தமிழில் வந்து திரிந்து வழங்குவனவுமாகும்.

(உ—ம்) ஸபா—சபை; ஷண்முகம்—சண்முகம்.

(6) வடமொழிக்கேயுரிய சிறப்பெழுத்துக்கள் யாவை?

ஜ, ஷ, ஸ, ஹ, க்ஷ முதலிய இருபத்தெட்டு எழுத்துக்கள்.

(7) தமிழுக்கேயுரிய சிறப்பெழுத்துக்கள் எவை ?

எ, ஒ, ற, ன, ழ — இவை ஐந்துமாம்.

(8) திணைப் பொதுப் பெயர்கள் யாவை ?

ஆண்மை முதற் பெயர், பெண்மை முதற் பெயர், ஒருமை முதற்பெயர், பன்மை முதற்பெயர் என்னும் முதற்பெயர்கள் நான்கும்; ஆண்மைச் சினைப் பெயர். பெண்மைச் சினைப்பெயர், ஒருமைச் சினைப்பெயர், பன்மைச் சினைப்பெயர், என்னும் சினைப்பெயர்கள் நான்கும்; ஆண்மைச்சினை முதற் பெயர், பெண்மைச்சினை முதற் பெயர், ஒருமைச்சினை முதற் பெயர், பன்மைச்சினை முதற் பெயர் என்னும் சினை முதற் பெயர்கள் நான்கும் ஆண்மை முறைப் பெயர். பெண்மை முறைப் பெயர் என்ற முறைப்பெயர்கள் இரண்டும்; யான், நான், யாம், நாம் என்னும் தன்மைப் பெயர்கள் நான்கும் எல்லீர், நீயிர், நீவிர், நீர், நீ என்னும் முன்னிலை பெயர்கள் ஐந்தும்; எல்லாம், தாம், தான் என்னும் பெயர்களும் பிறவுமாம்.

(9) உருபு மயக்கமாவது யாது ?

ஒருவேற்றுமைப் பொருள் மற்றொரு வேற்றுமை யுருபால் சொல்லப்பட்டதாயினும் அவ்வுருபு சென்ற வழியே பொருள் சொல்லாமல் பொருள் சென்ற வழியே உருபுசாரும்.

(உ-ம்) கிழங்கு மணற்கு ஈன்ற முளை — இதில் நான்காம் வேற்றுமையுருபு கூறப்பட்டதாயினும் நான்காம் வேற்றுமைக்குரிய பொருளில் வரவில்லை. மணற்கண் என்று ஏழாம் வேற்றுமை இடப்பொருளையே உணர்த்தி நின்றது.

(10) தெரிநிலை வினைமுற்றுக்கள் எவ்வெவற்றை உணர்த்தும் ? சான்று தருக.

தெரிநிலை வினைமுற்றுக்கள் செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் என்ற ஆறு பொருள்களையும் உணர்த்தும்.

(உ-ம்) குயவன் குடத்தை வனைந்தான் — இதில் வனைந்தான் என்னும் வினைமுற்று வனைந்தவனாகிய குயவனை விகுதியால் உணர்த்திற்று.

வினைதலாகிய செயலைப் பகுதியால் உணர்த்திற்று. காலத்தை இடைநிலையால் காட்டிற்று. வினைதற்குரிய இடம், வினைதற்கேற்ற கருவி, வினைதற்றொழிலால் உண்டாகிய உருவமைப்பாகிய செயப்படு பொருள் முதலியன குறிப்பால் உணர நின்றன.

(11) குறிப்பு வினை முற்று எவ்வெவற்றினடியாகப் பிறக்கும்? உதாரணம் வேண்டும்.

குறிப்பு வினை முற்று, பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற அறுவகைப் பெயர்களினடியாகப் பிறக்கும்.

இவன் பொன்னன் — பொருள்
இவன் மதுரையான் — இடம்
இவன் ஆதிரையான் — காலம்
இவன் குறுந்தாளன் — சினை
இவன் குறளன் — பண்பு
இவன் வேகமான நடையன் — தொழில்

(12) செயப்படு பொருள் குன்றியவினை. செயப்படு பொருள் குன்றுவினைகளை விளக்குக.

செயப்படு பொருள் உள்ள வினைமுற்று செயப்படு பொருள் குன்றுவினை, செயப்படு பொருள் இல்லாத வினைமுற்று செயப்படு பொருள் குன்றிய வினையாம். செயப்படு பொருள் உண்மையை அறிந்து கொள்ள அவ்வினைமுற்றோடு யாரை அல்லது எதை என்பதைச் சேர்த்து வினவினால், விடை வருமாயின், செயப்படுபொருள் குன்றுவினை யென்றும், விடை வராதாயின் செயப்படுபொருள் குன்றியவினை யென்றும் கொள்ளுதல் வேண்டும்.

(உ-ம்) ஓடினான் — செயப்படுபொருள் குன்றிய வினை. உண்டான் — செயப்படுபொருள் குன்றுவினை.

(13) தன்வினை, பிறவினை முற்றுக்கள் யாவை?

கருத்தா தானே செய்யும் வினை தன்வினையாம்.
(உ-ம்) ஓடினேன்.

கருத்தா பிறரைக்கொண்டு செய்விக்கும் வினை பிறவினையாம். (உ—ம்) ஓட்டினேன்.

(14) தன்வினையைப் பிறவினையாக்க மேற்கொள்ள வேண்டிய முறைகள் யாவை?

தன் வினைப்பகுதியோடு வி, பி, கு, சு, டு, து, பு, று ஆகியவற்றுள் ஒன்றைச் சேர்த்தும்.

தன்வினைப் பகுதியின் இடையில் உள்ள மெய்யை இரட்டித்தும்.

தன்வினைப் பகுதியின் இடையிலுள்ள மெல்லின மெய்யை வல்லின மெய்யாக்கியும் பிறவினையாக்கலாம்

(உ—ம்) செய்வி, நடப்பி, போக்கு, பாய்ச்சு, உருட்டு, நடத்து, எழுப்பு, துயிற்று, ஓட்டு, திருத்து.

(15) செய்வினை, செயப்பாட்டு வினைகளுக்குரிய வேறுபாடுகள் யாவை ?

செயவினை, முதல் வேற்றுமைக் கருத்தாவிற்குப் பயனிலையாக வரும். (உ—ம்) அரசன் இக்கோயிலைக் கட்டினான். செயப்பாட்டுவினை மூன்றும் வேற்றுமைக் கருத்தாவிற்குப் பயனிலையாக வரும். (உ—ம்) அரசனால் இக்கோயில் கட்டப்பட்டது. செய்வினை வாக்கியத்துள் செயப்படுபொருளாக இருந்தது. செயப்பாட்டுவினை வாக்கியத்தில் எழுவாயாக வரும்.

(16) உடன்பாட்டுவினை, எதிர்மறை வினைகளை விளக்குக.

இராமன் வந்தான் — இவ்வாறு வினை நிகழ்ச்சியைக் குறிப்பது உடன்பாட்டுவினை.

இராமன் வந்திலன் — இவ்வாறு வினை நிகழாமையைக் குறிப்பது எதிர்மறைவினை.

(17) இறந்தகாலமும், எதிர்காலமும் காட்டும் விகுதிகள் யாவை? சான்று தருக.

று, றும், து, தும், டு, டும், ப ஆகிய விகுதிகள் இறந்த காலமும், று, றும், து, தும், கு, கும, மின்

உம், ஈர், ஆய், க, இய, இயர், இ, மார், ப, உம் என்ற விகுதிகள் எதிர்காலமும் காட்டும்.

உதாரணம்:—

சென்று, சேறும், வருது, வருதும், உண்கு, உண்கும், தின்மின், தின்னும், தின்னீர், தின்னாய், சேறி, சென்மார், உண்ப—எதிர்கால முணர்த்தும்.

(18) பகுதி காலங்காட்டுவதை ஒரு சான்று கூறி விளக்குக.

கு. டு று என்னும் எழுத்துக்களை ஈற்றிலுடைய சில குறில்வினைப் பகுதிகள் தம ஒற்று இரட்டித்து நின்று இறந்த காலம் காட்டும்.

(உ—ம்) புகு—புக்கான், நடு—நட்டான், பெறு—பெற்றான்.

(19) இறந்தகால, நிகழ்கால வினையெச்ச வாய்பாடுகள் யாவை?

செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென — என்னும் ஐந்தும் இறந்தகால வினையெச்ச வாய்பாடுகளாம். செய என்பது நிகழ்கால வினையெச்ச வாயபாடாம்.

(20) எதிர்கால வினையெச்ச வாய்பாடுகள் யாவை?

செயின், செய்யிய, செய்யியர் என்ற வாய்பாடுகளும், வான்விகுதி, பான்விகுதி, பாக்குவிகுதி பெற்றவைகளும் ஆகும்.

(21) சினைவினை முதல்வினை பற்றி விளக்கி, முடியு மாற்றையும் கூறுக.

சினை = உறுப்பு—கால், கிளை, பூ என்பன போன்றவை முதற்பொருளின் பல உறுப்புகள் சினையெனப்படும்.

(கால்) ஒடிந்தது
(கிளை) முறிந்தது } இவை சினைவினைகளாகும்.

கை ஒடிந்து வீழ்ந்தது — இதில் கை என்ற சினை தனக்குரிய வீழ்ந்தது என்ற சினைவினைச் சொல்லைக் கொண்டு முடிந்தது.

(இராமன்) வீழ்ந்தான் — இது முதல்வினை.

கை ஒடிந்து வீழ்ந்தான் — இதில் ஒடிந்து என்னும் சினைப்பெயர்க்குரிய வினையெச்சம் வீழ்ந்தான் என்னும் முதல் வினையைக் கொண்டு முடிந்துள்ளது.

(22) திணைப்பொது வினை, பாற்பொது வினைகளை உதாரணங்காட்டி விளக்குக.

வேறு, இல்லை, உண்டு என்ற மூன்று சொற்களும் இருதிணை பொது வினைச் சொற்களாகும். இம் மூன்றும், ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்ற ஐந்து பாலிலும், தன்மை முன்னிலை படர்க்கை என்ற மூன்று இடங்களிலும் வரும்.

(இம் மூன்று சொற்களையும் ஏற்றவாறு அமைத்துக் கொள்க.

யார், எவன் என்ற இரு சொற்களும் பாற்பொது வினைச் சொற்களாகும்.

யார் என்ற வினாப் பொருளில் வரக்கூடிய குறிப்பு வினை முற்றுச்சொல், உயர்திணைப் பால்கள் மூன்றிற்கும் பொதுவாக வரும். மூன்றிடத்தும் வரும். எவன் என்ற வினாப் பொருளில் வரக்கூடிய குறிப்பு வினை முற்றுச்சொல், அஃறிணை யிருபால்களுக்கும் பொதுவாக வரும்.

(23) முற்றெச்சம் என்றால் என்ன?

ஒரு வினைச் சொல் முற்றாகத் தோன்றினும், அது தரும் பொருள் எச்சமாக இருந்தால் அது முற்றெச்சம் எனப்படும்

(உ—ம்) கண்டனள் தொழுதாள்.

கண்டனள் என்ற சொல் வினைமுற்றேயாயினும் கண்டு என்ற எச்சப்பொருளைத் தருவதால் இது பொருளால் முற்றெச்சமாகிறது. இது போல்வன கண்டுகொள்க.

(24) முற்றெச்சமாகுங்கால் எவையெவை எவ்வாறு வரும் ?

கண்டனன் வந்தான் என்னும் பொழுது 'கண்டனன் என்னும் தெரிநிலை வினைமுற்று 'கண்டு' என்னும் வினையெச்சப் பொருள்பட நின்றது.

குழையினன் வந்தான் என்னும் பொழுது குழையினன் என்னும் குறிப்பு வினைமுற்று 'குழையினனாய்' என்னும் வினையெச்சப் பொருள்பட நின்றது.

குழையினன் இராமன் வந்தான் என்னும் பொழுது 'குழையினன்' என்னும் குறிப்பு முற்று 'குழையினனாகிய' என்னும் பெயரெச்சப்பொருள் பட்டு நின்றது.

இவ்வாறாகத் தெரிநிலை வினைமுற்று எச்சமாகுங்கால் வினையெச்சமாகவும், குறிப்புவினை முற்று வினையெச்சமாகவும், பெயரெச்சமாகவும் பொருள் பட்டு வருமென்பதாம்.

(25) முன்னிலையில் மட்டும் வரும் அசைச் சொற்களைக் கூறி ஐந்திற்கு உதாரணங் காட்டுக.

மியா, இக, மோ, மதி, அத்தை, இத்தை, வாழிய, மாள, ஈ, யாழ என்ற பத்தும் முன்னிலை அசைச் சொற்களாகும்.

இவை முன்னிலையில் மட்டும் வரும்.

சென் மியா என்று — சென்றீ பெரும
சென்மதி பெரும — உள்ளிச் செல்லத்தை
கண்டது மொழிமோ

(26) எல்லாவிடத்தும் வரும் அசைச் சொற்கள் யாவை? சிலவற்றிற்கு உதாரணம் தருக.

யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது, இகும், சின், குரை, ஒரும், போலும், இருந்து, இட்டு, அன்று, ஆம், தாம், தான், கின்று, நின்று என்பவைகளாகும்.

யா பன்னிருவர் மாணக்கர். குயிலாலுமறோ.
இவள் காண்டி கா. வாழாது என்போ.
ஆயனை அல்லை பிற. என்றிசின்.
பிறக்கிதனுள் செல்வோன்.

(27) இடைப் பிறவரல் என்பது யாது ?

வேற்றுமையுருபேற்ற பெயரும், வினைமுற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும் கொண்டு முடியக் கூடிய பெயர்ச்சொற்களுக்கும் வினைச்சொற்களுக்குமிடையே அவ்விடத்துக்குப் பொருத்தமான ஒரு சொல்லோ பல சொல்லோ வரின் அவை இடைப்பிறவரால் எனப்படும்.

(உ-ம்) வீட்டை அழகு பெறக் கட்டினன்.
வந்தான் மதுரைக்குப் போன கண்ணன்
வந்த கல்வி மந்திரி.
வந்து சிறந்த வகையில் பேசினர்.

28) வின வகைகளைக் கூறி உதாரணந் தருக

வின ஆறு வகைப்படும்:

அறிவின —'இப்பாடலின் பொருள் யாது' என்று ஆசிரியர் மாணவனைக் கேட்கும் வின.
அறியா வின —'இப்பாடலின் பெருள் யாது' என்று மாணவன் ஆசிரியரைக் கேட்கும் வின.
ஐய வின —'இவ்வுரு மரக்கட்டையோ ? மகனோ ?
கொளல் வின —உப்புளதோ வணிகீரே ?
கொடை வின —உனக்கு ஆடையில்லையோ?
ஏவல் வின —குழந்தாய் குளித்தனையோ ?

(29) விடை வகைகளை உதாரணத்துடன் மொழிக

விடை எட்டு வகைப்படும். அவையாவன :-

சுட்டு விடை —'சென்னைக்கு வழி யாது?'— இவ் வினாவிற்கு 'இது' என்பது விடையாய் வருவ தாகும்.

எதிர்மறை விடை— 'நீ பள்ளிக்குச் செல்வாயா?— இவ்வினாவிற்குச் 'செல்லேன்' என்பது விடையாய் வருவது

நேர் விடை — மேல் வினாவிற்குச் 'செல் வேன்' என்பது விடையாய் வருவது.

ஏவல் விடை — 'நீ பாடுவாயா?' என்னும் வினாவிற்கு 'நீ பாடு' என்பது விடையாய் வருவது.

வினா வெதிர் வினாதல் விடை — 'இது செய்வாயா என்னும் வினாவிற்குச் செய்வேனா, என்பது விடையாய் வருவது

உற்றதுரைத்தல் விடை — மேல் வினாவிற்கு 'உடம்பு நொந்தது' 'என்பது விடையாய் வருவது.

உறுவது கூறல் விடை — மேல் வினாவிற்கு 'உடம்பு நோகும்'என்பது விடையாய் வருவது.

இனமொழி விடை —மேல்வினாவிற்கு'வேறொன்று செய்வேன்' என்பது விடையாய் வருவது.

30) இனங்காட்டும் அடைமொழி இனமல்லாததைக் காட்டும் அடைமொழி — விளக்கந்தருக.

பாற்குடம் என்பதற்குத் தயிர்க்குடம் முதலிய இனமுண்டு, ஆகையால் பால் என்பது இனங் காட்டும் அடைமொழியாம்.

"பாவம் செய்தான் நரகம் புகுவான்" என்றதில் இவ்வாக்கியம் "புண்ணியம்செய்தான் சொர்க்கம் புகுவான்" என்னும் இனத்தைக் காட்டுதலோடன்றி, 'அவன் இது செய்தால் இது வரும் என்றுணரமாட்டாத அறிவிலி' என்ற இனமல்லாததனையும் உணர்த்தியது.

(31) பொருள்கோள் என்றால் என்ன? அவை எத்தனை?

பொருள்கோள் என்பது ஒரு செய்யுளுக்குப் பொருள்கொள்ளும் முறையாகும். இயற்சொல் முதலாகிய நால்வகைச் சொற்களாலாகிய பாடல்களில் பொருள் கொள்ளுதற்கு ஏற்ற வகையில் எழுவாய், பயனிலைகளோ பிறவோ அமையா. அவற்றை நாம் பொருள் கொள்ளற்கு ஏற்ற வகையில் அமைத்துக் கொள்ளும் முறையாம்.

அவை; ஆற்றுநீர்ப் பொருள்கோள், மொழிமாற்றுப் பொருள்கோள், நிரல் நிறைப் பொருள்கோள், விற்பூட்டுப் பொருள்கோள், தாப்பிசைப் பொருள்கோள், அளைமறி பாப்புப் பொருள்கோள், கொண்டுகூட்டுப் பொருள்கோள், அடிமறி மாற்றுப் பொருள்கோள் என எட்டு வகைப்படும்.

(32) பூட்டுவிற் பொருள்கோள், தாப்பிசைப் பொருள்கோள் — உதாரணங் காட்டி விளக்குக?

திறந்திடுமின் தீயவை பிற்காண்டும் மாதா
இறந்துபடிற் பெரிதாம் ஏதம் உறந்தையர்கோன்
தண்ணார மார்பின் தமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு.

இப்பாட்டின் முதலில் உள்ள 'திறந்திடுமின்' என்ற சொல் இறுதியில் உள்ள கதவு என்ற சொல்லோடு சேர்ந்து பொருளைத் தருகிறது. 'கதவு திறந்திடுமின்' இவ்வாறு ஒரு செய்யுளின் முதலிலும், கடைசியிலும் உள்ள சொற்கள் தம்முள் பொருள் நோக்குடையனவாயிருந்தால் அது பூட்டுவிற்பொருள்கோள் எனப்படும்.

பல சில என்னும் சொற்கள் தமக்கு முன்தாம் சேரும்பொழுது இயல்பாகியும், மிக்கும், இறுதி அகரங்கெட லகரம் றகரமாகத் திரிந்தும் புணரும். அவற்றின்முன் பிறசொற்கள் புணரும்பொழுது அப்பல சில என்பவற்றின் ஈற்று அகரம் இயல்பாதலும், கெடுதலுமாகிய விகற்பத்தோடு புணரும்.

சில சில, சிலச்சில, சிற்சில
பல கலை, பலகலை, சில வளை, சில வளை.

35) தெங்கு என்ற சொல் முன் காய் சேரின் எவ்வாறு ஆகும்?

தெங்கு என்னும் நிலைமொழியிலுள்ள எகரம் ஏகரமாய் அதன் ஈற்றிலுள்ள உயிர்மெய் கெடும் அன்றி அம்சாரியை பெற்றுப் புணர்தலும் உண்டு.

(உ-ம்) தேங்காய், தெங்கங்காய்.

36) தேன் என்ற சொல் முன் மூவின மெய்களும் சேரின் எவ்வாறாகும்?

தேன் என்ற சொல் அல்வழி வேற்றுமை ஆகிய இரு வழிகளிலும் மூவின மெய்களும் வரின் இயல்பாகும்.

| அல்வழி | வேற்றுமை |
|---|---|
| தேன் பெரிது | தேன் செம்மை |
| தேன் மலிந்தது | தேன் மணம் |
| தேன் யாது | தேன் யாறு |

தேன் என்ற சொல் முன் இரு வழியிலும் மெல்லினம் வரின் மேற்கூறியாங்கு இயல்பாதலேயன்றி ஈற்று மெய்கெட்டுப் புணர்தலும் உண்டு.

| அல்வழி | வேற்றுமை |
|---|---|
| தேன் மொழி | தேன் மணம் |
| தே மொழி | தே மணம் |

தேன் என்னும் சொல் இருவழியிலும் வல்லினம் வர இயல்பாதலேயன்றி ஈற்று னகரங்கெட, வந்த வல்லெழுத்தோ அதற்கினமான மெல்லெழுத்தோ மிக்குப் புணர்தலும் உண்டு.

| அல்வழி | வேற்றுமை |
|---|---|
| தேன் குழம்பு | தேன் குடம் |
| தேக் குழம்பு | தேக்குடம் |
| தேங் குழம்பு | தேங் குடம் |

(37) **செய்யுள் விகாரங்கள் எத்தனை? உதாரணந் தருக.**

வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல், விரித்தல், தொகுத்தல், முதற் குறை, இடைக் குறை, கடைக் குறை என ஒன்பதாகும்.

**அற்புக்கு** ஆழியான்றான் :—
அன்பு என்ற சொல்லில் உள்ள மெல்லொற்று வல்லொற்றாகி **வலித்தல்** விகாரம் அடைந்தது.

**தணடையின்** இனக்கிளி கடிவோள் :—
தட்டை என்பது தண்டை என்று **மெலிந்து** நின்றது.

நற்பக **நீழலைக்** காக்கும் :—
நிழல் என்பது நீழல் என **நீண்டது.**

நன்றென்றேன் **தியேன்** :—
தீயேன் என்பது தியேன் எனக் **குறுகியது**.

நாலுமரை ஆசிரியன்னே :—
ஆசிரியனே என்ற சொல் ஆசிரியன்னே என **விரிந்தது**.

**சிறியிலை** ;— சிறிய என்ற சொல் இலை என்பதோடு சேர்ந்தால் சிறியவிலை எனல் வேண்டும். ஈண்டு **தொகுத்தல்** விகாரம் பெற்றுச் சிறியிலை என வந்தது.

**மரையிதழ்** புரையும் ;—
தாமரை என்ற சொல்லின் முதலெழுத்துக் குறைந்து மறை என வந்ததால் இது முதற்குறை எனப்படும்.

**ஓதி** முது போத்து ;—
ஓந்தி என்ற சொல்லின் இடையில் உள்ள எழுத்துக் கெட்டு ஓதி என வந்தமையால் இஃது **இடைக்குறை.**

நீல் உண் தாகிவிகை கடுர்ப்பு: —
நீலம் என்ற சொல்லில் நீல் என ஈற்றிலுள்ள எழுத்துக்கள் குறைந்து வந்தமையால் **கடைக் குறை.**

**(38) தீர்க்க சந்தி எவ்வாறு வரும்? சான்று தருக.**

நிலைமொழியின் ஈற்றில் அகர ஆகாரங்களுள் ஒன்று நிற்க வருமொழியின் முதலிலும் அகர ஆகாரங்களுள் ஒன்று வரின் அவ்விரண்டும் கெட ஓர் ஆகாரம் தோன்றும்.

(உ-ம்) பக + அம்பரம் = பகாம்பரம்.
சிவ + ஆலயம் = சிவாலயம்.

நிலைமொழி ஈற்றில் இகர ஈகாரங்களுள் ஒன்று நிற்க, வருமொழியின் முதலிலும் இகர ஈகாரங்களுள் ஒன்றுவரின் அவ்விரண்டும்கெட ஈகாரந் தோன்றும்.

(உ-ம்) கிரி + ஈசன் = கிரீசன்.
நதி + ஈசன் = நதீசன்.

நிலைமொழியின் ஈற்றில் உகர ஊகாரங்களுள் ஒன்றி நிற்க, வருமொழியின் முதலிலும் உகர ஊகாரங்களுள் ஒன்று வரின் அவ்விரண்டும் கெட ஊகாரம் தோன்றும்.

(உ-ம்) குரு + உபதேசம் = குரூபதேசம்.
வதூ + ஊரு = வதூரு.

மேற்காட்டிய மூன்றும் தீர்க்க சந்தி எனப்படும்.

**(39) குண சந்தி என்பது யாது? சான்று தருக.**

நிலைமொழி ஈற்றில் அகர ஆகாரங்களுள் ஒன்று நிற்க. வருமொழியின் முதலில் இகரஈகாரங்களுள் ஒன்றுவரின் அவ்விரண்டும் கெட ஓர் ஏகாரம் தோன்றும்.

(உ-ம்) நர + இந்திரன் = நரேந்திரன.
மகா + ஈசன் = மகேசன்

நிலைமொழியின் ஈற்றில் அகர ஆகாரங்களுள் ஒன்று நிற்க, வருமொழியின் முதலில் உகர

ஊகாரங்களுள் ஒன்று வரின் அவ்விரண்டும் கெட ஓர் ஓகாரம் தோன்றும்.

(உ-ம்) பாத + உதகம் = பாதோதகம்.
நய + ஊர்ச்சிதன் = நயோர்ச்சிதன்.

இவ்வாறு வருவன குணசந்தி எனப்படும்.

**(40) விருத்தி சந்தியை விளக்குக ?**

நிலைமொழியின் ஈற்றில் அகர ஆகாரங்களுள் ஒன்று நிற்க வருமொழி முதலில் ஏகார ஐகாரங்களுள் ஒன்று வரின் இரண்டும் கெட ஓர் ஐகாரம் தோன்றுவது.

(உ-ம்) லோக + ஏக நாயகன் = லோகைக நாயகன்.
மகா + ஐசுவரியம் = மகைசுவரியம்.

நிலைமொழியின் ஈற்றில் அகர ஆகாரங்களுள் ஒன்று நிற்க வருமொழி முதலில் ஓகார ஔகாரங்களுள் ஒன்று வரின் இரண்டும் கெட ஓர் ஔகாரம் தோன்றும்

(உ-ம்) கங்கா + ஓகம் = கங்கௌகம்.
கலச + ஔதனம் = கலசௌதனம்.

**தெரிந்துகொள்க :—**

சேநா + அதிபதி = சேநாதிபதி
மகா + ஈசன் = மகேசன்
கிரி + ஈசன் = கிரீசன்
குரு + உபதேசம் = குருபதேசம்
கங்கா + உதகம் = கங்கோதகம்
மகா + ஐசுவரியம் = மகைசுவரியம்
திவ்விய + ஔடதம் = திவ்வியௌடதம்

**எண்ணுப் பெயர்ப் புணர்ச்சிகளைத் தெரிந்துகொள்க.**

ஒன்று + ஆயிரம் = ஓராயிரம்
மூன்று + உழக்கு = மூவுழக்கு
மூன்று + நாழி = மூந்நாழி
நான்கு + மணி = நான்மணி

| | | | |
|---|---|---|---|
| நான்கு | + நாழி | = | நானாழி |
| ஐந்து | + வட்டி | = | ஐவட்டி |
| ஐந்து | + ஒன்று | = | ஐயொன்று |
| ஆறு | + கழஞ்சு | = | ஆறுகழஞ்சு |
| ஏழு | + வகை | = | எழுவகை |
| பத்து | + ஒன்று | = | பதினொன்று, பதிற்றொன்று |
| பத்து | + பத்து | = | பதிற்றுப்பத்து, பப்பத்து |
| ஒன்பது | + தோணி | = | ஒன்பதின் தோணி |
| ஒன்பது | + பத்து | = | தொண்ணூறு |
| ஒன்பது | + நூறு | = | தொள்ளாயிரம் |
| ஐந்து | + ஐந்து | = | ஐவ்வைந்து |
| பத்து | + இரண்டு | = | பன்னிரண்டு |

**திசைப் பெயர்ப்புணர்ச்சிகளைத் தெரிந்துகொள்க:—**

வடக்கு + கிழக்கு = வடகிழக்கு
வடக்கு + மேற்கு = வடமேற்கு
தெற்கு + கிழக்கு = தென் கிழக்கு
குடக்கு + திசை = குடதிசை
குணக்கு + மலை = குணமலை
மேற்கு + கடல் = மேல்கடல்
கிழக்கு + கடல் — கீழ்க்கடல், கீழ்கடல்.
கிழக்கு + நாடு = கீழ்நாடு, கீழை நாடு.

**1 பிற சொற்புணர்ச்சிகள் :—**

பூ + கொடி = பூக்கொடி, பூங்கொடி.
பூ + சோலை = பூச்சோலை, பூஞ்சோலை.
பூ + தடம் = பூத்தடம், பூந்தடம்
பூ + பந்து = பூப்பந்து, பூம்பந்து.

இவ்வாறாக பூ' என்னும் பெயருக்கு முன் வல்லினம் வந்தால் வந்த வல்லெழுத்து மிகுதலேயன்றி, அவற்றிற்கு இனமாகிய மெல்லெழுத்து மிகதலுமாகும்.

11 மரம் + கிளை = மரக்கிளை  மரம் + நார் = மரநார்.
மரம் + வேர் = மரவேர்  மரம் + அடி = மரவடி.

இவ்வாறாக மரம் என்ற சொல்லுக்கு முன் நாற்கணமும் வந்து புணர்ந்தற்று மகரமகெட்டு, உயிரீறாக நின்று வல்லினம் வருங்கால் வந்த வல்லொற்றுமிகும், மெல்லினமும், இடையினமும், உயிரினமும் வருங்கால் இயல்பாகவும் புணருமென அறிக. சில இடங்களில் அல்வழியில் வல்லினம் வருங்கால் வந்த வல்லொற்று மிக்கும், மெல்லினமும், இடையினமும், உயிரினமும் வருங்கால் இயல்பாகவும் புணருமென அறிக. சில இடங்களில் அல்வழியில் வல்லினம் வருங்கால் வந்த வல்லொற்றுக்கு இனமான மெல்லொற்றாக, மகரமெய் திரிந்து முடிதலும் உண்டு.

மரம் + கிளைக்கும் — மரங்கிளைக்கும்.

**(41) ஆகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் வேறுபாடு யாது?**

| ஆகு பெயர் | அன்மொழித்தொகை |
|---|---|
| 1 பெரும்பாலும் தனிச் சொல்லிலேயே வரும் | 1 வினை, பண்பு, உவமை உம்மை வேற்றுமைத் தொகைகளை அடுத்துத் தொடர்மொழியிலேயே வரும். |
| 2 தன்னுடன் தொடர்புடைய பொருள்களுக்குப் பெயராகி வரும் | 2 தொடர்பில்லாத பொருளிலும் வரும் |
| 3 பழங்காலம் முதல் வழக்கத்தில் இருக்க வேண்டும் என்ற என்ற நியதி உடையது | 3 அந்நியதி இதற்கில்லை |

**(42) அகப்பொருள், புறப்பொருள் இவைகளின் பொருளை விளக்குக?**

ஒருவனும் ஒருத்தியும் அன்பால் ஒன்றுபட்டு, இல்லற வாழ்வினைச் செம்மையுற நடாத்துவது அகப்பொருள் எனப்படும். காதற் செய்திகளை வெளியே கூறாமல் அகத்தே அடக்கிக் கொள்வதால் இஃது அப்பெயர் பெற்றது.

# கருப் பொருள்

| திணை | குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை |
|---|---|---|---|---|---|
| தெய்வம் | முருகன் | திருமால் | இந்திரன் | வருணன் | துர்க்கை |
| உயர்ந்தோர் | சிலம்பன், வெற்பன் | குறும்பொறை, நாடன், கிழத்தி, மனைவி | ஊரான், மகிழ்நன், கிழத்தி, மனைவி | துறைவன், சேர்ப்பன் பரத்தி, நுளையர் | மீளி, விடலை காளை எயிற்றி |
| தாழ்ந்தோர் | குறவன், குறத்தி | ஆயர், இடையர், இடைச்சியர் | கடைசியர் உழத்தியர் | பரதவர், நுளையர் பரத்தியர், நுளைச்சி | எயினர், மறவர், எயிற்றியர் |
| பறவை | மயில், கிளி | கானக்கோழி | நாரை நீர்க்கோழி | நீர்க்காக்கை, அன்னம் | கழுகு, பருந்து |
| விலங்கு | புலி, கரடி, பன்றி யானை | முயல், மான் | எருமை, நீர் நாய் | சுறா, முதலை | செந்நாய் |
| ஊர் | சிறுகுடி | பாடி, சேரி | பேரூர் மூதூர் | பட்டினம், பாக்கம் | குறும்பு |
| நீர் | சுனை, அருவி | கானயாறு | மனைக் கிணறு பொய்கை யாறு | மணற்கேணி | வற்றிய கிணறு |
| பூ | காந்தள், வேங்கை | முல்லை தோன்றி | தாமரை, குவளை | நெய்தல், தாழை | பாதிரி மரா, குரா |
| மரம் | சந்தனம், அகில் காந்தள், வேங்கை | கொன்றை குருந்து காயா | மருதம், காஞ்சி, வஞ்சி | புன்னை, தாழை | இருப்பை, ஓமை பாலை |
| உணவு | தினை, மலைநெல் | வரகு, சாமை | நெல் | மீனும் உப்பும் விற்றலால் வரும் பொருள் | கொள்ளையடிக்கும் பொருள்கள் |
| பறை | வெறியாட்டுப் பறை தொண்டகப் பறை | ஏறுகோட் பறை | மணமுழா நெல்லரி கிணை | மீன்கோட் பறை | போர்ப்பறை ஊரெறி பறை |
| பண் | குறிஞ்சிப்பண் | சாதாரிப் பண் | மருதப்பண் | செவ்வழிப்பண் | பஞ்சுரம் |
| யாழ் | குறிஞ்சி யாழ் | முல்லை யாழ் | மருதயாழ் | விளரியாழ் | பாலையாழ் |
| தொழில் | தேனெடுத்தல் கிழங்கெடுத்தல், வெறியாடல், | களை பறித்தல் ஆநிரை மேய்த்தல், குழலூதல் | நெல்லரிதல் கடாவிடுதல் | உப்பு விற்றல் மீன் பிடித்தல் | ஆநிரை கவர்தல் சூறையாடல், |

இன்பம் அல்லாத அறம், பொருள், வீடு என்ற இம்மூன்றையும் பற்றிய செய்திகளை வெளிப் படையாக விரிததுரைப்பது புறப்பொருளாகும்.

**43) கைக்கிளையாவது யாது? பெருந்திணையாவது யாது?**

கைக்கிளை என்பது ஒரு தலைக் காமம்
பெருந்திணை என்பது பொருந்தாக காமம்.

**(44) ஐந்நிலத்திற்கும் உரிய முதற் பொருளை விளக்குக.**

| நிலத்தின் பெயர் | நிலம் | பொழுது |
|---|---|---|
| குறிஞ்சி | மலையும், மலை சார்ந்த இடமும் | கூதிர், முன்பனி, யாமம் |
| முல்லை | காடும, காடுசார்ந்த இடமும. | கார், மாலை |
| மருதம் | வயலும் வயல் சார்ந்த இடமும் | கார், கூதிர், முன்பனி பின்பனி, இளவேனில், முதுவேனில், விடியற் காலம். |
| நெய்தல் | கடலும், கடல், சார்ந்த இடமும் | கார், கூதிர் முன்பனி பின்பனி, இளவேனில் ஏற்பாடு |
| பாலை | முல்லையும் குறிஞ்சியும் திரிந்த வெட்ட வெளி. | வேனில், பின்பனி, நண்பகல். |

**(45) ஐவ்வகை நிலத்திற்கும் உரிய உரிப்பொருள்கள் யாவை?**

குறிஞ்சி — புணர்தலும், புணாதல் நிமித்தமும்.
முல்லை — இருத்தலும, இருததல் நிமிததமும.
மருதம் — ஊடலு‌ம், ஊடல் நிமித்தமும்.
நெய்தல் — இரஙகலும், இரஙகல நிமிததமும்.
பாலை — பிரிதலும, பிரிதல் நிமித்தமும்.

**(46) புறத்திணை பன்னிரண்டையும் விளக்குக ?**

வெட்சி — போரில் ஆநிரைகளைக் கவர்ந்து வருதல்.

கரந்தை — ஆநிரைகளை மீட்டுக்கொண்டு செலுத்தல்.
வஞ்சி — ஓர் அரசன் தன் பகைவன் மேல் படையெடுத்துச் செல்லுதல்.
காஞ்சி — படையெடுத்தானை எதிர்த்துச் செல்லுதல்
உழிஞை — பகைவரது கோட்டை மதிலை வளைத்துக் கொள்ளுதல்.
நொச்சி — கோட்டைக்கு உள்ளிருந்து எதிர்த்தல்.
தும்பை — வெற்றியை விழைகின்ற மன்னர்கள் ஒரு தனி இடத்துப் போரிடுதல்.
வாகை — வெற்றி விழாக் கொண்டாடுதல்.
பாடாண் — ஒருவருடைய புகழ், கொடை. வலிமை இவைகளைப் பாராட்டுதல.
பொதுவியல — மேற்கூறிய புறத்திணைகளுக்கெலாம பொதுவாக உள்ளனவும, அவற்றுள் கூறாது ஒழிந்தனவும ஆகிய ஒழுக்கங்களைத் தெரிவித்தல.
கைக்கிளை - ஒரு தலைக் காமம் பற்றியது.
பெருந்திணை - பொருந்தாக்காமம.
[முதலில் கூறிய எண்வகையினரும் அவ்வத் திணைப் பெயர்ப் பூவை அணிந்து கொள்வாராதலின் அப் பெயர் பெற்றது.]

**(47) வெண்பாவின் பொது இலக்கணம் யாது ?**

ஈற்றடி முச்சீரடியாகவும ஏனையவை நாற்சீர் அடிகளாகவும வரப்பெற்று, காய்ச்சீரும் மாச்சீரும விளச்சீரும் கொண்டு, வெண்சீர் வெண்டளையும் இயற்சீர் வெண்டளையும் அல்லாமல மற்றைச் சீரும் தளையும் பெறாததாய், செப்பலோசையுடையதாய், ஈற்றடியிறுதிச் சீர் காசு, பிறப்பு, நாள், மலர் என்ற வாய்பாடுகளில் ஏதேனும் ஒன்றால் முற்றுப்பெறுவதே வெண்பாவின் பொதுவிலக்கணமாகும்.

(குறிப்பு) :- வெண்பாவின் ஓசை ஒருவர் மற்றவர்க்கு அவர் கேட்ட பொருளை எடுத்துச் செப்பு

வதுபோன்று அமைந்திருத்தலால்செப்பலோசை யுடையதாய், ஈற்றடியிறுதிச்சீர் காசு, பிறப்பு, நாள், மலர் என்ற வாய்பாடுகளில் ஏதேனும் ஒன்ருல் முற்றுப்பெறுவதே வெண்பாவின் பொது விலக்கணமாகும்.

(குறிப்பு) :- வெண்பாவின் ஓசை ஒருவர் மற்ற மற்றவர்க்கு அவர் கேட்ட பொருளை எடுத்துச் செப்புவது போன்று அமைந்திருத்தலால் செப்பலோசை என்று பெயர் வந்தது.)

(48) வெண்பா வகைக்குள் சில கூறுக ?

குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா, நேரிசை வெண்பா முதலியனவாம்.

(49) குறள் வெண்பா எவ்வாறு வரும் ?

வெண்பாவின் பொதுவிலக்கணமெல்லாம் அமைய இரண்டடிகளும் ஓரெதுகையினைப் பெற்ருே, ஈரெதுகைகளைப் பெற்ருே வருவதாம்.

உதாரணம் :—

"முருகா! நினதருளே முப்போதும் சிந்தித்தேன்
தருவாய நினதுதிருத் தாள்"

"கடவுள் நினைவு கருத்தி விருந்தக்கால்
இன்ன லுளத்துறைவ தில்"

(50) நேரிசை வெண்பா எவ்வாறு வரும் ?

வெண்பாவின் பொதுவிலக்கணமெல்லாம் அமைய நான்கடிகளையுடையதாய் முதலிரண்டடிகளும ஒரு விகற்பமும பின்னிரண்டடிகளும் மற்ரெருரு விகற்பமுமாகவேனும் வந்து இரண்டாமடியிறுதிச் சீர் தனிச்சொல பெற்று வருபவை நேரிசை வெண்பாவாகும்.

உதாரணம் :—

நல்ல குறளமுதை நானிலத்தோர் எல்லோர்க்கும்
நல்லவிருந் தீயுமிந் நாளினிலே—வல்ல
கவிதையரங் கேறக் கருத்துவள மீந்த
புவிமுதல்வன் வேலன் புகல்

வந்து விழாவில் வளமார்ந்த நற்கவிதை
தந்து தமிழ்வளர்க்க என்றென்றே—சந்தமுற
வந்தழைத்த 'நண்புமிகு மாண்பார் குழுவினர்க்குத்
தந்திடுவன் என்வணக்கம் தான்,

(51) இன்னிசை வெண்பாக்கள் எத்தனை வகைப்படும்? எவையேனும் இரண்டிற்கு உதாரணந் தருக

வெண்பாவின் பொது இலக்கணமெல்லாம் அமைய நான்கடிகளையுடையதாய்த் தனிச்சொல் இன்றி ஒரு விகற்பத்தால் வருவனவும், தனிச்சொல இன்றிப் பல விகற்பத்தால் வருவனவும், அடிதோறும் தனிச்சொல் பெற்று வருவனவும். மூன்றாமடி யிறுதி தனிச்சொல் பெற்று வருவனவும், இரண்டாமடியிறுதி தனிச்சொல் பெற்று மூன்று விகற்பத்தான் வருவனவும் என இன்னிசை வெண்பா பலவகைப்படும். (உ-ம்)

"துகளர்பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்
பகடு நடந்தகூழ் பலரோடு டுண்க;
அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்"

"மழையின்றி மாநிலத்தார்க்கில்லை;—மழையும்
தவமிலா ரில்வழி யில்லை;—தவமும்
அரசியல் இல்வழி இல்லை;—அரசனும்
இல்வாழ்வாரில்வழி இல்"

(52) ஆசிரியப்பாவின் வேறு பெயரும், அதன் வகைகளும் யாவை?

ஆசிரியப்பாவின் வேறு பெயர் அகவற்பா. வகைகள் :— நேரிசையாசிரியப்பா, அடி மறிமண்டில ஆசிரியப்பா என நான்கு வகைப்படும்.

(53) ஆசிரியப்பாவின் இலக்கணத்தை வரைக

மூன்றடி முதல் பல அடிகளையுடையதாய், மாச்சீர் விளச்சீர் வரப்பெற்று நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை கொண்டு, ஓர் அடிக்கு நான்கு சீர்கள் வரப்பெற்று அகவலோசை தழுவி வருவதாம்.

54) நேரிசை ஆசிரியப்பாவிற்கும், நிலை மண்டில ஆசிரியப்பாவிற்கும் உள்ள வேறுபாடு யாது?

நேரிசை ஆசிரியப்பா :-

ஆசிரியப்பாவின் பொது இலக்கணங்களைப் பெற்று ஈற்றயலடி முச்சீராய் ஏனைய அடிகள் நாற்சீரடிகளாக வருவதாம். பொதுஇலக் + ஈற்றயல் அடி 3 சீர் மற்றவை 4

நிலை மண்டில ஆசிரியப்பா :-

ஆசிரியப்பாவின் பொது இலக்கணங்களெல்லாம் அமைய எல்லா அடிகளும் நாற்சீரடிகளாய் வருவதாம். பொதுஇலக் + எல்லா அடிகளும் 4 சீர் பெற்று வரும்

(55) நாற்சீரடிகளில் மோனை எதுகைகள் அமைந்துள்ள தன்மையை எவ்வெவ்வாறு பெயரிசைத்தல் வேண்டும்?

| | சீர் — 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| இணை | + | + | — | — |
| பொழிப்பு | + | — | + | — |
| ஒரூஉ | + | — | — | + |
| கூழை | + | + | + | — |
| கீழ்க்கதுவாய் | + | — | + | + |
| மேற்கதுவாய் | + | — | + | + |
| முற்று | + | + | + | + |

+ - இவ்வடையாளம் சீரைக் குறிக்கும்.

மேற்கண்டவாறு சீர்களில் மோனையோ, எதுகையோ வந்தால் அவற்றோடு சேர்த்துப் பெயரிசைத்தல் வேண்டும் (உ-ம்) இணைமோனை, இணையெதுகை என்றாற்போல

(56) 'துன்புள தெனினன் றோ சுகமுள ததுவன்றிப் பின்புள திடைமன்னும் பிரிவுள தெனவுன்னேல்"

(1) இவ்வடிகளில் அமைந்த சீர்களையும் தளைகளையும் எடுத்து எழுதுக

(2) இவ்வடிகளிற் பயின்ற மோனை எதுகைகளைப் புலப் படுத்துக.

கூவிளம் 1 புளிமாங்காய் 2 கருவிளம் 3 புளிமாங்காய் 4
நேர்நிரை நிரைநேர்நேர் நிரைநிரை நிரைநேர்நேர
கூவிளம 5 புளிமாங்காய் 6 கருவிளம 7 புளிமாஙகாய்
நேர்நிரை நிரைநேர்நேர் நிரைநிரை நிரைநேரநேர்

1 விள முன் நிரை—நிரையொன்ருசிரியத்தளை
2 காய் முன் நிரை—கலித்தளை.
3 விள முன் நிரை—நிரையொன்ருசிரியத்தளை
4 காய் முன் நேர—வெண்சீர வெண்டளை
5 விள முனநிரை—நிரையொன்ருசிரியத்தளை
6 காய் முன் நிரை—கலித்தளை
7 விளமுன் நிரை—நிரையொன்ருசிரியத்தளை

2. முதலடியில பொழிப்புமோனை, இரண்டாவது அடியிலும பொழிப்பு மோனை, அடியெதுகை

(57) வேற்றுப் பொருள்வைப் பணியை விளக்கி ஓர் உதாரணங் காட்டுக

சிறப்புப் பொருளைக் கொண்டு பொதுப் பொருளையோ பொதுப் பொருளைக் கொணடு சிறப்புப் பொருளையோ – ஒரு பொருளை உறுதிப் படுத்துவதற்கு உலகமறிந்த வேருரு பொருளையோ வைப்பது வேற்றுப பொருள வைப்பணி ஆகும. (உ–ம)

வெய்ய குரற்ரேன்றி வெஞ்சினவே றுட்கொளினும
பெய்யு முகிறன்னைப் பேணுவரால—வையத்
திருள் பொழியுங் குற்றம் பலவரினும் யார்க்கும்
பொருள் பொழிவார் மேற்றே புகழ்.

(58) வேற்றுமையணியாவது யாது? உதாரணம் தருக

ஒப்புமையுடைய இரண்டு பொருள்களை எடுத்துக் கொண்டு, பின அவற்றில ஒன்றற்கொன்று வேறுபாடு கற்பித்துச் சொல்வது.

(உ-ம்) மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்
ஒலியும பெருமையு மொக்கும்–மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ வெல்லாம படும்.

(59) சிலேடையின் வேறு பெயர் யாது? அஃது எத்தனை வகைப்படும்?

இரட்டுற மொழிதல் என்பது சிலேடையின் வேறு பெயராகும்.

இது செம்மொழிச் சிலேடையணி, பிரிமொழிச் சிலேடையணி என இருவகைப்படும்.

(60) மடக்கணியின் இலக்கணம் யாது? அஃது எவ்வணியின் பாற்படும்? உதாரணம் தருக.

ஓர் எழுத்தோ, சொல்லோ, சொற்றொடரோ வேறு வேறு பொருள் தோன்றுமாறு மீண்டும் மீண்டும் மடங்கி வருவது மடக்கணியாம். மடக்கு என்பது சொல்லணியின் பாற்படும். உதாரணம்:—

திருவரங் காவுறை மார்பா திசைமுகன் சேவிப்பக்கந்
திருவரங் காதரித் தின்னிசை பாடத் திருக்கண்வளர்
திருவரங் காவுன் பழவடி யோர்களுள் செய்யவெழுந்
திருவரங் காதலித் தேனுனக் கேதொண்டு செய்வதற்கே

வரி 1. திரு + அரங்க + ஆ
,, 2. கந்திருவர் + அங்கு + ஆதரித்து
,, 3. திரு + அரங்கா
,, 4. எழுந்திரு + வரம் + காதலித்தேன்

இவ்வாறு வேறு வேறு பொருள் தோன்ற வருதல் காண்க.

(61) வஞ்சப் புகழ்ச்சியணியின் இலக்கணம் யாது? உதாரணம் தருக.

ஒருவரைப் புகழ்வதுபோலப் பழித்தலும், பழிப்பது போலப் புகழ்தலுமாம்.

(உ-ம்) 1. தேவ ரனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுகலான்

(உ-ம்) 2. பாரி பாரி என்று பலஏத்தி
ஒருவர்ப் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனு மல்லன்
மாரியும் உண்டீண் டுலகுபுரப் பதுவே

---

# கட்டுரை

மாணவர்கள் தங்கள் மதிப்பெண்களை அதிகமாக்கிக் கொள்ளுவதற்குக் கட்டுரை பெருந்துணை புரிகிறது. கட்டுரை எழுதுவதில் சில முறைகளைக் கையாண்டால், கொடுக்கப்பெற்ற மதிப்பெண்களை அப்படியே பெற்று விடலாம்.

கட்டுரையின் ஆரம்பத்தில் இக்கட்டுரையில் கூறப் புகுவது என்ன என்ற குறிப்பினைக் கொடுத்தல் வேண்டும்.

பின்னர் முதற்பத்தியில் கூறிய முறைப்படி செய்தியைத் தெளிவாகவும், சுருக்கமாகவும் பல பத்திகளாகப் பிரித்துக் கூறுதல் வேண்டும்.

கருத்துக்களை விளக்கும்போது, வேண்டிய இடங்களில் தகுந்த மேற்கோள்களைக் காட்டுதல் சிறந்தது. மேற்கோள்களைக் கையாளும்போது மேற்கோளுக்குரிய ஆசிரியர் யார் என்பது விளக்கப்பெற்றிருதல் வேண்டும்.

கட்டுரையில் சொற்றொடர்களை அமைப்பதில் மிகுந்த கவனத்தைச் செலுத்த வேண்டும். சொற்றொடரின் ஆரம்பமும் முடிவும் குற்றமின்றி இருத்தல். எழுவாய்க் கேற்ற வினை முடிவைக் கால வழு திணை வழு முதலிய வழுக்கள் இல்லாமல் அமைத்தல் வேண்டும்.

எழுத்துப் பிழைகளாலும் மாணவர்கள் ஏமாறுகின்றார்கள். எழுத்துப் பிழை ஏற்பட்டால் கருத்தும் மாறி விடுகின்றது. "பொறி இயல் வல்லுநர்" என்பதை நினைவின்றி "பொறியல் வல்லுநர்" என்று ஓர் எழுத்தினைக் குறைத்து விட்டால் பொருள் எவ்வளவு மாறுகிறது! ஆகவே ஒரு முறைக்கு இருமுறை படித்து எழுத்துப் பிழை ஏற்படாமல் தவிர்க்க வேண்டும்.

கட்டுரை முதலிலிருந்து முடிவுவரை ஒரே முற்றுப் புள்ளியாக இருத்தல் கூடாது. ஆங்காங்கே வேண்டிய இடங்களில் காற்புள்ளி, அரைப்புள்ளி, ஆச்சரியக் குறி இவைகளெல்லாம் பயன்படுத்தினால் கட்டுரை அழகுடன் விளங்கும், அது மட்டுமா! நாம் மதிப்பெண்ணையும் பெற முடியும் அல்லவா !

பள்ளியிலே படிக்கும்பொழுதோ கட்டுரைகளை நன்கு எழுதிப் பழகிக் கொண்டால், பிற்கால வாழ்வில் சிறந்த கட்டுரை ஆசிரியர்களாகவும், கதாசிரியர் களாகவும் மாறி விடலாம்.

ஒவ்வொரு கட்டுரையின் ஆரம்பத்தில் முன்னுரை யும், முடிவில முடிவுரையும தலைப்பாக இருக்கவேண்டும்

இதனினும் ஒன்று மிக முககியம். கையெழுததுத் தெளிவாக இருத்தல வேண்டும். விடைத்தாள்கள் திருத்துவோரின் உள்ளத்தைத் தம் வசப்படுத்தக கையெழுத்து மிகவும் பயன்படும் என்பதை மறவாதீர்கள்.

இதோ—சில முக்கியமான கட்டுரைகள், இவை களைப் பன்முறை படித்துப் பாருங்கள். இவைகளை மாதிரியாக வைத்துககொண்டு மேலும பல கட்டுரைகள எழுதிப் பழகுங்கள.

நேரத்தைப் பொன்போல் போற்றுக !

## 1. கடல் [வருணனைக் கட்டுரை]

[உட் பிரிவுகள் 1. முன்னுரை 2. கடலின் தோற் றம் 3. கடல் தரும பொருளகள் 4 கடலினுல அடையும நன்மை தீமை 5. முடிவுரை]

இறைவனின் படைப்பிலே தோன்றிய பொருள்கள் அனைத்தும இயற்கைப் பொருள்கள் எனப்படும். அப் பொருட்களை மனிதனுல் ஆக்கவும அழிக்கவும முடியாது. அப்பொருள்களில் ஒனறு கடல் கடலினுடைய வளர்ச்சி யும் குறைவும நம கண்களுக்கு விரைவில தெரிந்துவிடுவ தில்லை. காரணம? கடல் அளவில் பெரிதாக இருப்பதே யாகும இனி, கடலின் சிறப்பினை ஈண்டுக் காண்போம.

கடலின் தோற்றம் நம கண்களுக்கு எட்டாது ஒரே நீர்ப்பரப்பாகவே தோன்றும் இவ்வளவு தண்ணீர் எப் படிக் கிடைத்தது? இதன் அளவுதான் என்ன என்பதை நாம் அறியமுடிவதில்லை. இயற்கை அன்னையின் கூந்தல் நெளிவைப்போல் கடல் அலைகள் நெளிந்து விளையாடு கின்றன. காலைக் கதிரவன் தன் தலையை மெல்ல நீட்டி, இளங்கதிர் மஞ்சள் ஒளியைக் கடல அலைகளின் மேல் வீசி, இயற்கையை அழகாக்கி மகிழ்கின்றன். மாலைக்

காலத்து தோன்றிய நிலவு தன் பனிக்கதிர்களால் அலைகளின் ஆரவாரத்தை மிகுதிப்படுத்திச் சிரிக்கிறான். அந்நேரங்களில கடலின் அழகைக் காணக் கண்கள் இரண்டும போதாவே!

கடல் தரும் பொருள்களில் மிகவும சிறந்தது-உயர்ந்தது-விலை மதிக்க இயலாதது முத்தேயாகும. முத்தெடுக்கும தொழிலினால் எத்தனையோ ஏழை மக்கள பிழைக்கிறார்கள். தங்கள் வாழ்வையும் உயர்த்திக்கொளகிறார்கள். "முத்தனைன வெண்ணகையீர்" என்று கடல் தரும் முத்துக்களை தமிழ் இலக்கிய ஆசிரியர்கள் எத்தனையோ இடங்களில் கையாண்டுளளனர்.

"பவளச்செவ்வாய்" என்று நூலாசிரியர்கள் சிறப்பித்துக் கூறுகின்ற பவளம் எங்கிருந்து கிடைக்கிறது? கடலிலிருந்துதானே!

உலகத்திலுள்ள எல்லோரும் உப்பை மிக உயர்ந்ததாகக் கருதுகினறார்கள். நம உணவின் சுவையில் பெரிதும் பங்கு கொளளுவது உப்பேயாகும். "உப்பில்லாப் பண்டம் குப்பையிலே" என்று உப்பின் பெருமையைக் கூறுகின்றார்கள். இது மட்டுமா? "உப்பிட்டவரை உள்ளளவும் நினை"—என்பதும் ஆன்றோர் வாக்கேயாகும். இவ்வுப்பு எங்கிருந்து கிடைக்கின்றது? கடலிலிருந்துதானே!

உப்பின்றி உலகில் ஒருவரும் வாழ இயலாது உணாச்சிக குறைவு உள்ளவரை உப்பிட்டுத் தின்றயா? என்று கேட்டல் உலகியல். இவ்வுப்பு எங்கிருந்து கிடைக்கிறது? கடலிலிருந்துதானே!

பலவகையான மீன்கள் கடலில் வாழுகின்றன. இம மீன்கள் மனிதர்கட்கு உணவாக மட்டுமன்றி, மருந்தாகவும பயன்படுகின்றன. உடல் வலிமையை அதிகப்படுத்துகின்ற காட்லீவா ஆயில மீனிலிருந்து எடுக்கப்படுகின்ற மருந்தேயாகும். இன்னும பல வகையான மருந்துகள் கடல் மீனிலிருந்து தயாரிக்கப்படுகின்றன,

இன்னும சங்கு, சிப்பி, கடற்குச்சிகள் முதலியன கடலிலிருந்து கிடைக்கின்றன. கடற்காற்று மனிதர்களுக்குப் புதிய உணர்வுகளை ஊட்டி ஆரோக்கியத்தை வளர்க்கிறது.

ஆனால் கடல் சில சமயங்களில் கொந்தளிப்பதும் உண்டு. கடல் கொந்தளிப்பதனால் கபாடபுரம் மூழ்கிக் கன்னித் தமிழ் இலக்கியங்களில் பல நாம் இழந்தோமல்லவா? சில சமயங்களில் இவ்வாறு நேர்வதும் உண்டு. புயல் போன்ற இயற்கையின் திருவிளையாடலுக்குக் காரணம் கடல் என்று சில அறிஞர்கள் கூறுகின்றனர்.

கடலினால் நாம் பிறநாடுகளுடன் தொடர்புகொள்ள முடிகிறது. வாணிபத்தைப் பெருக்கிக் கொள்ள வழி செய்வது கடல். ஒரு நாட்டினுடைய கலாச்சாரம், பண்பாடு முதலியன வேறு நாட்டிற்குப் பரவுவதற்குக் காரணம் கடல் என்பதை யாரும் மறக்க முடியாது.

''விசும்பின் துளிவீழின் அல்லால் மற்றாங்கே, பசும் புற்றலை காண்பரிது'' என்று வள்ளுவரால் போற்றப் பட்ட மழை வருவதற்குக் காரணம் கடலேயாகும்.

முடிவுரை :- இவ்வாறு நமக்குப் பல்லாற்றானும் துணைபுரியும் கடலின் அழகையும், அதன் தன்மையையும் இன்னும் மிகுத்துச் சொல்வோமேயானால் கட்டுரை, நூல் வடிவாக மாறிவிடும், விரிவஞ்சி விடுக்கின்றேன்.

## பத்திரம் எழுதுதல்.

### 1. குடிக்கூலிப் பத்திரம்.

1960-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 9-ஆம் தேதி சென்னை நகர் லிங்கி செட்டித் தெருவிலிருக்கும் சின்னையா பிள்ளை குமாரர் இராமசாமி பிள்ளைக்கு, மேற்படி நகரில் உயர் நீதி மன்றத்தில் வேலை பார்த்து வரும் மாடசாமி ஆசாரி மகன் சிதம்பர ஆசாரி எழுதிக் கொடுத்த வாடகைப் பத்திரம்.

நான் தங்களுக்குச் சொந்தமான உஸ்மான்ரோடு 65-ஆம் நம்பர் உள்ள வீட்டை முன் பணம் ரூ. 500 கொடுத்து வாடகைக்கு எடுத்துள்ளேன். மாதம் ஒன்றுக்கு வாடகை ரூ. 150 பேசி மூன்று ஆண்டு வரை ஒப்புக் கொண்டிருப்பதால் நாளது தேதி முதல் ஒவ்வொரு மாதமும் வாடகையைத்

தங்கட்கோ, தங்கள் ஆர்டர் பெற்றவருக்கோ கொடுத்து, கைச் சாத்துப் பெற்றுக்கொள்வேணுக வும்.

குறித்தபடி வாடகை செலுத்தத் தவறினல் இரு திறத்தாருக்கும் ஒத்ததான ஒருமாத காலக் கெடுவில் வீட்டைக் காலி செய்து தருவேணுகவும், வீட்டிற்கு வெள்ளையடிப்பது பழுது பார்ப்பது, வீட்டிற்கு வரி செலுத்துவது தங்களைச் சார்ந்தவை நான் குடி புகும் நாள் முதல் மின்சாரச் செலவினை நானே ஏற்றுக் கொள்கிறேன். வீட்டை நல்ல முறையில் வைத்திருந்து மூன்று ஆண்டு முடிந்த வுடன் தங்கள் வசம் ஒப்புவித்து நான் செலுத்திய முன் பணத்தையும் பெற்றுக் கொள்கிறேன்.

சாட்சிகள் :— (ஒப்பம) மா. சிதமபர ஆசாரி,
9–9–60.

1. கா. சுந்தரம்.
2. மு. கருணநிதி.

## 2. விற்பனைப் பத்திரம்.

1950-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 26-ஆம் தேதி இராமநாதபுர மாவட்டம் திருவாடானை தாலுகா திருவாடானையில வசித்து வரும் ஆறுமுக முதலியார் மகன் தொண்டை மண்டல வேளாளர் குலம், இந்துமதம் வாணிகத்தொழில சுப்பிரமணிய முதலியாருக்கு,

மேற்படி மாவட்டம், மேற்படி தாலுகா சருகணி யில் வசித்து வரும் இராமுத்தேவர் குமாரர், நாட்டார் குலம் இந்து மதம் பயிர்த்தொழில் கிருஷ்ணத் தேவர் எழுதிக்கொடுத்த நன்செய் நில விற்பனைப் பத்திரம்.

கீழே குறிக்கப் பட்டுள்ள என் பட்டாவில் உள்ள நன்செய் 4 ஏக்கரையும் பத்தாயிரம் ரூபாய் விலை பேசி நான் தங்களிடம் முன்பணமாகப் பெற்றுக்கொண்டது ரூபாய் இரண்டாயிரம். தங்கட்குக் கொடுத்துள்ள நன்செய் நிலத்தை ஈடு காட்டி கிருஷ்ணக் கோனரிடம் 360 ஆகிய எண் பதிவுள்ள பத்திரத்தின்படி கடனக

வாங்கியிருக்கும் ரூபாய் நாலாயிரத்தையும், தாங்களே கொடுத்து மீட்டுக் கொண்ட வகையில் நான் பெற்றுக் கொண்டது ரூ. 4000 ஆவணக்களரியில் பதியும்போது கட்டுவது ரூ. 4000 ஆக இம் மூன்று வகையிலும் நான் பெற்றுக்கொண்டது ரூ. பத்தாயிரம்.

ரூபாய் பத்தாயிரத்தையும் நான் பெற்றுக்கொண்டபடியால் எனக்கோ, என் சந்ததியாருக்கோ இந் நிலத்தில் எந்தவிதமான பாத்தியமுமில்லை, இந்நிலத்தின் மீது மேற்காட்டிய ஈடு தவிர வேறு வில்லங்கமில்லை, இந் நிலத்தைத் தாங்களே இனிப் பயிர் செய்து, ஆண்டு அனுபவித்துக் கொள்ள வேண்டியது. வேறு ஏதேனும் வில்லங்கங்கள் இருந்தால் சட்டப்படி தீர்த்துவிட நானே கட்டுப்படுகிறேன்.

## நிலத்தின் விபரம்

கருப்பையாக் கோனர் நஞ்சைக்குத் தெற்கு முத்துத் தேவர் நஞ்சைக்கு வடக்கு, பெரியசாமி பிள்ளை வாழைக் கொல்லைக்குக் கிழக்கு. கந்தன் செட்டியார் நன்செய்க்கு மேற்கு. இந்த நான்கு எல்லைக்குட்பட்ட இந்த மாலில் சர்வே எண் 406-A. உள்ள நான்கு ஏக்கர் நன்செய் நிலம் மட்டும விற்கப்படுகிறது,

இரா. கிருஷ்ணத்தேவர்,
26—3—60

சாட்சிகள் :— 1. கு. கந்தசாமி முதலியார்
2. பொ. சிவப்பிரகாசம் பிள்ளை

இப்பத்திரம் எழுதியது.
மு. ஆறுமுகம் முதலியார்

## 3. குத்தகைப் பத்திரம்

1960-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 26-ஆம் தேதி இராமநாதபுரம் மாவட்டம் புளியால் என்ற ஊரில் வசிக்கின்ற வேலாயுதன் செட்டியார் மகன் வணிகர் குலம். பயிர்த்தொழில் இந்துமதம் இராமசாமி செட்டியார் அவர்களுக்கு

மேற்படி மாவட்டம் தேவகோட்டையை அடுத்த கண்டதேவியில் வசித்துவரும சண்முகம் பிள்ளை குமாரர் வேளாளர் குலம் பயிர்த்தொழில் இந்துமதம் கருப்பையா பிள்ளை எழுதிக் கொடுத்த குத்தகைப பத்திரம்.

கீழ்க் குறிக்கப்பட்டுள்ள தங்கள் உரிமையில் உள்ள நன்செய் நிலங்களை நாளது 1026-ஆம் பசலிக்கு ஓர் ஆண்டிற்கு 60 கலம் என்று பேசித் தாங்கள் சம்மதித்து எனக்கு விட்டிருக்கிறபடியால், நான் அந்நிலங்களை உழுது எருவிடுதல், களை பிடுங்கல், அறுப்பறுத்தல் முதலியனவற்றை நானே செய்து கொண்டு தங்களுக்குக் குத்தகை வாரமாக ஏக்கர் ஒன்றுக்கு 10 கலம் நெல் வீதம் 6 ஏக்கருக்கும் 60 கலம் நெல்லாகவோ அல்லது அக்கால நிலவரப்படி பணமாகவோ தங்களிடமாவது தங்கள் ஆர்டர் பெற்றவரிடமாவது செலுத்தி ரசீது பெற்றுக்கொள்வேனாகவும். அவ்வாறு செய்யத்தவறினால் சட்டப்படி நான கட்டுப்படுகிறேன். எனக்கு மறு பசலியும் உழவுக்கு வேண்டுமானால் நான் வேறு குத்தகைப் பத்திரம எழுதிக்கொடுத்துவிட்டு நிலத்தை உழுகின்றேன். இந்தப்படி நான் சம்மதித்து எழுதிக்கொடுத்த குத்தகைப் பத்திரம.

## நிலங்களின் விவரம்

| | |
|---|---|
| பெரிய வாய்க்கால் முதல்மடை | 3 ஏக்கர் |
| சின்ன வாய்க்கால் கடைசிமடை | 3 ,, |
| | 6 ஏக்கர். |

ஆறு ஏக்கர் மட்டும்.

நானும் இதற்குச் சம்மதிக்கிறேன்.

இராமசாமி செட்டியார்,
26—3—60.

கருப்பையா பிள்ளை,
26—3—60.

இக்குத்தகைச் சீட்டை எழுதியது

மு ஆறுமுக முதலியார்

## வாழ்க்கை வசதி வேண்டி ஊரார் எழுதிய கூட்டு விண்ணப்பம்

நிர்வாக அதிகாரி அவர்கள்,
ஊராட்சி மன்ற அலுவலகம்,
காரமடை. (கோவை மாவட்டம்)

கோவை மாவட்டம், காரமடை என்னும் சிற்றூரில் வாழும் குடி மக்கள் அனைவரும் தாழ்மையுடன் எழுதிக் கொண்ட விண்ணப்பம்.

மதிப்பிற்குரிய ஐயா!

இந்த ஊரில் குடிக்கவும், குளிக்கவும் நல்ல தண்ணீர் கிடைக்காமல் மக்கள் அனைவரும் அவதிப் படுகிறார்கள். தெருக்கள் மேடு பள்ளமாக இருக்கின்றன. வீட்டிலுள்ள கழிவு நீர் வெளியே வந்து வீதி வழியே செல்வதால், மக்கள் பெரிதும் துன்புறுகின்றனர். கழிவு நீர் நாற்றத்தால் பலர் நோய்வாய்ப் பட்டு வருந்து கின்றனர். இத்துன்பங்களை நீக்கி, எங்கள் வாழ்க் கையை வளமாக்க வேண்டுகிறோம்.

தெருக்களில் குழாய்கள் அமைத்துக் குடிக்கவும், குளிக்கவும் வசதி செய்துதரக் கேட்டுக்கொள்கிறோம். தெருக்களைச் சீர்படுத்தி மேடு பள்ளம் இல்லாமல் நடப்பதற்குத் தக்கவாறு நன்றாக அமைத்துத்தர வேண்டுகிறோம்.

எங்கள் தேவைகளை ஆராய்ந்து பார்த்து, வேண்டிய வசதிகள் செய்து தரக் கேட்டுக் கொள்கிறோம்.

இப்படிக்கு,
ச. சுப்புசாமி
இரா. சிவசாமி
பா. ஞானவேலு

காரமடை
17—6—65

## தன் வரலாற்றுக் கட்டுரை "பேனா"

என்னுடைய பெயர் 'பேனா' என்பது, என்னை எல்லோரும் விரும்புவார்கள். செல்வரிடத்தும், உயர்ந்த அலுவலரிடத்தும் எழுத்தாளரிடத்தும்,

மாணவரிடத்தும் நான் இருப்பேன். புது மணமக்கள் கைகளில பொலிவுடன் அன்பளிப்பாக இருப்பேன். என்பெயர் "பார்க்கர்" என்பது.

என் வரலாறு மிகவும் சுவையானது. நான் கனடா நாட்டிற் பிறந்தேன். பிறந்த நாட்டின் பெருமைக்காக எல்லா நாடுகளுக்கும் செல்லுகின்ற ஒரு வாய்ப்பினைப் பெற்றேன். என்னுடன் பலர் பிறந்தனர். எங்களுக் கெல்லாம் பல பெயர்களுண்டு. நான் பிறந்த பதினைந்து நாட்களுக்கெல்லாம் இந்தியாவிற்கு அனுப்பப்பட்டேன். நான் பெரிதும் மகிழ்ச்சியுற்றேன்.

என்னை ஒரு அழகான பெட்டியில் அடைத்தார்கள். இருட்டறை வாழ்வு எனக்குக் கிடைத்தது. இந்த உலகமே எங்களுக்குத் தெரியவில்லை. திடீரென ஒரு நாள் விழித்துக் கொண்டேன். நான் வாழ்ந்த பெட்டி திறக்கப்பட்டது. சூரியனைக் கண்டு மகிழ்ந்தேன். என்னைப் பலரும் பார்த்து மகிழ்ந்தார்கள். ஆனால் பிறந்த நாட்டை மறந்து எங்கேயோ வந்து விட்டோமே என்ற உணர்வு தோன்றியது. அங்கும் இங்கும் சுற்றிப் பார்த்தேன். நான் இருக்கும் இடம் சென்னை என்பதை யும், ஒரு பிரபல வியாபாரியின் கடையின் கண்ணாடி அலமாரியில் உள்ளோம் என்பதையும் உணர்ந்தேன். என்னைப் பலரும் வந்து வந்து பார்த்தார்கள். எனக்கு இல்லாத புகழையெல்லாம் வியாபாரி விளக்கிக் கூறினான். என்மேல் எவ்வளவு அன்பிருந்தால் அவ்வாறு சொல்லுவான்? ஆனால் இந்த வியாபாரியைப் பிரிந்து செல்ல வேண்டுமே என்ற அச்ச உணர்வு எனக்குத் தோன்றியது ஒரு நாள்......

ஒரு மனிதர் வந்து, என்னை வாங்கிச் சென்றார். என்னை வளர்த்த வியாபாரிக்கு நன்றி செலுத்த வேண்டுமே என்ற உணர்வில் நான் நன்கு உழைத் தேன். என்னை வாங்கிச் சென்றவர் ஓர் எழுத்தாளர். எத்தனை எத்தனையோ கதைகளையும், நாவல்களையும் உருவாக்கிக் கொடுத்து அவருக்குப் புகழ் வாங்கிக் கொடுத்தேன். அவர் என்னை மிகவும் நேசித்தார். அவருடைய கதை, நாவல்களில் வில்லன்களைக் கொல்லக் காரணமாயிருந்தவன் நான்தானே? அக்

குற்றத்திற்காக நான் என்ன தண்டனை வேண்டுமானு லும் அனுபவிக்கத் தயாராய் இருக்கிறேன்.

அவர் ஒரு புரட்சி எழுத்தாளர். என்னைத் துணைக் கொண்டு நாட்டையே திருத்தியிருக்கின்றார். வீரனின் கூரிய வாளைக்காட்டிலும் எழுத்தாளரின் பேனாமுனை மிகக் கூர்மையுடையது என்பதைத் தன் வாழ்வில் நிரூபித்துக் காட்டியுள்ளார்.

சில பல ஆண்டுகள் கழிந்தன. நானும் நன்றாக உழைத்து அலுத்துக் களைத்து முதுமைப் பருவம் எய்தினேன். என்னைக் காத்த எழுத்தாளர் மறைந்தார். என் புகழும் அவருடன் மறைந்தது. அவர் மைந்தர் என்னை எடுத்துக் காத்தார். நான் என்னருமை எழுத் தாளரை நினைந்து கண்ணீர் வடிப்பேன். என்னுடைய கண்ணீர் மைந்தருடைய சட்டையில் நன்றாகப் படிந்து விடும்.

என் மேல் அன்பு கொண்ட மைந்தர் எனக்கு ஓய்வு கொடுத்தார். அவருடைய பெட்டியின் மூலையில் கிடந் தேன். நான் பிறந்தது எங்கே? இப்போது இருப்பது எங்கே? என் அழகு எங்கே? என்று எண்ணி வருந்து கிறேன். "எல்லாப் பொருளும் நிலைப்பதில்லை". வாழ்வது மில்லை" என்று எழுத்தாளர் என்னை வைத்து எழுதியது என் நினைவிற்கு வருகிறது.

## விளக்கக் கட்டுரை.

இதில் கொடுக்கப்பட்டுள்ள தலைப்புக்களைத் தெரிந்துகொள்வது மிகவும் அவசியமாகும். தலைப்புக் களும் அதுபற்றிய உட்பிரிவுகளும் கொடுக்கப்பட் டுள்ளன. உட்பிரிவுகளின் துணைகொண்டு மாணவர்கள் கட்டுரைகளை விரித்துணர்ந்துகொள்க.

---

### (i) செய்தித் தாள்களும் பயனும்

1. முன்னுரை 2. செய்தித்தாளின் தோற்றம் — முதன் முதலில் பத்திரிகை வெனிஸ் நகரத்தில் தோன் றியது. ஆண்டு 1633. அதன் பெயர் Public intelligence.

1835-இல் இந்தியாவில் பத்திரிகைத் தொழில் ஆரம்பமானது. முதலில் செய்திகளை மட்டும் தெரிவித்தன. இன்று கலை, மதம், இலக்கியம, விஞ்ஞானம், வேதாந்தம், சட்டம, திரைப்படம அனைத்திற்கும செய்தித்தாள்கள் உள்ளன 3 சுதந்திர நாட்டில் செய்திததாள், 4. செய்திததாளின் பயன்—மொழிப்பயிற்சி, வியாபாரத் தொடர்பு. வானொலிச் செய்தி–அரசியல் செய்திகள்-மக்களின் எழுத்தாற்றலை வளர்த்தல். 5. முடிவுரை-பத்திரிகைகளின் விலைகுறைவு இதில் குறிப்பிட்டு முடிக்க.

---

## (ii) நூல் நிலையங்கள்

1. முன்னுரை — "கேடில் விழுச்செல்வம்" என்ற குறளைப் பயன்படுத்துக. 2. கல்வி நிலையங்களும் நூல் நிலையமும்–பள்ளிகள் கல்லூரிகளிலுள்ள நூல் நிலையங்களை விளக்குதல் 3. பண்டைத் தமிழக நூல் நிலையங்கள் – மூன்று சங்கங்களும் நூல் நிலையங்களே. தஞ்சையில் சரபோஜி மன்னனால் நிறுவப்பட்ட தஞ்சை சரசுவதி மகால். 4. நூல் நிலையங்களின் பிரிவு 1. நூல் நிலையம் 2. ஆராய்ச்சி நூல் நிலையம் 3. அசையும் நூல் நிலையம் 4. நூல் நிலையங்களினால் நாம் அடையும் நன்மைகள் – விலையுயர்நத பத்திரிகைகளை எல்லோரும் எளிதில் படிக்க முடிகிறது. 5. முடிவுரை.

## (iii) கிராமச் சீர்திருத்தம்

1, முன்னுரை 2, நாட்டின் முதுகெலும்பு கிராமங்களே–கிராமஙகளிலிருந்து விளை பொருள்கள் வருதல்–விறக விற்பனை—நாடு முன்னேற கிராமங்களைக் கவனிக்க வேண்டும் 3. கிராமங்களைச் சீர்திருத்துதல்–சாலை அமைத்தல் — குளம் வெட்டல — ஏரி உருவாக்குதல் — மக்களைக் கொண்டு குறைந்த செலவில் எல்லா நலனையும் தேடிக்கொள்ளுதல் — வானொலி, நூல் நிலையம், பள்ளி அமைத்து அவைகளை வளரும்படி செய்தல் 4. சிறு சிறு மருத்துவ மனைகள் அமைத்தல் — மனிதர்களுக்கென்று ஒன்றும், மிருகங்களுக்காக ஒன்றும் ஏற்

படுத்துதல் 5. முடிவுரை நகரவாசிகள் அடிக்கடி கிராமங்கடகுச் சென்று கிராம நலத்திற்குப் பாடுபடுதல் வேணடும.

## (iv) கூட்டுறவு இயக்கம்

1. முன்னுரை—கூடி வாழ்வதின் நன்மை 2. கூட்டுறவு தோன்றிய விதம—முதன் முதலில் ரப்பீசன் என்பவரால் 19-ஆம நூற்றுண்டில ஜெர்மனியில் தோற்றுவிக்கப்பட்டது. உழவாகளின் நலனுக்காகத் தோன்றியது. முதலில கடன் கொடுப்பதற்கு ஏற்படுத்தப்பட்ட போதிலும் இப்போது எலலாத துறைகளிலும கையாளப்பட்டு வருகிறது

3 கூட்டுறவுப் பண்டகசாலைகள் :— கொள்ளை லாபம பெறும் வியாபாரிகளிடமிருந்து மக்கள் தங்களைக் காததுக்கொள்ள கூட்டுறவுப் பணடகசாலைகள் பெரிதும பயன படுகின்றன. கூடடுறவுப் பணடகசாலைகள் தன் தேவைகளை உற்பத்தியாளாகளின் நேரடித தொடர்பில் முடிததுக்கொளகின்றன.

4. கூட்டுறவு இயக்கமும் உழவுத் தொழிலும்

5. கூட்டுறவும் நாட்டு முன்னேற்றமும்-கூட்டுறவு முறையில் பலர் ஒன்று சேர்ந்து பெரிய தொழிற்சாலைகள் நடத்தி நாட்டை முன்னேற்றலாம். அவ்வாறு செய்தால் தனிப்பட்ட முதலாளி அதிக லாபம் பெறுவதைத் தவிர்க்கலாம்.

6. முடிவுரை.

## (v) முதியோர் கல்வி

1. முன்னுரை 2. நாட்டின் நிலைமை படித்தவர் தொகை மிகக்குறைவு – படிக்காததால் முன்னேற்றம் பாதித்தல் கல்வியிற் சிறந்திருந்தால் நாடு விரைவில் முன்னேறும்.

3. முதியோர் கல்வியின் அவசியம்–பெற்ற சுதந்திரத்தைப்பேணி வளர்க்க நாம் முதியோர் திட்டத்தைத் துவங்க வேண்டும். முதியோர்கள் படித்தால்தான் தம் சந்ததியினர் படிக்கவேண்டுமென எண்ணுவார்கள்.

4. முதியோர்களுக்குக் கற்பிக்கும் விதம் – எளிய இனிய முறையில் கற்பித்தல்—வாழ்க்கையோடு இணைத்துக் கற்பித்தல்.

5. முடிவுரை.

## (vi) தொழிற் கல்வி

1. முன்னுரை–கல்வி ஏட்டுக்கல்வி, தொழிற்கல்வி என இருவகைப்படும். தொழிற்கல்வியைப்பற்றி ஈண்டுக் காண்போம். 2. ஏட்டுக்கல்வி, தொழிற்கல்வி—விளக்கம். படித்து உணர்வது ஏட்டுக்கல்வி - படித்தவற்றைச் செய்துகாட்டுவது தொழிற்கல்வி. 3. தொழிற்கல்வியின் சிறப்பு. புலவனின் ஓவியம் – எழுத்தாலானது. ஓவியக்காரன் புலவன் சொல்லோவியத்தை திரை ஓவியமாக்குகின்றான். புலவனின் சொல்லோவியத்தைப் படித்தவர்கள் மட்டும் உணர முடியும். ஓவியனின் கை வண்ணத்தைப் பாமரரும் உணர முடியும் (இவ்வுவமையைக்கொண்டு செய்தியை விளக்கிக்கொள்ளுக) 4. தொழிற்கல்வியின் அவசியம் – தொழிலைக் கொண்டு தான் நாடு முன்னேற முடியும். 5. தொழிற் கல்வியின் பயன்—ஏட்டுக் கல்வி படித்தவன் பிறருக்கு அடிமையாயிருந்து வாழவேண்டும் தொழிற்கல்வியை உணர்ந்தவன் சுதந்திரமாக வாழமுடியும் 6. தொழிற் கல்வியைப் பரப்பும் முறை – பள்ளிகளில் தொழிலைப் பழகும்படி செய்தல். தொழிற்கல்வியில் தேருத மாணவனை மேல் வகுப்பிற்கு அனுப்பப்படுதல் கூடாது. ஏழை பணக்காரன் என்ற வேறுபாடு இல்லாமல் எல்லோரும் தொழிற் கல்வியை உணரும்படி செய்ய வேண்டும். முடிவுரை—ஒவ்வொருவரும் தங்கள் குலத் தொழிலை மறக்கலாகாது தங்கள் குலத்தொழிலோடு வேறு தொழில்களையும் கற்று நாட்டின் வளர்ச்சிக்குப் பாடுபடவேண்டும்.

## (vii) விஞ்ஞானத்தின் நன்மை தீமை

1. முன்னுரை – காலம் மாறிக்கொண்டு செல்லச் செல்ல சமுதாயம் மாறுகிறது. காரணம் – விஞ்ஞானம் தன் தேவைகளை விரைவில் பூர்த்தி செய்துகொள்ள விஞ்ஞானம் உதவுகிறது. விஞ்ஞானத்தின் அரிய

சாதனைகளுள் வானொலியும் ஒன்று. வானொலியின் முக்கியத்துவத்தை இன்றைய உலகம் நன்கு உணருகின்றது. மின்சாரத்தின் உதவியால் இயங்கும் விஞ்ஞானப் பொருள்கள். எத்தனை எத்தனையோ நன்மைகள் ஏராளமாயினும் தீமைகளும் சில உள,

விஞ்ஞானத்தின் உதவி கொண்டு உலகத்தையும் அழிக்கக் கூடிய அபூர்வ சக்திகளை விஞ்ஞானிகள் கண்டு பிடித்துள்ளார்கள். மனித இனத்தில் சண்டை ஏற்படுமானல் விஞ்ஞானத்தின் அபூர்வ சக்தியை வைத்திருப்பவன் மற்றவரை எளிதில் கொல்ல முடியும்-பொதுவாக விஞ்ஞானக்கருவிகளோடு மனிதன் தொடர்புகொள்ளும் போது மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். கவனம் குறையுமேயானல் ஆக்கப் பொருளால் அழிவைத்தான் காணமுடியும்

முடிவுரை—விஞ்ஞான வளர்ச்சி மனிதனை மெய்ஞ் ஞானத்தினின்றும் திருப்பிவிடாதனவாய் இருத்தல் வேண்டும் மெய்ஞ்ஞானம் அழியாத விஞ்ஞான வாழ்வைப்பெற நாம பெரிதும் முயலவோம. "உலகத்தோடு ஒட்ட ஒழுகல்" என்ற வள்ளுவனரின் கருத்துப்படி விஞ் ஞான உலகத்தோடு இணைந்து வாழ்ந்து உயாவைப பெறுவோம.

## (viii) வானொலி

1. முன்னுரை–விஞ்ஞானம் கண்ட சாதனைகளுள் வானொலியும் ஒன்று. வானொலியைக் கண்டதும் நம் மனக்கண் முன் மார்க்கோனியின் உருவம் தோன்றல்.

2. வானொலி வேலை செய்யும் விதம் – வானத்தில் ஈதர் அலைகள் எங்கும் பரவிக்கிடக்கின்றன. ஈதர் அலையுடன் சேர்ந்த மின்சார அலைகள் வானிற் சுற்றும் போது, வானொலிப் பெட்டியில் உள்ள ஒலிவாங்கிகள் (Receivers) அவ் அலைகளை இழுக்கின்றன. அந்த அலைகளின் ஒலியை வானொலிப்பெட்டியில் உள்ள ஒலிபெருக்கி அதிகப்படுத்துமபோது நாம் செவிக்கின்பத்தைப் பெறுகிறோம்.

3. வானொலியால் அடையும் நன்மைகள் – பல நாட்டுச் செய்திகளை நாம் உணர்ந்துகொள்ள முடிகிறது.

உலகத்தையே ஒரு குடும்பமாக்குகிறது. கால நிலைகளை அவ்வப்போது அறிவித்து மக்களை அபாயங்களிலிருந்து காப்பாற்றுகிறது சிலோன் வானொலி நிலையம் வியாபார விளம்பரம் செய்து வியாபார வளர்ச்சிக்குப் பாடுபடுகிறது. துன்பம் அடைந்த உள்ளங்களுக்கு இன்பம் ஊட்டுவதற்காகச் சில நேரங்களில் இனிமையான இசைத்தட்டுகளை ஒலி பரப்புகின்றனர். கிரிகெட் போன்ற விளையாட்டு நிகழ்ச்சிகளை நேரில் காண்பது போன்ற உணர்ச்சியை ஏற்படுத்த, விளையாட்டு நடைபெறும்போது அவைபற்றி ஒலி பரப்புகின்றனர்.

4. வானொலியும், கல்வியும்—மாணவர் கல்வியறிவைப் பரப்புவதில் வானொலி முதலிடம் பெறுகிறது. உயர்நிலைப் பள்ளி, நடுநிலைப்பள்ளி, கல்லூரி இவைகளுக்கான கல்வி ஒலிபரப்புக்களை வானொலி நிலையம் ஒலிபரப்பி வருகிறது. பாடசம்பந்தமான நாடகங்கள், சொற்பொழிவுகள் நடை பெறுகின்றன. வாரந்தோறும், சனிக்கிழமை ஞாயிற்றுக்கிழமைகளில் சிறுவர்களுக்கான நிகழ்ச்சிகள் நடத்தப்பெறுகின்றன ஒவ்வொரு நாள் மாலையிலும் இசைப்பயிற்சி கற்றுக் கொடுக்கப்படுகிறது.

5. முடிவுரை—மக்களுக்கும், மாணவர்கட்கும் வானொலி நன்கு பயன்படுகிறது. "செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம்" என்ற வள்ளுவரின் செவிச் செல்வத்தைப் பெற வானொலி நமக்கு மிகவும் உதவுகின்றது. வாழ்வின் தேவைகளுள் வானொலியும் ஒன்று

## (ix) கிராமப் பஞ்சாயத்து

1. முன்னுரை:— இந்தியா கிராமம் நிறைந்த நாடு. கிராமங்கள் முன்னேறினால் கண்டிப்பாக நமது நாடு முன்னேறும். பல கிராமங்களை ஒன்றுசேர்க்கும் முயற்சியால்தான் கிராமப் பஞ்சாயத்து முறையை நமது இந்திய அரசாங்கம் கொண்டு வந்திருக்கிறது.

2. பஞ்சாயத்துக்களினால் உண்டாகும் நன்மைகள்—நாட்டின் அதிகாரம் ஒரே இடத்தில் குவிந்து கிடக்காமல் எங்கும் பரவிக் கிடப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஊர்க் காரர்களிடையே ஏற்படும். சண்டை சச்சரவுகளைப் பஞ்சாயத்தே தீர்த்துவிடும். பஞ்சாயத்துத் தலைவர்களும்,

உறுப்பினர்களும அவ்வூாக்காரர்களாக இருப்பதால் தங்கள் ஊர் முன்னேற்றத்தைக கவனிப்பார்கள். நாட்டின் ஆட்சி மாறினாலும, பஞ்சாயததுக்கள் மாறவேண்டிய அவசியம இருககாது பண்டைககாலத்தில கிராமங்கள அமைதியாக இருந்ததற்குக காரணம பஞ்சாயத்து ஆட்சியேயாகும

3. பஞ்சாயத்து அமைப்பு :- 500 பேர்களுக்கு ஒன்று அமைக்கப்படுகிறது. ஒரே கிராமத்தில் 500 பேர்கள் இல்லாவிட்டால் இரண்டு மூன்று கிராமங்களை இணைத்துப் பஞ்சாயத்து நிறுவப்படுகிறது.

4. பஞ்சாயத்துத் தேர்தல் — ஜனநாயகம் உள்ள நம் நாட்டில் பஞ்சாயத்து உறுப்பினர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவரே யாவர். அவருள் ஒருவர் தலைவராய் வருதல் வேண்டும்.

5. பஞ்சாயத்தின் கடமைகள் — ஊர் மக்கள் நலனுக்குப் பாடுபடுதல், வீதிகளில் விளக்கமைத்தல். அழகான கட்டிடங்களைப் பள்ளிக்கூடமாகக கட்டுதல். கட்டாயக் கல்வியைக் கொண்டு வரல். ஏழைகளுக்குப் பகல் உணவு அளித்தல். உடை. வழங்குதல். அரசாங்கத்திடமிருந்து கடனுகப்பணம் பெற்று, விவசாயிகட்குக் கொடுத்து, கூட்டுறவு முறையைச் செயற்படுத்தி கிராம முன்னேற்றத்திற்குப் பாடுபடுதல், வழக்குகளை விசாரித்து நீதி தவருமல் தீர்ப்பளித்தல், சாலை அமைத்தல்.

6. முடிவுரை :— பஞ்சாயத்துக்கள் சிறு சிறு பாராளுமன்றங்களேயாகும். பஞ்சாயத்துச் சபையில் அங்கம் வகிப்பவர்களுடன் மக்கள் ஒத்துழைத்தால் உயர்வடையலாம்.

## (x) இளைஞர் இயக்கங்கள்.

1. முன்னுரை :- இளைஞர்களே நாட்டின் முதுகெலும்பு போன்றவர்கள். நாட்டின் செல்வங்கள் இளைஞர்களே. அறிவிலும், ஆற்றலிலும் சிறந்து விளங்குவதற்கு ஏற்ற பயிற்சிகளைப் பள்ளிகளிலே அளிப்பதற்கு ஒவ்வொரு நாட்டு அரசாங்கமும் முன் வந்திருக்கிறது.

2. சாரணர் படை – மிகப்பழமையான இயக்கம். முதலில் இராபர்ட்பேடன் என்னும் ஆங்கிலேயரால் 1908-இல் தோற்றுவிக்கப்பட்டது. சாரணர் படை இல்லாத பள்ளியே இல்லை. ஒழுக்கம், உண்மை, தன்னம்பிக்கை, ஒற்றுமை முதலிய அருங் குணங்களில் பல பயிற்சிகளைச் சாரணர்கள் பெறுகின்றனர் "எப்போதும் தயாராயிரு" என்பதே சாரணர் **குறிக்கோள்** இளைஞர் இயக்கங்களில் மிகச் சிறந்தது இதுவே.

3. சிறுவர் செஞ்சிலுவைச் சங்கம்.

சுவிட்சர்லாந்து நாட்டைச் சேர்ந்த ஹென்றி டுனென்ட் என்பவர் போர்க்காலத்தில் இறுதிப்படைகளிலும் காயமுற்றவர்க்கு இரங்கி அவர் துன்பத்தைத் துடைக்கச் செஞ்சிலுவைச் சங்கம் என்னும் இயக்கத்தைத் தொடங்கினர். மக்களுக்குப் பலவகைகளிலும் துணைபுரியும் நன்மை உடையது. உலகம் ஒரு குடும்பம் என்னும் கொள்கையில் பல நாட்டு மக்களுடனும் தொடர்பு கொண்டுள்ளது இச்சங்கம். செஞ்சிலுவைச் சங்கம் அன்பு, அருள், ஒற்றுமை முதலிய நற்பண்புகளை மாணவர் இடையே பரப்பி வருகிறது.

**தேசீய இளைஞர் இராணுவப்படை :-** நம் நாடு உரிமை பெற்றபின் பள்ளிகளில் மாணவர்களுக்கு இராணுவப்பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது. மாணவர் படை தரைப்படைப்பிரிவு, கடற்படைப் பிரிவு, விமானப் படைப் பிரிவு என மூன்று பெரும் பிரிவுகளை உடையது. இவ்வியக்கத்தில் பயிலும் மாணவர் தனிப்பட்ட மதிப்பும் பண்பாடும் உடையவர்களாய் அனைவரும் போற்றுமாறு விளங்குகின்றனர். இளைஞர் இராணுவத் துணைப்படை (A. C. C.) ஒன்றும் அண்மையில் நிறுவப்பட்டுள்ளது.

**சமூக நலத் தொண்டர் படை :-** மாணவர்கள் சமூக நலத்தில் பற்றுக் கொள்ளும் பொருட்டுப் பல தொண்டர்கள் படை நிறுவப்பட்டுள்ளன. கிராமங்களுக்குச் சென்று சுகாதாரம், கல்வி முதலியவற்றைப் பரப்புகின்றனர்.

முடிவுரை :- இளைஞர் இயக்கங்கள் அனைத்தும் 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற கொள்கையில் வளர்ந்து வருகின்றன. மாணவர்கள் இதன் பெருமை அறிந்து, இயக்கங்களில் கலந்து கொண்டு தங்கள் வாழ்வைச் சிறப்புறச் செய்து கொள்ள வேண்டும்.

**பின்வரும் செய்யுளைப் படித்துணர்ந்து அதன் திரண்ட கருத்தைச் சுருக்கமாக உரைநடையில் வரைக :—**

ஈன்று புறந்தருதல் என் தலைக் கடனே;
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
ஒளிறு வாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.

[அருஞ்சொற்கள்:-புறந்தருதல் - வளர்த்தல்;சமம் = போர்]

இப்பாடலில் தாய், தந்தை, கொல்லன், வேந்தன், மகன் கடமைகளை விவரிக்கின்றார். தாயின் கடமையில் குழந்தையைப் பெற்று அதனை நன்முறையில் பாதுகாத்தல் முதன்மையானதாம். தந்தையின் கடமை அவனை அறிவுடையோனாக்குதலாம். அவனுக்குரிய வேல் முதலிய படைக்கலங்களைச் செவ்வையாக்கிக் கொடுத்தல் கொல்லன் கடமையாகும். அவனை நல்வழிப் படுத்தல் வேந்தன் கடமையாகும். போரிலே பகைவர்களை அழித்து யானைகளைக் கொன்று வெற்றியோடு திரும்புதல் காளையாகிய அவ்வீரனின் கடமையாம்.

கீழ்க்கண்ட செய்யுளுக்குத் திரண்ட கருத்து எழுதிப் பழகுக

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமையில்லை
திறமான புலமையெனில் வெளிநாட்டார் அதை
வணக்கஞ் செய்தல் வேண்டும்.

[S. S. L. C. March 1962]

அடியிற்காணும் உரைநடைப் பகுதியைப் படித்துப் பொருள் உணர்ந்து, பின் அதனைப் பொருளில் மாறுபாடு ஏற்படாமல், அதனை மூன்றில் ஒரு பங்கு அளவில் சுருக்கி வரைக.

தமிழ்நாட்டில் வாழ்ந்த நல்லிசைப் புலமை மெல்லியலார்களுள் தலைசிறந்தவர் ஔவையார். ஔவையார் வாக்கைத் தெய்வ வாக்காகப் போற்றினர் தமிழ் மக்கள். தமிழகத்தில் அவர் பாராத ஊரில்லை. வடவேங்கடம் முதல் தென் குமரி வரையுள்ள நாடுகளை நேரில் கண்ட அவ்வம்மையார், அவற்றின் சிறப்பியல்களை ஒரு செய்யுளால் உணர்த்துகின்றார்; சேர, சோழ, பாண்டியர் என்று நெடுங்காலமாக வழங்கிவரும் முறையினைப் பின்பற்றி, 'வேழம் உடைத்து மலைநாடு' என்று சேர நாட்டின் பெருமையை எடுத்துரைத்தார். அவர் வாக்கின் திறத்தால் சேர நாட்டில் அன்று இருந்த யானைச் செல்வம் இன்னும் அழியாமல் நின்று நிலவுகிறது. சோழ நாடு நீர் வளமும், நிலவளமும் உடையது. ஆதலால் சோற்றுப் பஞ்சம அந்நாட்டில இல்லை. அச்சிறப்பினைக் கண்டு, 'சோழ வளநாடு சோறுடைத்து' என்று நெஞ்சாரப் புகழ்ந்துரைத்தார். பாண்டியர்க்குரிய தென்கடலிலே சிறந்த முத்து விளைந்தது. முத்துச் செல்வத்தைக் கண்டு மெத்த மகிழ்ச்சியுற்ற அம்மையார், 'தென்னாடு முத்துடைத்து', என்று பாண்டியன் நாட்டைப் பாராட்டினார். இவ்வாறு முடியுடை வேந்தர் ஆண்ட நாட்டின் நலன்களைக் கூறியபின்னர் தமிழகத்தின் சென்னியாய்த் திகழும் 'தொண்டைநாடு சான்றோருடைத்து' என்று சீராட்டினார்.

## சுருக்கப்பெற்ற பகுதி

தமிழ் நாட்டில் வாழ்ந்து வடவேங்கடம் தென்குமரி வரையுள்ள அந்நாடு முழுவதும் நேரில் கண்ட ஔவையார் என்ற நல்லிசைப் புலமை மெல்லியலார் சேர, சோழ, பாண்டிய நாட்டின் சிறப்பை முறையே யானை மிகுதியும் உடைமையான் வேழமுடைத்து மலைநாடு என்றும், சோற்றுப்பஞ்சம் இன்மையால் சோழநாடு சோறுடைத்து என்றும், முத்துச் செல்வம் உடைமையான்

தென்னாடு முத்துடைத்து என்றும் இறுதியாகத் தமிழகத்தின் செனனியாய தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்தென்றும பாராட்டிச் சீராட்டி ஒரு செய்யுளால் உணர்த்துகின்றார்.

## மொழிப் பயிற்சி

### (i) உவமை வாக்கியங்களை அமைத்தல்

1. சீதையை அடைவதற்காகச் சிறை வைத்திருந்த இராவணன் இலவு காத்த கிளிபோல் ஆனான்.

2. தீய செயல்களைச் செய்பவர்களைத் திருத்தும் பணியிலுள்ள சேவகர்களே தீய செயல்கள் செய்தல் வேலியே பயிரை மேய்ந்தது போலாகும்.

3. காட்டில் தனியே வேடன் கை அகப்பட்ட தமயந்தி நெருப்பிலிட்ட மெழுகுபோல் மெலிந்து வருந்தினாள்.

4. தேர்வில் முதல் மதிப்பெண் பெற்ற தன் மகனுக்கு அரசினர் மேற்படிப்பிற்காகப் பணம் தர முன் வந்ததைக் கேட்டதும் பழம் நழுவிப் பாலில் விழுந்தது போல் இருந்தது.

5. தீயவன் கையகப்பட்ட அரசாட்சி குரங்கின் கை அகப்பட்ட பூமாலைபோல் ஆகும்.

6. ஒருவன் நூலறிவும் நுண்ணறிவும் பெற்றிருப்பதோடு நல்ல பேச்சுத் திறனும் பெற்றிருப்பது பொன் மலர் நாற்றம் உற்றது போல் ஆகும்.

7. புனல் ஓடும் வழியில் புல்லும் சாய்ந்தது போல மன்னன் சென்ற வழியிலே மக்களும் செல்லத் தலைப்பட்டனர்.

8 இரண்டு மனைவியிடம் அகப்பட்டுக் கொண்ட கணவன் இருதலைக்கொள்ளி எறும்பு போல் ஆனான்.

8. வீணர்களுக்குச் செய்யும் உபதேசம் விழலுக்கு இறைத்த நீர் போல் ஆகும்.

10. குரல் இனிமை வாய்ந்த பெண் இசைத் தேர்வுடன் இனிமையாகப் பாடியது பாலொடு தேன் கலந்தாற் போன்று இனிமையாக இருந்தது.

11. பசுத்தோல் போர்த்த புலிபோலச் சீதையைப் பெறுவதற்காக இராவணன் துறவி வேடம் பூண்டு வந்தான்.

12. நல்லொழுக்கம் பெறுவதற்காகப் பெரியவரிடம் சென்ற ஒருவன் அவ்வொழுக்கம் பெருமல் தீயனுவது குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டது போலாகும்.

13. கொடுங்கோல் மன்னனின் ஆட்சிக்கு உட்பட்ட மக்கள் ஆலைவாய்க் கரும்புபோல் துன்புற்றனர்.

14. குசேலரைக் கண்ட கண்ணன் அணையை உடைத்தெழும் வெள்ளம்போல் மகிழ்ச்சி பொங்க அரியணையை விட்டெழுந்து சென்று வரவேற்ருன்.

15. நீதியும் நேர்மையும் வாய்ந்த பீடுமர் துரியோதனன் பக்கல் இருந்தாலும தாமரை இலைத் தண்ணீர் போலவே விளங்கிஞர்.

16. திரௌபதியின் சுயம்வரத்தில் மாறுவேடத்திலிருந்த அருச்சுனனின் வீரம் குடததிலிடட விளக்குப் போல இருந்தது.

17. செங்குட்டுவன் பகைவரிடமிருந்து கைப்பற்றிய நாடுகள் இரும்புண்ட நீர் போல் மீளல அரிதாயின.

18. சீதக்காதியை இழந்த புலர் குழாம் கடல் நடுவில் மாலுமி இல்லாக் கப்பலைப் போல் வருந்தியது.

19. மக்கள் பஞ்சத்தால் வாட்டமுற்றபொழுது பாரி வள்ளல் வாடிய பயிரில் மழை பொழிவது போல் பொருளை வாரி வழங்கிஞர்.

20. ஈரமில்லா நெஞ்சுடையார்க்குச் செய்த உபகாரம் நீர்மேல் எழுத்துக்கு நேராகும.

21. நீதி கற்கத் திருக்குறளைக் கையிற் கொண்ட ஒருவன் வேறு ஒரு நூலைத் தேடுவது வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைவது போன்றதாகும்

22. இளங்கோ அடிகள் தனது சமண சமயத்தை இலை மறை காய்போல் சிலப்பதிகாரத்தில் ஆங்காங்கு உணர்த்துகிருர்.

23. வெண்கலக் கடையில் யானை புகுந்தாற்போல வீமன் கௌரவர் படையில் புகுந்து அல்லோல கல்லோலப்படுத்தினன்.

24. எள்ளுக்குள் எண்ணெய் போல் கடவுள் எங்கும் நிறைந்துள்ளார்.

25. கோவிந்தன் முழுப்பூசுணைக்காயைச் சோற்றில் மறைப்பதுபோல நம்பத்தகாத பொய்யைக்கூறி ஆசிரியரிடம் அகப்பட்டுக் கொண்டான்.

26. தந்தை இறந்ததைக் கேட்டவுடன் மைந்தன் அடியற்ற மரம்போலக் கீழே விழுந்தான்.

27. காய்ச்சல் அடித்தபோது வெயிலிற்பட்ட புழுப் போல வேலன் துடித்தான்.

28. எப்பொழுதும் வேலன் வீட்டிற்குச் செல்லும் முருகன் ஒருநாள் கந்தன் வீட்டிற்கு வந்தபோது கந்தன் அவனை நோக்கி 'இன்று நீ என் வீட்டிற்கு வந்தது அத்தி பூத்தாற்போல அதிசயமாயிருக்கிறது' என்றான்.

29. கையும் களவுமாய்க் கண்டுபிடித்தபோது கள்வன் வலையிற் சிக்கிய மான்போல விழித்தான்.

அடியில் வரும் உவமைகளை வாக்கியங்களில் அமைத்துப் பயிற்சி பெறுக.

மலைமேல் வைத்த விளக்குப் போல, பாம்பின் வாய்த் தேரை போல, குங்குமஞ் சுமந்த கழுதைபோல, எள்ளுக் காய் பிளந்தது போல, சிறகு இழந்த பறவைபோல, யானை உண்ட விளங்கனிபோல, நாயும் பூனையும் போல, பொன் காத்த பூதம்போல, புற்றில் ஈசல் புறப்பட்டது போல, மயிலைக்கண்டு வான்கோழி யாடியதுபோல, உள்ளங்கை நெல்லிக் கனிபோல, கிணற்றுத் தவளை போல, எழுதிய சித்திரம்போல, கடல் பொங்கி எழுந் தாற்போல, சூரியனைப் பார்த்து நாய் குரைத்தாற்போல.

## (ii) பழமொழி வாக்கியங்களைப் பொருத்தமான சொற்றொடர்களில் அமைத்தல்

1. போதுமென்ற மனமே பொன்செய்யும் மருந்து என்று கொண்டு குசேலர் தனக்கிருந்தவற்றைக் கொண்டு இன்பமாக வாழ்க்கை நடத்தினார்.

2. நளன் சூதாட்டத்தில் நாட்டை இழந்ததோடல்லாமல் காட்டில் தன் மனைவியாளையும் இழந்தான். பட்ட காலிலேபடும், கெட்ட குடியே கெடும அல்லவா ?

3. இந்தியாவிலுள்ள 44 கோடி மக்களும் ஒரு சட்டத்திற்கு உட்படுகிறார்கள். 'ஆயிரம் காக்கைக்கும் ஒரு கல்தானே.

4. மிகவும் பிற்பட்ட நிலையிலுள்ள மாணவனும் ஆசிரியர் பனமுறை பாடங்களைக் கற்பித்ததில அவன் அறிவுற்றான்; அடிமேல அடிவைத்தால அம்மியும் நகரும் அல்லவா ?

5. குடிலன் என்னும் வஞ்சக அமைச்சன் நாட்டைப் பெற விரும்பிப் பாண்டியனைக் கெடுக்கச் சென்றபோது தானே அகப்பட்டுக் கொண்டான். ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு !.

6. கண்ணகியைப் பிரிந்து மாதவியுடன் நெருங்கிப் பழகிவந்தான் கோவலன் அவளை ஒரு நாள் துறந்தான்; பழகப்பழகப் பாலும புளிக்குமல்லவா ?

7. சிசுபாலன் கண்ணனைப் பலமுறை இழித்துப் பேசியதால கண்ணனால் அழிவுற்றான்; நுணலும தன் வாயாற் கெடும் அன்றோ ?

8. 'புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது' என்பதற்கேற்ப சோழனால் சிறையில அடைக்கப்பட்ட சேர மன்னன் தண்ணீர் வேட்கையுற்றபோதும சிறைக்காவலரிடமிருந்து தண்ணீர் பெற மறுத்து இறந்தான்.

9 ஆடை இல்லாதவன் அரைமனிதன்தானே ஆதலால் கந்தலாடையுடுத்த குசேலன் கண்ணனைக் காணச் சென்றபோது காவலர்கள அவனை இகழ்ந்தனர.

10. தன் வீட்டில் மனைவியின் மீது கோபமுற்ற கந்தன் தன் குழந்தைகளை அடித்தான். அவலை நினைத்து உரலை இடிப்பதால் என்ன பயன் ?

11. கட்டியங்காரன் சச்சந்தனை வஞ்சகமாகக் கொன்றுவிட்டான் என்பதற்குச் சான்று வேண்டியதில்லை. கைப்புண்ணுக்குக் கண்ணாடி எதற்கு ?

12. அரசியின் சிலம்பைக் கவர்ந்த கள்வன் வேறு இருக்க அநியாயமாகக் கோவலன் கொலையுண்டிறந்தான். 'பழி ஒரு பக்கம் பாவம் ஓரிடத்தில் அல்லவா ?

13. இமயத்தில் பார்வதி திருமணம் நடந்தபோது சிறிய உருவங்கொண்ட அகத்தியன் தென்னாட்டிற்கு வந்ததும் நிலம் சமமாயிற்று. ஆதலால் உருவு கண்டு எள்ளாதே.

14. கோபாலன் புலால் விற்றுப்பெரும் பணக்காரன் ஆனான். 'பூவிற்ற காசு மணக்குமா? புலால் விற்ற காசு நாறுமா ?.

15. தன் மக்கள் செய்யுங் குற்றங்கள் ஊரவர்க்குத் தெரியக்கூடாதென்று மறைத்து வைத்தும ஊரார் தெரிந்து பழித்துப் பேசினர். "உலைவாயை மூடினும் ஊர்வாயை மூட முடியுமா?"

16. குருடாகப்பிறந்த குழந்தையானாலும் கண்ணுங் கருத்துமாகப் பேணி வளர்த்தனர் பெற்றோர். காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சல்லவா ?

17. தனி மரம் காடாதல் இல்லை. அதுபோல மக்கள் சமுதாயத்தில் எந்த ஒரு மனிதனும் தனித்து வாழ்ந்து உயர்நிலையுற முடியாது.

18. மக்கள், நாடு சுதந்திரம் பெற்றதும் திடீரென வளர்ச்சியுற வேண்டுமென எதிர்பார்க்கிறார்கள். ஆக்கப் பொறுத்தவர் ஆறப் பொறுக்கவேண்டாமா ?

19. நாடு, மகன், செல்வம் அனைத்தையும் இழந்த அரிச்சந்திரனைக் கோசிக முனிவன் பொய் கூறுமாறு எவ்வளவோ வேண்டியும் மறுத்தான். கடுகு சிறுத்தாலும் காரம் போகுமா ?

20. பாண்டவர், கண்ணன் ஆகியவர்களின் சிறப்பைத் திருதராட்டிரன் எடுத்துச் சொல்லியும் துரியோதனன் உணரவில்லை. கழுதை அறியுமோ கற்பூர வாசனை !

21. இறைவன் கொடுத்த பாடலைக் கொண்டு அரசனது ஐயம் அகற்றிய ஏழைத்தருமி பொற்கிழி பெறும் சமயத்தில் நக்கீரனால் தடைப்பட்டது. கைக் கெட்டியது வாய்க்கெட்டவில்லை போன்றிருக்கிறது.

22. திருமாலாகிய கண்ணன் ஆயர் குலத்தில் வளரினும் அவனது பெருமை அணுவளவும் குன்ற வில்லை. குப்பையில் கிடந்தாலும் குன்றிமணி நிறம் போகுமா ?

23. பாம்பின் கால் பாம்பறியும் அதுபோலக் கற்றவர் பெருமையைக் கற்றவரே அறிவர்.

24. கோவிந்தன், பின்பு ஒருநாள் உயர்ந்த வேலை கிடைக்கப் போகிறதென்றெண்ணிக் கிடைத்த கணக்கர் வேலையை விட்டுத் திண்டாடினுன். நாளைக்கு வரும் பலாக்காயினும், இன்றைக்குக் கிடைத்த களாக்காய் நல்லது.

25. கொள்ளைக் கூட்டத் தலைவன் கோவிந்தன் தான் கொள்ளையிடச் சென்ற வீடு தன்னை ஆதரித்த வீடு என்பதை அறிந்தும் கொள்ளையிட மேற்சென்றுன். அன்னமிட்ட வீட்டிற்குக் கன்னமிடலாமா ?

26 தலைவன் கட்டளைப்படி காவலர்கள் கூட்டத்தைக கலைக்கக் கண்ணீர்ப்புகை செலுத்தினர். கூட்டத்தினர் காவலாகளை நொந்து கொணடனர். எய்தவன் இருக்க அம்பை நோவானேன் ?

27. தொழிலாளியின துன்பங் கருதாமல் முதலாளி இரவு பகலாக மேலும் மேலும் வேலை கொடுத்து வருகிறுர் அவருக்கு என்ன? எருது நோய் காக்கைக்குத் தெரியுமா ?

28 ஒரு கிராமத்தில் ஆங்கிலம் தெரியாதவர் பலர் இருந்தனர். ஒருவன் ஓரளவு ஆங்கிலந் தெரிந்திருந்தான். அவனை அவ்வூரார் மிகப் போற்றினர். ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப்பூ சர்க்கரைதானே.

29. வாணிகம செய்து திவாலாகிவிட்ட கண்ணன் வாங்கிய கடனில் காறபகுதியைத் திருப்பிக் கொடுப்பதாகக் கூறியதும கடன் கொடுத்தவர்கள் அதையும் விட்டுவிடாமல் வாங்கிக் கொண்டனர். எரிகிற வீட்டில் பிடுங்கியது லாபமலலவா ?

30. துக்ளக்கிடம் ஆட்சி வந்தவுடன் அவன் தன் நாட்டு மக்களைத் தன் விருப்பப்படியெல்லாம் துன்புறுத்தினுன். நரிக்கு நாட்டாண்மை கொடுத்தால் கிடைக்கு இரண்டு ஆடு கேட்குமல்லவா ?

அடியிற் கண்ட பழமொழிகளை அவற்றின் பொருள் விளங்குமாறு நமது வாக்கியங்களில் தனித்தனியே வைத்து எழுதிப் பழகுக.

ஆனைக்கும் அடிசறுக்கும், ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா, தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும், முன்கை நீண்டால் முழங்கை நீளும், இக்கரைக்கு அக்கரை பச்சை, துள்ளின மாடு பொதி சுமக்கும், காற்றுள்ள போதே தூற்றிக்கொள், பிள்ளையருமை பெற்றவளுக்குத் தான் தெரியும், பெண் என்றால் பேயும் இரங்கும், அழுத பிள்ளை பால் குடிக்கும். இரக்கப் போனாலும் சிறக்கப் போ. ஆடிப்பட்டம் தேடி விதை. உள்ளதைச் சொன்னால் உடம்பெரிச்சல், பணமில்லாதவன் பிணம்.

## (iii) மரபுத் தொடர்களை வாக்கியங்களில் அமைத்தல்

1. நீ ஒரேவிதமாகப் பேசாமல் இருதலை மணியன் போல இரண்டு பக்கத்திற்கும் பேசுகிறாய்.

2 உன் மகன் இன்னும் எடுப்பார் கைப்பிள்ளையாய் இருக்கிறான்.

3. நீதிமன்றத்தில் வழக்குப்போட்டு இழுத்துப் பறித்துப் பார்த்து வந்ததை வரவாகக் கொள்ள வேண்டியதுதான்.

4. கடன் மிகுதியாயுள்ளது. வீட்டை விற்று நச்சு பிச்சு எல்லாம் தீர்த்து ஒழித்துவிட்டு நிம்மதியாயிருக்க வேண்டும்.

5. உனக்குக் கொஞ்சம் கூடப் பொறுமையில்லையே! அவசரக் குடுக்கையாய் இருக்கின்றாயே.

பின்வரும் மரபுத்தொடர்களை வாக்கியங்களில் தனித் தனியே அமைத்துப் பயிற்சி பெறுக.

சரமாரியாய், குத்துமதிப்பு அரைகுறை, சப்பைக் கட்டு, அல்லும் பகலும், வம்புதும்பு, வாழையடிவாழை, தலைகால் புரியாமல், ஈடும் எடுப்புமின்றி, கணக்கு வழக்கு.

## (iv) சொற்றொடர்களை வாக்கியங்களில் அமைத்தல்.

1. உயர் குணங்களைக் கடைப்பிடித்து உத்தமனாய் வாழ்க.

2. பெரியோர் தினையளவு நன்றி செயினும் பனையளவாகக் கொள்வார்.

3. தேருங்கால் கல்லாதார் பூதரே.

4. நட்ட செடி கொடிகள் நாற்புறமும் கவிந்து கட்டிய மாளிகைபோல் காட்சி தந்தன.

கீழ்க்கண்ட சொற்றொடர்களை வாக்கியங்களில் அமைத்துப் பழகுக.

பழம் பிழிந்த சாறு, வாழ்ந்த வாழ்க்கை, ஐயந்திரிபற, காற்றினுங்கடுக, பொற்புறவமைந்த,

**வழூஉச் சொற்கள் திருத்தம் :-**

| பிழை | | திருத்தம் |
|---|---|---|
| சுவற்றில் ஒட்டாதே | — | சுவரில் ஒட்டாதே |
| ஒண்டியாய்ப் போகாதே | — | ஒன்றியாய்ப்போகாதே |
| தொந்திரவு செய்யாதே | — | தொந்தரவு செய்யாதே |
| சிகப்பாயுள்ளது. | — | சிவப்பாயுள்ளது. |
| நல்லெண்ணை வாங்கு | — | நல்லெண்ணெய்வாங்கு |
| ரொம்பக் கொடுத்தான் | — | நிரம்பக் கொடுத்தான் |
| ஒருவள் சென்றாள் | — | ஒருத்தி சென்றாள் |
| அகளம் நிகளம் பாருங்கள் | — | அகலம் நீளம் பாருங்கள் |
| பணமெல்லாம் சிலவாகித் துலைஞ்சது | — | பணமெல்லாம் செலவாகித் தொலைந்தன |
| மானத்திற்காத்தாடியைப் பறக்கவிட்டான் | — | வானத்திற் காற்றாடியைப் பறக்கவிட்டான் |
| இதற்காக மெனக்கட்டுப் போகலாமா | — | இதற்காக வினைகெட்டுப் போகலாமா ? |

இன்னும் திணை, பால், இடம், காலம், எண், மரபு வழுக்களையும் கூர்ந்து நோக்கிப் பல சொற்றொடர்கள் மூலம் அடிக்கடி வினவிடை வாயிலாகத் திருத்திப்பழகிக் கொள்க.

**வல்லினம் மிகும் இடங்கள்**

1. அ, இ, உ என்ற சுட்டெழுத்துக்களின் முன் மிகும்.

2. எகர வினாவின் முன்னும், அந்த, இந்த, உந்த என்ற சுட்டுச் சொற்களின் முன்னும் மிகும்.

3. இரண்டாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமை உருபுகளின் முன் மிகும்.

4. வன்தொடர்க் குற்றியலுகரத்தின் முன்னும், இ, ய், ஆ, ஊ, என, அ, கு ஆகிய வினையெச்ச விகுதிகளுள் முன்னும் மிகும்.

5. அங்கு, இங்கு, ஆங்கு, ஈங்கு, ஊங்கு, ஆண்டு, ஈண்டு, யாங்கு, யாண்டு ஆகிய இடம், காலம் உணர்த்துஞ் சொற்களின் முன் மிகும்.

6. யகர, ரகர, ழகர வீற்றுச் சொற்களின் முன் வேற்றுமையில் வல்லினம் மிகும். அல்வழியில் பண்புத்தொகை, உவமைத் தொகைகளில் மட்டும் மிகும்.

7. உயிரீற்று அஃறிணைப் பெயர்களின் முன் வேற்றுமைத் தொகையில் மிகும்.

8. ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்தின் முன்னும் குறிலைச் சார்ந்து வரும் முற்றிய லுகரத்தின் முன்னும் மிகும்.

## வல்லினம் மிகா இடங்கள்

1. மூன்றும் வேற்றுமை உருபின் முன்னும், ஆறும் வேற்றுமை உருபின் முன்னும் மிகாது.

2. செய்த. செய்கின்ற என்னும் அகரவீற்றுப் பெயரெச்சத்தின் முன் மிகாது.

3. எழுவாய்த் தொடர், விளித்தொடர், வினைத் தொகை, உம்மைத் தொகை, வினைமுற்றுத் தொடர் இவற்றின் முன மிகாது,

4. ஆ. ஓ, என்னும் ஈற்று வினாக்கள், யா என்னும் முதல் வினா இவைகளின் முன் மிகாது.

5. வன்தொடர் அல்லாக குற்றியலுகரங்களின் முன்னும், உயர்திணைப் பெயர், பொதுப் பெயர்களின் முன்னும் மிகாது.

6 அது, இது, உது, யாது, ஏது, அவை, இவை, உவை, எவை, யாவை, அத்தனை, இத்தனை, எத்தனை, அவ்வளவு, இவ்வளவு, எவ்வளவு என்ற பெயர்கள் முன் மிகாது.

## வாக்கிய மாற்றம்

1. செய்வினை வாக்கியத்தைச் செயப்பாட்டு வினை யாக மாற்றுதல :—

நான் இக்குதிரையை வாங்கினேன்—இக்கு என்னால் வாங்கப்பட்டது. தே ாதே

2. உடன்பாட்டை எதிர்மறையாக மாற்றுச

குதிரை அங்கு நின்றது — குதி அங் நின்றிலது. நீ சந்திரனை காண்பாய் — நீ காணாய்.

3. நேர்க்கூற்றை அயற்கூற்றாக மாற்றுதல் :—

சீதை இராமனிடம், "நான் உ னப் பிரிந்து உயிர்வாழ முடியாது" என்று கூறினள் சீதை இராமனைப் பிரிந்து உயிர்வாழ முடியாது என்

இவ்வாறே வாக்கியங்களை மாற்றி எழுதப் பழகிக்கொள்க.

9 இல்லாளுடைய உடன்பாட்டைப் பெற்றே தலைவன் தருமம் செய்யவேண்டும் (பொருள் மாறாமல் எதிர்மறை வாக்கியமாக்குக)

இல்லாளுடைய உடன் ாட்டைப் பெற்றாலன்றித் தலைவன் தருமம் செய்ய இயலாது.

# பாரி தமிழ் இலக்கணம்

## [ஆரும் வகுப்பிற்குரியது]

### தொடக்கம்

மாணவ மணிகளே! ஐந்தாவது வகுப்பில் இலக்கணம் என்ருல் என்ன? அவ்விலக்கணம் எத்தனை வகைப்படும்? ஒலி எழுத்து, வரி எழுத்து என்பன யாவை? முதல் எழுத்து, சார்பெழுத்து என்ருல் என்ன? என்பனவற்றைச் சுருக்கமாகப் படித்தீர்கள். அவற்றை நினைவு படுத்திக் கொண்டு இந்த வகுப்புக்குரிய இலக்கணத்தைக் கற்பீர்களாக!

மொழியைத் திருத்தமாகப் பேசவும், எழுதவும் கற்பிப்பதே இலக்கணமாகும். அவ்விலக்கணம் **எழுத்து**, சொல், பொருள், **யாப்பு**, **அணி** என ஐந்து வகைப்படும். எழுத்தின் ஒலியைக் காதால் கேட்கும் போது **ஒலி எழுத்து** என்றும், கண்ணுல் காணும்படி எழுதும்போது **வரி எழுத்து** என்றும் கூறுகிருேம். உயிர் பன்னிரெண்டும், மெய் பதினெட்டும் **முதல் எழுத்துக்கள்** எனப்பட்டன. உயிரையும் மெய்யை யும் சார்ந்துவரும் (உயிர்மெய், ஆய்தம்) எழுத் துக்கள் **சார்பெழுத்துக்கள்** ஆகும்.

# I. எழுத்திலக்கணம்

## 1. சுட்டு

முருகன் நல்ல பையன். அவன் நன்றாகப் படிப்பான்.

தமிழ்ச்செல்வி நன்றாகப் பாடுவாள். இவள் குரல் இனிமையாக இருக்கும்.

கபிலன் காலையில் எழுந்திருப்பான். உவன் இலக்கணம் படிப்பான்.

மேற்கண்ட வாக்கியங்களில் **அவன், இவள், உவன்** என்னும் சொற்கள் உள்ளன. அம்மூன்று சொற்களும் **முருகன், தமிழ்ச்செல்வி, கபிலன்** என்னும் மூன்று பெயர்களையும் சுட்டிக்காட்டுகின்றன. அவன், இவள், உவன் என்ற மூன்று சொற்களிலும் **அ, இ, உ** என்னும் மூன்று உயிர் எழுத்துக்கள் முதலில் இருக்கின்றன. இம்மூன்று உயிரெழுத்துக்களும் சொல்லுக்கு முதலில் நின்று சுட்டிக்காட்டுகின்றன. இங்ஙனம் ஒரு பொருளைச் சுட்டிக்காட்டப் பயன்படும் எழுத்துக்கள் **சுட்டு எழுத்துக்கள்** எனப்படும். சுட்டிக் காட்டுதலாவது குறித்துக் காட்டுதல்.

அவன், அவள், அவர், அது, அவை.

இவன், இவள், இவர், இது, இவை.

அவ்வீடு, அப்பள்ளி, அம்மனிதன், அக்கோயில், அம்மரம்.

இவ்வீடு, இப்பள்ளி, இம்மனிதன், இக்கோயில், இம்மரம்.

இவற்றில் உள்ள அ, இ என்ற எழுத்துக்களைக் கவனியுங்கள். அவை சுட்டிக் காட்டப் பயன்படு கின்றன. அவன் என்பதில் உள்ள 'அ' என்றஎழுத்து சேய்மையில் (தொலைவில்) உள்ள மனிதன் ஒருவனை யும், இவன் என்பதில் உள்ள 'இ' என்ற எழுத்து அண்மையில் (அருகில்) உள்ள மனிதன் ஒருவனையும் சுட்டிக் காட்டுகின்றன. அவ்வாறே அவ்வீடு, இவ் வீடு என்பவற்றுள் உள்ள அ, இ என்ற எழுத்துக்கள் சேய்மையையும் அண்மையையும் சுட்டிக் காட்டு கின்றன.

அ என்னும் சுட்டெழுத்து சேய்மைச் சுட்டெழுத்தாக வரும். ஆகவே, அதற்குச் **சேய்மைச் சுட்டு** என்று பெயர். இ என்னும் சுட்டெழுத்து அண்மைச் சுட்டெழுத்தாக வரும். ஆகவே, அதற்கு **அண்மைச் சுட்டு** என்று பெயர். உ என்னும் சுட்டெழுத்து பெரும்பாலும் வழக்கில் இல்லை. அது சேய்மை, அண்மை ஆகிய இரண்டிற்கும் இடைப் பட்டதாக வரும். ஆகவே, அதற்கு **இடைமைச் சுட்டு** என்று பெயர்.

| அகச்சுட்டு | புறச்சுட்டு |
|---|---|
| அவன் | அம்மாணவன் |
| இவன் | இம்மாணவன் |
| உவன் | உவ்வீடு |

முதல் வரிசையில் உள்ள சொற்களைப் படியுங்கள்.

முதல் வரிசையில் அ, இ, உ என்னும் சுட்டெழுத் துக்கள் முதலில் இருக்கின்றன. அவ்வெழுத்துக்களை மறைத்துக்கொண்டு படித்துப் பாருங்கள். சொற்

களாக இருக்கின்றனவா? இல்லை. ஏன் இல்லை? சுட்டெழுத்துக்கள் சொற்களின் உள்ளேயே சேர்ந்து இருக்கின்றன. இவ்வாறு சுட்டெழுத்து ஒரு சொல்லின் உள்ளேயே வந்தால் அதற்கு **அகச்சுட்டு** என்று பெயர் சொல்லப்படும். (அகம்=உள்.)

இரண்டாவது வரிசையிலும் சுட்டெழுத்துக்கள் இருக்கின்றன. ஆனால், அவை **மாணவன், மாணவி, வீடு** என்னும் சொற்களுக்கு வெளியே இருக்கின்றன. இப்பொழுது இரண்டாவது வரிசையில் உள்ள சுட்டெழுத்துக்களை முன்போலவே மறைத்துக் கொண்டு படியுங்கள். சுட்டெழுத்துக்கள் இல்லாமல் படித்தாலும் மாணவன், மாணவி, வீடு என்ற சொற்கள் பொருளைத் தந்து நிற்கின்றன. இவ்வாறு சுட்டெழுத்து, சொல்லுக்கு வெளியே இருந்தால் **புறச்சுட்டு** என்று சொல்லப்படும். (புறம்=வெளி.)

**சுட்டெழுத்து ஒரு சொல்லின் உள்ளே இருப்பது அகச்சுட்டு ஆகும்.**

**சுட்டெழுத்து ஒரு சொல்லின் புறத்தே இருப்பது புறச்சுட்டு ஆகும்.**

## பயிற்சி

1. கீழ்வரும் சொற்களில் சுட்டுப்பொருள் தருவனவற்றை மட்டும் எடுத்து எழுதுக :

| | | |
|---|---|---|
| . அவன் | 8. அன்பு | 15. அரசன் |
| 2. அவள் | 9. அழகு | 16. அப்பம் |
| 3. அறம் | 10. அது | 17. அவர் |
| 4. அவை | 11. இவன் | 18. இன்பம் |
| 5. இசை | 12. இவள் | 19. இலை |
| 6. இவர் | 13. இது | 20. இரவு |
| 7. இவை | 14. இனியன் | 21. உப்பு |

| | | |
|---|---|---|
| 22. உவன் | 25. உவகை | 28. உவள் |
| 23. உழக்கு | 26. உழவு | 29. உயர் |
| 24. உண்மை | 27. உணவு | 30. உறக்கம் |

2. பின்வரும் சொற்களில் அகச்சுட்டு—புறச்சுட்டுக்கள் எவை என எடுத்து எழுதுக:

| | | |
|---|---|---|
| 1. அவன் | 13. அப்பையன் | 24. அம்மகன் |
| 2. இவள் | 14. இம்மகள் | 25. உவன் |
| 3. உவ்வீடு | 15. அவள் | 26. அம்மன்னர் |
| 4. இக்காடு | 16. அவர் | 27. அம்மனிதர் |
| 5. இவர் | 17. இப்பெரியார் | 28. உவர் |
| 6. அந்த | 18. அக்காலம் | 29. இந்த |
| 7. இக்காலம் | 19. இந்நாடு | 30. ஆங்கு |
| 8. ஈங்கு | 20. ஊங்கு | 31. உப்பனை |
| 9. அப்படி | 21. அம்மக்கள் | 32. இப்படி |
| 10. இவ்வன்னை | 22. உப்படி | 33. அவ்வாறு |
| 11. இவ்வாறு | 23. அங்ஙனம் | 34. இங்ஙனம் |
| 12. உங்ஙனம் | | |

3. பொருத்தமான சுட்டெழுத்துக்களைக் கோடிட்ட இடங்களில் அமைத்து எழுதுக ;

1. ———புத்தகம். (அண்மைச்சுட்டு)
2. ———வீடு. (சேய்மைச்சுட்டு)
3. ———பலகை. (இடைமைச்சுட்டு)
4. ———(அண்மை அகச்சுட்டு)
5. ———(சேய்மை அகச்சுட்டு)
6. ———பையன். (அண்மைப் புறச்சுட்டு)
7. ———மனிதன். (சேய்மைப் புறச்சுட்டு)

## வினாக்கள்

1. சுட்டெழுத்துக்கள் எத்தனை? அவை யாவை?
2. அகச்சுட்டாவது யாது ?
3. புறச்சுட்டாவது யாது ?

# 2. வினா

**எ, யா** என்னும் இரண்டு எழுத்துக்களும் சொல்லுக்கு முதலில் வந்து வினாப்பொருளைத் தரும்.

**ஏ, ஓ** என்னும் இரண்டு எழுத்துக்களும் சொல்லுக்கு வெளியே வந்து வினாப்பொருளைத் தரும்.

**ஏ** என்னும் எழுத்து சொல்லுக்கு முதலிலும், கடைசியிலும் ஆக ஈரிடங்களிலும் வந்து வினாப் பொருளைத் தரும்.

மேற்கண்ட இலக்கணத்தைச் சென்ற வகுப்பில் படித்தீர்கள் அல்லவா? அதனைத் தொடர்ந்து வினா வகையைக் காண்க.

> இன்று உங்கட்கு விடுமுறை**யோ**?
>
> **எ**து உனது வீடு?
>
> **யார்** அந்தப் பெரியவர்?
>
> **ஏ**ன் அங்கு நின்றாய்?
>
> நீ நேற்றுப் பள்ளிக்கு வந்தா**யா**?

மேற்கண்ட வாக்கியங்களில் **எ**து, **யார்**, **ஏ**ன், வந்தா**யா**, விடுமுறை**யோ** என்னும் சொற்களில் உள்ள **எ, யா, ஏ, ஆ, ஓ** என்னும் எழுத்துக்கள் வினாப் பொருளைத் தருகின்றன.

**எ, யா, ஆ, ஓ, ஏ** என்னும் ஐந்து எழுத்துக்களும் வினாப் பொருளில் வந்தால், **வினா எழுத்துக்கள்** ஆகும்.

| அகவினா | புறவினா | |
|---|---|---|
| எவன்? | எம்மரம்? | வேலனோ? |
| யாவன்? | யாங்ஙனம்? | பாரியே? |
| ஏவன்? | முருகனோ? | |

முதல் வரிசையில் உள்ள சொற்களில் வினாப் பொருளைத் தரும் **எ, யா, ஏ** என்னும் எழுத்துக்கள் சொற்களின் உள்ளே, அதாவது அகத்தே உள்ளன. இவ்வாறு வினா எழுத்து சொல்லின் உள்ளேயே வந்தால் அது **அகவினா** என்று சொல்லப்படும்.

இரண்டு, மூன்றாவது வரிசைகளிலுள்ள சொற்களில் வினாப்பொருளைத் தரும் **எ, யா, ஆ, ஓ, ஏ** என்னும் எழுத்துக்கள் சொற்களின் வெளியே முன்னும் பின்னும் இருக்கின்றன. இவ்வாறு வினாவெழுத்து சொல்லுக்கு வெளியே முன்னோ பின்னோ வந்தால், அது **புறவினா** எனச் சொல்லப்படும்.

**வினாவெழுத்து சொல்லின் உள்ளே இருப்பது அகவினா ஆகும்.**

**வினாவெழுத்து சொல்லின் வெளியே இருப்பது புறவினா ஆகும்.**

## பயிற்சி

[அவன், இது என்பவைகளுக்கும், எவன், எது என்பவைகளுக்கும் என்ன வேறுபாடு? அவன், அது என்பவை ஒன்றைச் சுட்டும் சொற்கள். எவன், எது என்பவை கேள்விகள்.]

1. எவன், எது, எங்கு, எப்போது என்னும் சொற்களில் கேள்வியைக் காட்டுவது எந்த எழுத்து?

2. ஏது? ஏன்? — இவற்றில் கேள்வியைக் காட்டுவது எந்த எழுத்து?

3. யார்? யாது? யாவன்? யாங்கு? — இவைகளில் விஞ வைக் காட்டுவது எந்த எழுத்து ?

4. அவனு? மாடா ? குதிரையோ ? — இவைகளில் விஞவைக் காட்டுவது எந்த எழுத்து? அது எங்கே உள்ளது?

5. அவனே ? மாடோ ? குதிரையோ ? — இவற்றில் கேள்வியைக காட்டுவது எது ?

6, கீழ்வரும் சொற்களில் அகவிஞ, புறவிஞ எவையென எடுத்து எழுதுக.

| | |
|---|---|
| எவர்? | பொன்னனு? |
| எம்மனிதர்? | பொன்னனே? |
| எவ்வீடு? | ஏது? |
| யார்? | அவனே? |
| அதுவா? | எவன்? |
| அவனு? | அதுவோ? |

7. பொருத்தமான விஞ எழுத்துக்களைச் சேர்த்து எழுதுக :

| | | | |
|---|---|---|---|
| 1. | — —(அகவிஞ) | 6, | ———மரம் (புறவிஞ) |
| 2. | ——— ,, | 7. | ———ஙனம் ,, |
| 3. | ——— ,, | 8. | சென்ருன்——— ,, |
| 4. | ——— ,, | 9. | கண்டான்——— ,, |
| 5. | ——— ,, | 10. | வந்தான்—— ,, |

## விஞக்கள்

1. விஞவெழுத்துக்கள் எத்தனை? அவை யாவை ?
2. அகவிஞவாவது யாது?
3. புறவிஞவாவது யாது?
4. சொல்லின் முதலில் வரும் விஞ எழுத்துக்கள் எவை ?
5. சொல்லின் ஈற்றில் வரும் விஞ எழுத்துக்கள் யாவை ?
6. சொல்லின் முதலிலும் ஈற்றிலும் வரும் விஞ எழுத்து எது ?

# 3. உயிர்மெய்யின் வகைகள்

## 1. உயிரெழுத்துக்கள்

தமிழ் மொழியிலுள்ள எழுத்துக்கள் நான்கு வகைப்படும். அவை **உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய் யெழுத்து, ஆய்த எழுத்து** என்பனவாகும்.

**'அ'** முதலாக **'ஔ'** ஈறாக உள்ள பன்னிரண்டு எழுத்துக்களும் உயிர் எழுத்துக்கள் ஆகும். பன்னிரண்டு உயிரெழுத்துக்களையும் சொல்லும்பொழுது **'அ'** என்ற எழுத்தைக் காட்டிலும், **'ஆ'** என்ற எழுத்து நீண்டு ஒலிக்கின்றது. **'இ'** என்ற எழுத்தைக் காட்டிலும், **'ஈ'** என்ற எழுத்து நீண்டு ஒலிக்கின்றது. இப்படியே ஏனைய எழுத்துக்களும் குறுகியும் நீண்டும் ஒலிக்கின்றன.

நீங்கள் சில எழுத்துக்களைக் குறுக்கியும், சில எழுத்துக்களை நீட்டியும் உச்சரிக்கிறீர்கள் அல்லவா? எவைகளைக் குறுக்கி உச்சரிக்கிறீர்கள் ? எவைகளை நீட்டி உச்சரிக்கிறீர்கள் ?

### குறில்

**அ, இ, உ, எ, ஒ** என்னும் ஐந்து எழுத்துக்களைக் குறுக்கி உச்சரிக்கிறீர்கள். குறுகிய ஓசையை

உடைய எழுத்துக்களுக்குக் **குற்றெழுத்து** அல்லது **குறில்** என்று பெயர்.

### நெடில்

**ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ** என்னும் ஏழு எழுத்துக்களையும் நீட்டி உச்சரிக்கிறீர்கள். நீண்ட ஓசையை உடைய எழுத்துக்களுக்கு **நெட்டெழுத்து** அல்லது **நெடில்** என்று பெயர்.

## 2. மெய்யெழுத்துக்கள்

'க்' முதலாக 'ன்' ஈறாக உள்ள பதினெட்டு எழுத்துக்களும் **மெய்யெழுத்துக்கள்** எனப்படும். இவை **உடம்பு, உடல், ஒற்று, புள்ளி** எனவும் பெயர் பெறும்.

உயிரெழுத்தில் **குற்றெழுத்து, நெட்டெழுத்து சுட்டெழுத்து, வினவெழுத்து** என்னும் நான்கு பிரிவுகள் **உண்டு.**

அது போலவே, மெய்யெழுத்திலும் மூன்று பிரிவு **கள் உண்டு.**

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் இவற்றின் ஒலியைக் கேளுங்கள். இவை உயிரெழுத்துக்களின் உதவியின்றித் தனித்து ஒலிக்காத எழுத்துக்களாக இருக்கின்றன. மேலும் இவற்றின் தலையில் புள்ளிகள் காணப்படுகின்றன. இப்பதினெட்டு எழுத்துக்களும் **மெய்யெழுத்துக்கள்** ஆகும். இவற்றின் ஒலியை ஊன்றிக் கவனியுங்கள். சில வேறுபாடுகள் காணலாம்.

## வல்லினம்

க், ச், ட், த், ப், ற் இவ்வெழுத்துக்களை ஒலித்துப் பாருங்கள். இவை வன்மையான ஓசையுடையன என்பதை உணர்ந்து கொள்ளலாம். இவ்வெழுத்துக்கள் வலிய ஓசையுடையன. ஆகையால், இவற்றை **வல்லினம், வல்லெழுத்து, வன்கணம், வன்மை, வலி** என்று கூறுவர். (இனம்-கூட்டம், கணம்—கூட்டம்.)

## மெல்லினம்

ங், ஞ், ண், ந், ம், ன் என்னும் ஆறு எழுத்துக்களையும் ஒலிக்கும் பொழுது அவை மற்ற மெய்யெழுத்துக்களை விட மெலிந்த ஓசை உடையவை என்று எளிதில் உணர்ந்துகொள்ளலாம். ஆகையால், அவை ஆறும் **மெல்லினம், மெல்லெழுத்து, மென்மை, மென்கணம், மெலி** எனப்படும்.

## இடையினம்

ய், ர், ல், வ், ழ், ள் என்னும் ஆறு எழுத்துக்களும் இடையினமாகும். வல்லினம் ஆறும், மெல்லினம் ஆறும் போக மிகுந்த இவ்வெழுத்துக்கள் ஆறும், வல்லெழுத்தைப் போல வன்மையாகவும் இல்லை; மெல்லெழுத்தைப் போல மென்மையாகவும் இல்லை. இவ்விரண்டிற்கும் இடைப்பட்டதாக உள்ளன. ஆகையால், இடைத்தரமாக உச்சரிக்கப்படும் இவ்வெழுத்துக்கள் ஆறும் **இடையினம், இடையெழுத்து, இடைமை, இடைக்கணம், இடை** எனப்படும். (இடை-நடு.)

## 3. உயிர்மெய் யெழுத்தின் வகைகள்

| | |
|---|---|
| க்+அ = க | க்+எ = கெ |
| க்+ஆ = கா | க்+ஏ = கே |
| க்+இ = கி | க்+ஐ = கை |
| க்+ஈ = கீ | க்+ஒ = கொ |
| க்+உ = கு | க்+ஓ = கோ |
| க்+ஊ = கூ | க்+ஔ = கௌ |

உயிரும் மெய்யும் கூடிப் பிறக்கும் எழுத்து உயிர் மெய் எழுத்தாகும். ஒரு மெய்யெழுத்தோடு பன்னி ரண்டு உயிரெழுத்தும் தனித்தனியாகச் சேருவதால், பன்னிரண்டு உயிர்மெய் எழுத்துக்கள் பிறக்கின்றன.

இப்படியே பதினெட்டு மெய்களின் மேலும் பன்னிரண்டு உயிர்களும் தனித்தனியாகச் சேர்வ தால் $(18 \times 12 = 216)$ இருநூற்றுப் பதினாறு உயிர் மெய்யெழுத்துக்கள் உண்டாகும். அவை 'க' முதல் 'னௌ' ஈருக உள்ள எழுத்துக்கள் ஆகும்.

'க' என்னும் உயிர்மெய்யெழுத்தில் 'க்' என்னும் மெய்யெழுத்தின் ஒலி முன்னும், 'அ' என்னும் உயிரெழுத்தின் ஒலி பின்னும் ஒலிப்பதைக் கவனி. உயிர்மெய்யெழுத்தைப் பிரிக்கும்பொழுது மெய் யெழுத்தை முன்னும், உயிரெழுத்தைப் பின்னுமாகப் பிரிக்கவேண்டும்.

உயிரெழுத்தில் குற்றெழுத்து, நெட்டெழுத்து என இருவகை உண்டு என்பதையும், மெய்யெழுத்தில் வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து என மூவகை உண்டு என்பதையும் அறிந்தீர்கள் அல்லவா? அவ்வாறே உயிர்மெய்யெழுத்தில் உயிரெழுத்துக்களை நோக்கக் குறில், நெடில் என்ற இரு பிரிவுகளும், மெய்யெழுத்தை நோக்க **வல்லினம், மெல்லினம், இடையினம்** என்னும் மூன்று பிரிவுகளும் உண்டாகும்.

## (i) உயிர்மெய்க் குறில்

கபிலர் பரணர்

இச்சொற்களில் உள்ள க, பி, ல, ப, ர, ண என்ற எழுத்துக்கள் க்+அ=(க), ப்+இ=(பி), ல்+அ=(ல), ப்+அ=(ப), ர்+அ=(ர), ண்+அ=(ண)என்ற எழுத்துக்களைச் சேர்ந்து பிறந்த எழுத்துக்களாம். 'க்' என்பது மெய்யெழுத்து. 'அ' என்பது உயிர்க் குற்றெழுத்து. மெய்யும் உயிரும் சேர்ந்து தோன்றிய 'க' என்ற உயிர்மெய்யெழுத்து, 'அ' என்ற உயிர்க் குற்றெழுத்தைப் போலவே குறுகி ஒலிப்பதைக் கவனியுங்கள். இவ்வாறு உயிர்மெய்யெழுத்துக் குறுகி ஒலிப்பதால் **உயிர்மெய்க் குற்றெழுத்து** எனப்படும்.

பதினெட்டு மெய்யெழுத்துக்களோடும் ஐந்து உயிர்க் குற்றெழுத்துக்களும் தனித்தனி சேருவதால் (18 × 5 = 90) **தொண்ணூறு உயிர்மெய்க் குற்றெழுத்துக்கள் உண்டாகின்றன.**

## (ii) உயிர் மெய் நெடில்

யா கா வா ரா யி னு ம் நா கா க் க

இச்சொற்களில் யா, கா, வா, ரா, நா, கா என்ற எழுத்துக்களை ஒலித்துப் பாருங்கள்.

ய் + ஆ = யா
க் + ஆ = கா
வ் + ஆ = வா
ர் + ஆ = ரா
ந் + ஆ = நா
க் + ஆ = கா

இவை யாவும் உயிரும் மெய்யும் கூடிப் பிறந்த உயிர்மெய் எழுத்துக்கள் ஆகும். 'ய்' என்ற மெய்யும் 'ஆ' என்ற உயிர் நெடிலும் சேர்ந்து 'யா' என்ற உயிர்மெய் நெட்டெழுத்து உண்டாயிற்று. 'யா' என்ற உயிர் மெய் நெட்டெழுத்து 'ஆ' என்ற உயிர் நெட்டெழுத்தைப் போலவே நீண்டு ஒலிக்கின்றது, எனவே, இஃது உயிர் மெய் நெடில் என்று கூறப்படும்.

**பதினெட்டு மெய்யெழுத்துக்களோடும் ஏழு உயிர் நெட்டெழுத்துக்களும் தனித்தனிசேருவதால்($18 \times 7 = 126$) நூற்றிருபத்தாறு உயிர்மெய நெட்டெழுத்துக்கள் உண்டா கின்றன.**

## (iii) உயிர்மெய் வல்லினம்-72

### 1. குறில்—30

| உயிர்க் குறில்— ↓ | க் | ச் | ட் | த் | ப் | ற் ←வல்லின மெய் | |
|---|---|---|---|---|---|---|---|
| அ | க | ச | ட | த | ப | ற | உயிர்மெய் வல்லினம்— குறில். |
| இ | கி | சி | டி | தி | பி | றி | |
| உ | கு | சு | டு | து | பு | று | |
| எ | கெ | செ | டெ | தெ | பெ | றெ | |
| ஒ | கொ | சொ | டொ | தொ | பொ | றொ | |

**உயிர்** எழுத்துக்களில் **குறில் 5; மெய்** எழுத்துக்களில் **வல்லினம் 6;** ஆக **உயிர்மெய் வல்லெழுத்துக்களில் குற்றெழுத்து (5 × 6 = 30)** முப்பது.

## 2. நெடில்—42

| உயிர் நெடில் — ↓ | க் | ச் | ட் | த் | ப் | ற் ← வல்லின மெய் |
|---|---|---|---|---|---|---|
| ஆ | கா | சா | டா | தா | பா | றா |
| ஈ | கீ | சீ | டீ | தீ | பீ | றீ |
| ஊ | கூ | சூ | டூ | தூ | பூ | றூ |
| ஏ | கே | சே | டே | தே | பே | றே |
| ஐ | கை | சை | டை | தை | பை | றை |
| ஓ | கோ | சோ | டோ | தோ | போ | றோ |
| ஔ | கௌ | சௌ | டௌ | தௌ | பௌ | றௌ |

(உயிர்மெய் வல்லினம் — நெடில்)

உயிர் எழுத்துக்களின் நெடில் 7, மெய் எழுத்துக்களில் வல்லினம் 6, ஆக உயிர்மெய் வல்லெழுத்துக்களில் நெட்டெழுத்து ($7 \times 6 = 42$) நாற்பத்திரண்டு.

## (iv) உயிர்மெய் மெல்லினம்-72

### 1. குறில்—30

| உயிர்க் குறில்— ↓ | ங் | ஞ் | ண் | ந் | ம் | ன் | ←மெல்லின மெய் |
|---|---|---|---|---|---|---|---|
| அ | ங | ஞ | ண | ந | ம | ன | உயிர்மெய் மெல்லினம்— குறில். |
| இ | ஙி | ஞி | ணி | நி | மி | னி | |
| உ | ஙு | ஞு | ணு | நு | மு | னு | |
| எ | ஙெ | ஞெ | ணெ | நெ | மெ | னெ | |
| ஒ | ஙொ | ஞொ | ணொ | நொ | மொ | னொ | |

உயிர் எழுத்துக்களில் குறில் **5**, மெய் எழுத்துக்களில் **மெல்லினம் 6, ஆக உயிர்மெய் மெல்லெழுத்துக்களில்** குற்றெழுத்து **(5 × 6 = 30)** முப்பது.

## 2. நெடில்—42

| உயிர் நெடில்— ↓ | ங் | ஞ் | ண் | ந் | ம் | ன் ←மெல்லினமெய் |
|---|---|---|---|---|---|---|
| ஆ | ஙா | ஞா | ணா | நா | மா | னா |
| ஈ | ஙீ | ஞீ | ணீ | நீ | மீ | னீ |
| ஊ | ஙூ | ஞூ | ணூ | நூ | மூ | னூ |
| ஏ | ஙே | ஞே | ணே | நே | மே | னே |
| ஐ | ஙை | ஞை | ணை | நை | மை | னை |
| ஓ | ஙோ | ஞோ | ணோ | நோ | மோ | னோ |
| ஔ | ஙௌ | ஞௌ | ணௌ | நௌ | மௌ | னௌ |

(உயிர்மெய் மெல்லினம் — நெடில்.)

உயிர் எழுத்துக்களில் நெடில் 7, மெய்யெழுத்துக்களில மெல்லினம் 6, ஆக உயிர்மெய் மெல்லெழுத்துக்களில் நெட்டெழுத்து (7 × 6 = 42) நாற்பத்திரண்டு.

## (v) உயிர்மெய் இடையினம்-72

### 1. குறில்—30

| உயிர்க் குறில்— ↓ | ய் | ர் | ல் | வ் | ழ் | ள் | ←இடையின மெய் |
|---|---|---|---|---|---|---|---|
| அ | ய | ர | ல | வ | ழ | ள | உயிர்மெய் இடையினம்— குறில் |
| இ | யி | ரி | லி | வி | ழி | ளி | |
| உ | யு | ரு | லு | வு | ழு | ளு | |
| எ | யெ | ரெ | லெ | வெ | ழெ | ளெ | |
| ஒ | யொ | ரொ | லொ | வொ | ழொ | ளொ | |

உயிர் எழுத்துக்களில் குறில் **5**, மெய் எழுத்துக்களில் **இடையினம் 6**, ஆக **உயிர்மெய்** இடையெழுத்துக்களில் குற்றெழுத்து (**5** $\times$ **6** = **30**) முப்பது.

## 2. நெடில்—42

| உயிர் நெடில்— ↓ | ய் | ர் | ல் | வ் | ழ் | ள் ←இடையின மெய் |
|---|---|---|---|---|---|---|
| ஆ | யா | ரா | லா | வா | ழா | ளா |
| ஈ | யீ | ரீ | லீ | வீ | ழீ | ளீ |
| ஊ | யூ | ரூ | லூ | வூ | ழூ | ளூ |
| ஏ | யே | ரே | லே | வே | ழே | ளே |
| ஐ | யை | ரை | லை | வை | ழை | ளை |
| ஓ | யோ | ரோ | லோ | வோ | ழோ | ளோ |
| ஔ | யௌ | ரௌ | லௌ | வௌ | ழௌ | ளௌ |

} உயிர்மெய் இடையினம்-நெடில்

உயிர் எழுத்துக்களில் நெடில் 7, மெய் எழுத்துக்களில் இடையினம் 6, ஆக உயிர்மெய் இடையெழுத்துக்களில் நெட்டெழுத்து $(6 = 7 \times 42)$ நாற்பத்திரண்டு.

# எழுத்து இலக்கண அட்டவணை

**எழுத்து 247**

- உயிர் 12
- மெய் 18
- உயிர்மெய் 216
- ஆய்தம் 1

**உயிரெழுத்து 12**

- குறில் 5
- நெடில் 7

**மெய்யெழுத்து 18**

- வல்லினம் 6
- மெல்லினம் 6
- இடையினம் 6

**உயிர்மெய் எழுத்து 216** ($12 \times 18 = 216$)

- குறில் $5 \times 18 = 90$
- நெடில் $7 \times 18 = 126$

**உயிர்மெய் எழுத்து 216**

- உயிர்மெய் வல்லினம் 72 ($6 \times 12 = 72$)
  - குறில் 30 ($5 \times 6 = 30$)
  - நெடில் 42 ($7 \times 6 = 42$)
- உயிர்மெய் மெல்லினம் 72 ($6 \times 12 = 72$)
  - குறில் 30 ($5 \times 6 = 30$)
  - நெடில் 42 ($7 \times 6 = 42$)
- உயிர்மெய் இடையினம் 72 ($6 \times 12 = 72$)
  - குறில் 30 ($5 \times 6 = 30$)
  - நெடில் 42 ($7 \times 6 = 42$)

## பயிற்சி

1. கீழ்வரும் எழுத்துக்களைப் பிரித்து எழுதுக :

(உ-ம்) ச் + ஏ = சே, ர் + அ = ர.
சே, ர, சோ, ழ,
வி, டு, க, ஊ, கி, ண, று, கு, தி, ரை.
ப, ற, வை, கூ, லி, வே, ஊ, தா.
கு, வ, ஊ

2. கீழ்வரும் எழுத்துக்களைச் சேர்த்து எழுதுக:

(உ-ம்) ம் + அ = ம.

ம் + அ, ண் + இ, க் + ஒ, ட் + ஐ,
ந் + உ, ர் + ஐ, ப் + அ, ன் + இ,
ய் + ஆ, ன் + ஐ, வ் + ஆ, ழ் + ஐ.

3. பின்வரும் வாக்கியங்களில் உள்ள உயிர்மெய் எழுத்துக்களைத் தனியே எடுத்து எழுதி, அவை, உயிர் மெய்க் குறிலா, உயிர்மெய் நெடிலா, உயிர்மெய் வல்லினமா, உயிர் மெய் மெல்லினமா, உயிர்மெய் இடையினமா என்பவற்றையும், உயிர் மெய் வல்லினத்தில் குறிலா, நெடிலா உயிர்மெய் மெல் லினத்தில் குறிலா, நெடிலா, உயிர்மெய் இடையினத்தில் குறிலா, நெடிலா என்பவற்றையும் அட்டவணையில் அமைத்து எழுதுக.

1. உயிர் போனாலும் பொய் கூறாதே.
2. பெரியார் சொல்லைப் பேணி நட.
3. கந்தையானாலும் கசக்கிக் கட்டு.
4. கூழானாலும் குளித்துக் குடி.
5. ஞாலம் கருதினும் கைகூடும்.

| சொல் | உயிர் மெய்க் குறில் | உயிர் மெய் நெடில் | உயிர்மெய் வல்லினம் குறில் | நெடில் | உயிர் மெய் மெல்லினம் குறில் | நெடில் | உயிர்மெய் இடையினம் குறில் | நெடில் |
|---|---|---|---|---|---|---|---|---|
| உயிர் | யி | | | | | | யி | |
| போனா லும் | லு | போ னா | | போ | | னா | லு | |
| பொய் | பொ | | பொ | | | | | |
| பேசா தே | | பே சா தே | | பே சா தே | | | | |

## வினாக்கள்

1. உயிர்மெய் எழுத்துக்கள் என்பவை யாவை ?
2. உயிர்மெய் யெழுத்துக்கள் எத்தனை வகைப் படும் ?
3. உயிர்மெய்க் குற்றெழுத்துக்கள் எத்தனை ? எவ்வாறு ?
4. உயிர்மெய் நெட்டெழுத்துக்கள் எத்தனை? எவ்வாறு?
5. உயிர்மெய் வல்லின எழுத்துக்கள் எத்தனை? எப்படி?
6. உயிர்மெய் மெல்லின எழுத்துக்கள் எத்தனை?எப்படி?
7. உயிர்மெய் இடையின எழுத்துக்கள் எத்தனை ? எப்படி ?
8. உயிர்மெய் வல்லினத்தில் குற்றெழுத்து எத்தனை ? நெட்டெழுத்து எத்தனை ? அவை யாவை ?
9. உயிர்மெய் மெல்லினத்தில் குறில் எத்தனை ? நெடில் எத்தனை ? அவை யாவை ?
10. உயிர்மெய் இடையினத்தில் குறில் எத்தனை ? நெடில் எத்தனை ? அவை யாவை ?

# 4. இன எழுத்து

## எழுத்துக்களின் இனம்

மக்களுள் வலிமையுடையவன் வலிமை குறைந்த மெலியவனுக்குத் துணையாக நிற்கிறான். அவ்வாறே மெலியவன் வலியவனைத் துணையாகச் சேர்க்கிறான். நடுநிலைமை உடையவன் தனித்து நிற்கக் கூடியவனாக இருக்கின்றான். அவ்வாறே எழுத்துக்களிலும் வன்மை, மென்மை, இடைமை இருப்பதைப் பார்த்தோம்.

(எழுத்துக்களுள் பிறப்பிடம், முயற்சி, அளவு, பொருள், உருவம் ஆகிய இவற்றுள் ஒப்புமை உடையது இனமாகும்.

(உயிரெழுத்துக்களில்

அகரத்திற்கு இனம் ஆ
இகரத்திற்கு இனம் ஈ
உகரத்திற்கு இனம் ஊ
எகரத்திற்கு இனம் ஏ
ஒகரத்திற்கு இனம் ஓ
ஐ காரத்திற்கு இகரமும்
ஔகாரத்திற்கு உகரமும்

இனமாக வரும்.)

| அ-ஆ | இ-ஈ | உ-ஊ | எ-ஏ | ஒ-ஓ |
|---|---|---|---|---|
| ஐ-இ | ஔ-உ | | | |

## மெய்யெழுத்துக்களில்

வல்லினம் மெல்லினம்

ககரத்திற்கு இனம் ங
சகரத்திற்கு இனம் ஞ
டகரத்திற்கு இனம் ண
தகரத்திற்கு இனம் ந
பகரத்திற்கு இனம் ம
றகரத்திற்கு இனம் ன

| க-ங | ச-ஞ | ட-ண | த-ந | ப-ம | ற-ன |
|---|---|---|---|---|---|

## இடையினம்

ய, ர, ல, வ, ழ, ள

என்னும் இடையினம் ஆறும் ஓரினம் எனப்படும்.

## பயிற்சி

ஆ, ஊ, ஏ, ஔ, ஐ, க், ச், த், ப்,
ங், ண், ம், ர, ல், வ், கௌ, மௌ, வௌ.

மேற்கண்ட எழுத்துக்களில் எவ்வெவ் வெழுத்துக்களுக்கு எவ்வெவ் வெழுத்து இனமாகும்? எந்த எழுத்திற்கு இனமில்லை? ஏன்?

## வினாக்கள்

1. இனமாவது யாது?
2. உயிரெழுத்துக்களில் எவ்வெவ் வெழுத்துக்களுக்கு எவ்வெவ் வெழுத்துக்கள் இனமாக வரும்?
3. மெய்யெழுத்துக்களில் எவ்வெவ் வெழுத்துக்களுக்கு எவ்வெவ் வெழுத்துக்கள் இனமாகும்?
4. தமக்குத்தாமே இனமாக நிற்கும் எழுத்துக்கள் எவை?

# 5. மாத்திரை

1. அ, இ, உ, எ, ஒ, க, கி, கு, கெ, கொ.

2. ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ, கா, கீ, கூ, கே, கை, கோ, கௌ.

மேலே இரண்டு வகையான எழுத்துக்கள் காட்டப்பட்டுள்ளன. அவற்றுள் முதலில் உள்ள எழுத்துக்கள் குறுகி ஒலிக்கின்றன. இரண்டாவதாக உள்ள எழுத்துக்கள் நீண்டு ஒலிக்கின்றன. இவற்றிலிருந்து எழுத்துக்களை ஒலிப்பதற்கு உரிய கால அளவைகள் உண்டு என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம்.

பொருள்களை அளப்பதற்குக் கருவிகள் இருக்கின்றன. அவ்வாறே ஒலியை அளந்து அறிவதற்கும் கருவி உண்டு. அக்கருவியை **மாத்திரை** என்று சொல்லுவர். மாத்திரை என்ற சொல்லுக்கு அளவை என்பது பொருளாகும். ஒருமுறை இயல்பாகக் கண்ணிமைக்கும் காலத்தை 'ஒரு மாத்திரை' என்று கூறுவர். ஒருமுறை கையை நொடிப்பதும் ஒரு மாத்திரையாகும்.

'அ' என்று சொல்வதற்கும், ஒருமுறை இயல்பாகக் கண்ணை இமைப்பதற்கும் பிடிக்கும் காலம் சரியாக இருக்கும். ஆகவே, **குற்றெழுத்துக்கு ஒரு மாத்திரை** என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம்.

இவ்வாறே 'ஆ' என்று சொல்வதற்கும், இரண்டு முறை கண்ணிமைப்பதற்கும் பிடிக்கும் காலம் சரியாக இருக்கும். இதிலிருந்து **நெட்டெழுத்திற்கு இரண்டு மாத்திரை** என்பதை நீங்கள் அறியலாம்.

**(அ) உயிர்க் குற்றெழுத்திற்கும். (க) உயிர்மெய்க் குற்றெழுத்திற்கும் தனித்தனி மாத்திரை ஒன்று.**

**(ஆ) உயிர் நெட்டெழுத்திற்கும், (கா) உயிர்மெய் நெட்டெழுத்திற்கும் தனித்தனி மாத்திரை இரண்டு.**

**(க்) மெய்யெழுத்திற்கும் (ஃ) ஆய்த எழுத்திற்கும் தனித்தனி மாத்திரை அரை.**

மெய்யெழுத்திற்கு மாத்திரை அரை. உயிர்க் குற்றெழுத்திற்கு மாத்திரை ஒன்று. ஒரு மெய் யெழுத்தோடு ஓருயிர்க் குற்றெழுத்து [க்+அ=க] சேர்ந்தால், க் = $\frac{1}{2}$, அ = 1 ஆக = $1\frac{1}{2}$ மாத்திரை யாயிற்றே என்று கணக்குப்போடலாம். அவ்வாறே க்+ஆ=கா இதற்கு மாத்திரை $2\frac{1}{2}$ என்று கருத லாம். ஆனால், மெய்யெழுத்து உயிரெழுத்தோடு சேர்ந்தபோது உயிரின் ஒலியில் மெய்யின் ஒலி அடங்கி விடுகின்றது. எனவே, **உயிர்க் குற்றெழுத் தைப்போலவே உயிர்மெய்க் குற்றெழுத்துக்கும் மாத்திரை ஒன்றேயாகும்; உயிர் நெட்டெழுத்தைப் போலவே உயிர் மெய் நெட்டெழுத்துக்கும் மாத்திரை இரண்டே ஆகும்.**

மெய்யெழுத்தை உப்பு என்றும் உயிரெழுத்தை நீர் என்றும் வைத்துக் கொள்ளுங்கள். ஒரு படி நீரில் அரைப் படி உப்பைக் கொட்டி அது கரைந்துபோன பிறகு அளந்தால் ஒரு படி நீர் தான் இருக்கும். ஒன் றரைப்படி இருக்காது.

இவ்வெடுத்துக்காட்டு உயிர்மெய் மாத்திரைக் குப் பொருந்தும்.

### பயிற்சி

1. பின்வரும் எழுத்துக்களுக்கு மாத்திரை எவ்வளவு எனக் கூறுக : ஏ, கே, மை, ப், ய், க, எ, வீ, இ, ஃ, து, ம், ர்.

### வினாக்கள்

1. ஒரு மாத்திரையுடைய எழுத்துக்கள் எவை ?
2. இரண்டு மாத்திரையுடைய எழுத்துக்கள் எவை ?
3. அரை மாத்திரையுடைய எழுத்துக்கள் எவை ?
4. உயிரோடு கூடிய மெய்யெழுத்திற்கு ஏன் மாத்திரை இல்லை ?

# II. சொல் இலக்கணம்

ஆ, பூ, கை, வை, தை, போ, வா.

இவை ஓரெழுத்தால் ஆன சொற்கள். ஒவ்வொரு எழுத்தும் தனித்தனி நின்று ஒவ்வொரு பொருளை உணர்த்தியது.

ஆடு, பாடு, கோழி, வாத்து, தாமரை, தேன்மொழி, மாவீரன், பசிக்கிறது, சமைக்கிறாள்.

இவை ஒவ்வொன்றும் ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துக்களால் ஆகிய ஒவ்வொரு பொருளை உணர்த்துவதைக் காணலாம்.

**ஓரெழுத்துத் தனித்தும், இரண்டு முதலாகத் தொடர்ந்தும் பிறபொருளைத் தருமாயின் அது சொல்லாகும். சொல், மொழி, பதம்** என்பன ஒரு பொருட் சொற்கள்.

தமிழில் சொற்கள் நான்கு வகைப்படும். அவை **பெயர்ச்சொல், வினைச் சொல், இடைச் சொல், உரிச் சொல்** என்பனவாகும்.

## 1. *பெயர்ச்சொல்*

**பொருள்களின் பெயரைத் தெரிவிக்கும் சொல் பெயர்ச்சொல்லாகும்.**

(உ-ம்) நிலம், நீர், தீ, காற்று, வான்.

### பெயர்ச் சொல்லின் வகை

1. மக்கள், பொன் - பொருட் பெயர்.
2. பள்ளிக்கூடம் - இடப் பெயர்.
3. காலை, சித்திரை - காலப் பெயர்.
4. கண், கால் - சினைப் பெயர்.
5. நன்மை, செம்மை - குணப் பெயர்.
6. படித்தல், ஆடல் - தொழிற் பெயர்.

சொற்கள் பொருளின் பெயரை உணர்த்துவது **பொருட் பெயர்.**

இடத்தின் பெயரை உணர்த்துவது **இடப் பெயர்.**

காலத்தைத் தெரிவிக்கும் பெயர் **காலப் பெயர்.**

ஒரு பொருளின் முழுவடிவத்தையும் குறிக்காமல் ஒரு பகுதியை மட்டும் குறிக்கும் பெயர் **சினைப் பெயர்.**

பொருளின் குணத்தைத் தெரிவிக்கும் பெயர் **குணப் பெயர்.** அல்லது **பண்புப் பெயர்.** (குணம்= பண்பு)

தொழிலைத் தெரிவிக்கும் பெயர் **தொழிற் பெயர்.**

இவற்றிற்குரிய உதாரணங்களை எல்லாம் ஐந்தாம் வகுப்பில் விரிவாகப் படித்திருக்கிறீர்கள்.

இந்த வகுப்பில் **இடுகுறிப் பெயர், காரணப் பெயர், சுட்டுப் பெயர், வினைப் பெயர், திணை, பால், எண்** ஆகியவற்றின் இலக்கணத்தைக் கற்றுக் கொள்ளுங்கள்.

## 1. இடுகுறிப் பெயர்

நம் முன்னோர்கள் ஒவ்வொரு பொருளையும் நாம் தெரிந்து கொள்வதற்கு யாதோ ஒரு காரணம் பற்றிப் பெயர் வைத்திருக்கிறார்கள். அவற்றுள் காரணம் தெரியக் கூடியவற்றைக **காரணப் பெயர்கள்** என்றும், காரணம் புலப்படாத பெயர்களை **இடுகுறிப் பெயர்கள்** என்றும் வழங்கி வருகின்றோம்.

மண், நீர், மரம், செடி, தென்னை, பனை, கிளி, மயில், புறா, ஆடு, மாடு, பாம்பு, புலி, கரடி.

இவ்வாறு பொருட்காரணம் தெரியாத பெயர் **இடுகுறிப் பெயர்** ஆகும்.

## 2. காரணப் பெயர்

மின்னுவது **மின்னல்**; காண்பது **காட்சி**; பறப்பது **பறவை**; மூன்று கால்களை உடையது **முக்காலி**; நான்கு கால்களை உடையது **நாற்காலி**; காகா என்று கரைவது **காக்கை**; துண்டிக்கப்படுவது **துண்டு**; வெட்டப்படுவது **வேட்டி**; பூப்பது **பூ**; எழுதப்படுவது **எழுத்து**; மொழிவது **மொழி**; அகழப்பட்டது **அகழி**; முதுமை உடையவன் **மூத்தவன்**; இளமை உடையவன் **இளையவன்**; இல்லத்திற்கு உரியவள் **இல்லாள்**.

இவ்வாறு காரணம் பற்றி வழங்கும் பெயர் **காரணப் பெயர்** ஆகும்.

### பயிற்சி

1. கீழ்வரும் சொற்களில் இடுகுறிப்பெயர், காரணப் பெயர்களைத் தனித்தனியே எடுத்து எழுதுக.

விளக்கு, காற்று, ஆட்டம், வீடு, பொன்னன், பொருள், பல்லன், உழவர், செந்தாமரை, மான், சேவல், வல்லினம், குறில், நெடில், பனி, திங்கள், சென்னை, காவிரிப்பூம் பட்டினம்.

2. உனக்குத் தெரிந்த காரணப் பெயர்களில் நான்கு எழுதுக.

3. இடுகுறிப் பெயருக்கு நான்கு உதாரணம் தருக.

### வினாக்கள்

1. சொல்லாவது யாது ?
2. சொற்கள் எத்தனை வகைப்படும்? அவை யாவை ?
3. பெயர்ச் சொல்லாவது யாது ?
4. அறுவகைப் பெயர்கள் எவை ?
5. இடுகுறிப் பெயராவது யாது ?
6. காரணப் பெயராவது யாது ?

## 3. சுட்டுப் பெயர்

அ, இ, உ என்னும் இம்மூன்று எழுத்துக்களும் எழுத்தின் வகையால் **சுட்டெழுத்து** எனப்படும். இவை மூன்றும் சொல்லின் வகையால் **சுட்டிடைச் சொல்** என்று கூறப்படும்.

| | | | | |
|---|---|---|---|---|
| **அவன்** | **இவன்** | **அது** | **இது** | **உவன்** |
| **அவள்** | **இவள்** | **அவை** | **இவை** | **உது** |
| **அவர்** | **இவர்** | | | |

மேற்கண்ட சொற்களில் **அ, இ, உ** என்னும் சுட்டு இடைச் சொற்கள் பகுதியாக வந்துள்ளன.

**சுட்டெழுத்தின் அடியாகப் பிறக்கும் பெயர் சுட்டுப் பெயராகும்.**

## 4. வினாப் பெயர்

வினா இடைச் சொற்கள் (எ, யா, ஆ, ஓ, ஏ) ஐந்தனுள் **எ, யா என்னும் இவ்விரண்டையும் பகுதியாகப் பெற்றுவரும் பெயர் வினாப்பெயர் எனப்படும்.**

**கேள்வியைக் குறிக்கும் ஐந்து எழுத்துக்களும் எழுத்தின் வகையால் வினாவெழுத்து எனப்படும்.**

எவன் யாவன் எது எவை
எவள் யாவள் யாது யாவை
எவர் யாவர்

இவற்றுள் எ, யா என்னும் இரண்டெழுத்துக்களும் பகுதியாகப் பெற்று வந்துள்ளமை காண்க.

## 5. திணை

திணை **உயர்திணை**, **அஃறிணை** என இருவகைப்படும். **திணை** என்பதற்குக் குலம், வகை, ஒழுக்கம் என்பன பொருளாகும்.

### i. உயர் திணை

பகுத்தறிவு பெற்ற உயர்ந்த ஒழுக்கமுடைய மக்கள், தேவர், நரகர்—உயர்திணை என்று சொல்லப்படுவர். (உயர்திணை = உயர்வாகிய குலம்.)

### ii. அஃறிணை

பகுத்தறிவு இல்லாத விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீர் வாழ்வன முதலிய உயிருள்ள பொருள்களும்; கல், மண் முதலிய உயிரில்லாத பொருள்களும் அஃறிணைப் பெயர்களாகும். [அஃறிணை = (அல்+திணை) உயர்வு அல்லாத குலம்.]



### பயிற்சி

1. கீழே உள்ள சொற்களில் உயிரில்லாத பொருள், உயிருள்ள பொருள் இவை யெனத் தனியே எடுத்து எழுதுக.

நாற்காலி, அணில், புழு, புத்தகம், மீன், ஓடு, கல், கிளி, பாய், விளக்கு, பூனை.

2. பின்வரும் சொற்களில் காணும் உயர்திணை அஃறிணைப் பொருள்களை வேறு பிரித்து எழுதுக.

பட்டுப் பூச்சி, சிதம்பர நாதர், ஆசிரியர், கண்ணாடி, பெண், பசு, அமைச்சர், வேடன், சிறுமி, கொக்கு, காற்று தம்பி, முயல்.

### வினாக்கள்

1. சுட்டுப் பெயராவது யாது ?
2. வினைப் பெயராவது யாது ?
3. திணை என்பதன் பொருள் என்ன ?
4. உயர்திணையாவது யாது ?
5. அஃறிணையாவது யாது ?

## 6. பால்

**பால்** என்பதற்குப் **பகுப்பு, பிரிவு** என்பன பொருளாகும்.

உலகத்து உயிர்கள் எல்லாவற்றையும் **ஆண், பெண்** என்னும் இரு பிரிவுகளில் அடக்கலாம்.

### (i) ஆண்பால் (ஒருமை எண்)

பையன், பொன்னன், வீரன், கண்ணன், குடிலன், இளங்கோ, கோவலன், கண்ணப்பன், பாரி, அதியமான், கபிலர், இடையன், மகன், அருளப்பன், அறிவழகன், நம்பி, முருகன், நக்கீரன்.

மேற்கண்ட பெயர்கள் யாவும் ஆண் இனத்தைக் குறிப்பதனால் இவை யாவும் **ஆண்பால்** பெயர்களாகும். **ஆண் இனத்தைக் குறிக்கும் பெயர்கள் ஆண்பால் பெயர்கள்** என்று சொல்லப்படும்.

## (ii) பெண்பால் (ஒருமை எண்)

பெண், பொன்னி, வீராயி, அங்கயற்கண்ணி, சிவகாமி, இளவரசி, கண்ணகி, கண்ணம்மாள், ஆதிரை, ஔவை, தாய், அல்லி, மகள், நங்கை, வள்ளி, எழிலி.

மேற்கண்ட பெயர்கள் யாவும் பெண் இனத்தைக் குறிப்பதனால் இவை யாவும் **பெண்பால் பெயர்களாகும்**. **பெண் இனத்தைக் குறிக்கும் பெயர்கள் பெண்பால் பெயர்கள்** என்று சொல்லப்படும்.

## (iii) பலர்பால் (பன்மை எண்)

பெண்கள், பிள்ளைகள், மனிதர்கள், கிழவர்கள், இடையர்கள், அரசர்கள், கிழவிகள், வேடர்கள், குறவர்கள்.

ஆண்பாலின் கூட்டத்தையாவது, பெண்பாலின் கூட்டத்தையாவது, ஆண்பாலும் பெண்பாலும் சேர்ந்த கூட்டத்தையாவது சேர்த்துப் பொதுப்படக் குறிக்கிற பெயர்கள் **பலர்பால் பெயர்கள்** எனப்படும்.

பலர்பால் என்பது ஆண்பால் பெயர்களுக்கும் பெண்பால் பெயர்களுக்கும் பொதுவான பாலாகும்.

பெரியவர்களைக் குறிக்கும்போது தந்தை வந்தார், ஆசிரியர் சென்றார் என மரியாதையாகப் பேசுவதே முறையாகும்.

இவ்வாறு சொல்லும் பெயர்களும் பலர்பாலேயாகும்.

**ஆண்பால், பெண்பால், பலர்பால்** ஆகிய மூன்றும் **உயர்திணைக்கு** உரிய பால்களாகும்.

## (iv) ஒன்றன்பால்

(அஃறிணையில் ஒருமை எண்)

மரம், செடி, கொடி, இலை, பூ, காய், பழம், விதை, ஆடு, மாடு, கோழி, நாய், பூனை, பாம்பு, பல்லி, புழு, பூச்சி, புலி கரடி, நரி.

இவை ஒன்றைக் குறிக்கும் பெயர்கள்.

அஃறிணையில் ஆண், பெண் என்ற பாகுபாடு காண்பது இல்லை. ஒன்றைக் குறிக்கும் பெயர்களுக்கு ஒன்றன்பால் என்பது பெயராகும்.

## (v) பலவின்பால்

(அஃறிணையில் பன்மை எண்)

மரங்கள், செடிகள், கொடிகள். இலைகள், பூக்கள், காய்கள், பழங்கள், விதைகள், ஆடுகள், மாடுகள், கோழிகள், நாய்கள், பூனைகள், பாம்புகள், பல்லிகள், புழுக்கள், பூச்சிகள், புலிகள், கரடிகள், நரிகள்.

இவை பல பொருள்களைக் குறிக்கும் பெயர்கள். பகுத்தறிவில்லாத உயிர்களையும், பொருள்களையும் குறிக்கும் பெயர்களுக்குப் பலவின்பால் என்பது பெயராகும்.

பெயர்களின் திணையைப்பற்றிய பால்கள் ஐந்து வகைப்படும்.

1. **ஆண்பால்** }
2. **பெண்பால்** } உயர் திணை ஒருமைக்கு உரியன.

3. **பலர்பால்**—உயர்திணைப் பன்மைக்கு உரியது.

4. **ஒன்றன்பால்**—*அஃறிணை ஒருமைக்கு உரியது.*

5. **பலவின்பால்**—*அஃறிணைப் பன்மைக்கு உரியது.*

## பயிற்சி

1. பெண்பாற் பெயர்களாக மாற்றுக :

   பொன்னன், அரசன், ஆண், சிறுவன், பணக்காரன், வேலைக்காரன்.

2. ஆண்பாற் பெயர்களாக மாற்றுக :

   குறத்தி, மறத்தி, நங்கை, தாய், மகள், மாணவி, ஆசிரியை, **பூக்காரி.**

## வினாக்கள்

1. பால் என்பதன் பொருள் என்ன ?
2. ஆண்பாற் பெயராவது யாது ?
3. பெண்பாற் பெயராவது யாது ?
4. பலர்பாற் பெயராவது யாது ?
5. ஒன்றன்பாற் பெயராவது யாது ?
6. பலவின்பாற் பெயராவது யாது ?

## 7. எண்

பொருள்களை ஒன்று, இரண்டு என்று எண்ணுவது **எண்** எனப்படும். இஃது **ஒருமை, பன்மை** என இரண்டு வகைப்படும்.

| ஒருமை | பன்மை |
|---|---|
| ஒரு பொருளைக் குறிக்கும் பெயர்கள் | ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைக் குறிக்கும் பெயர்கள் |
| பூ<br>அவன்<br>புத்தகம்<br>மரம் | பூக்கள்<br>அவர்கள்<br>புத்தகங்கள்<br>மரங்கள் |

ஒரு பொருளைக் குறிக்கும் பெயர்கள் **ஒருமை எண்** எனவும், ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைக் குறிக்கும் பெயர்கள் **பன்மை எண்** எனவும் பெயர் பெறும்.

**ஒருமையில் ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால் ஆகிய மூன்று பால்களும் அடங்கும். அதனால் அம்மூன்றும் ஒருமைப் பால்கள் என்று பெயர் பெறும்.**

**பன்மையில் பலர்பால், பலவின்பால் என்ற இரண்டு பால்களும் அடங்கும். அதனால் அவை இரண்டும் பன்மைப் பால்கள் என்று பெயர் பெறும்.**

## பயிற்சி

1. பின்வரும் ஒருமைப் பெயர்ச் சொற்களைப் பன்மைச் சொற்களாகவும், பன்மைப் பெயர்ச் சொற்களை ஒருமைச் சொற்களாகவும் மாற்றுக,

விளக்கு, ஆடுகள், மாணுக்கன், கத்தி, கால்கள், பழம், இலை, ஊர், நாற்காலி, பையன், கிளிகள், கல், வீடு, கன்றுகள், வாழைகள்.

| திணை | ஒருமைப் பால்கள் | பன்மைப் பால்கள் |
|---|---|---|
| 1. உயர்திணை | 1. ஆண்பால்—மகன்<br>2. பெண்பால்—மகள் | 1. பலர்பால்—மக்கள் |
| 2. அஃறிணை | 3. ஒன்றன்பால்-மாடு | 2. பலவின் பால்-மாடுகள் |

2. பின்வரும் சொற்றொடர்களில் உள்ள பெயர்ச் சொற்களை எடுத்து, அவற்றின் திணை, பால், எண் ஆகிய இவற்றைப் பகுத்து எழுதுக.

1. இளம்பரிதி திருக்குறள் படித்தான்.
2. தமிழ்ச் செல்வி வெற்றி மகளுடன் வந்தாள்.
3. சேக்கிழார் குன்றத்தூரைச் சேர்ந்தவர்.
4. பசு புல்லை மேய்ந்தது.
5. காளைகள் வண்டியை இழுத்தன.

## வினாக்கள்

1. எண்ணாவது யாது ?
2. ஒருமை எண், பன்மை எண் என்றால் என்ன ?

# II. வினைச்சொல்

## 1. வினைச் சொல்

**உழுதான்**
**உழுகிறான்**
**உழுவான்**

*உழுதான், உழுகிறான், உழுவான் என்னும் சொற்கள் உழவன் என்னும் பொருளின் தொழிலை உணர்த்துகின்றன. ஆகவே, அவை வினைச்சொற்களாம். (வினை = தொழில், செயல்.)*

**ஒரு பொருளின் தொழிலைக் குறிக்கும் சொல் வினைச் சொல் ஆகும்.**

## 2. காலம்

1. *உழவன்* **உழுதான்**
2. *உழவன்* **உழுகிறான்**
3. *உழவன்* **உழுவான்**

**தொழில் நடைபெறும் வேளையைத் தெரிவிப்பது காலமாகும்.**

*'உழவன் உழுதான்' என்ற தொடரில் 'உழுதான்' என்னும் வினைச்சொல் முன்பு நடைபெற்ற ஒரு தொழிலைத் தெரிவிக்கிறது.*

**முன்பு நடந்தேறிய தொழிலைத் தெரிவிப்பது இறந்த காலம் ஆகும்.**

'உழவன் உழுகிறான்' என்ற தொடரில் 'உழுகிறான்' என்னும் வினைச்சொல் உழவனின் செயலைத் தெரிவிப்பதோடு, தொழில் நடைபெறும் காலத்தையும் தெரிவிக்கிறது.

உழவன் எப்பொழுது உழுகிறான்?

உழவன் இப்பொழுது உழுகிறான்.

**இப்பொழுது நிகழும் காலத்தைக் காட்டுவது நிகழ் காலம் ஆகும்.**

'உழவன் உழுவான்' என்ற தொடரில் 'உழுவான்' என்னும் வினைச்சொல் இனிமேல் நடக்கும் தொழிலைத் தெரிவிக்கிறது.

**இனிமேல் நடக்கவேண்டிய தொழிலைத் தெரிவிப்பது எதிர்காலம் ஆகும்.**

## காலத்தைக் காட்டும் இடை நிலைகள்

வினைச் சொற்களின் இடையே நின்று காலத்தைக் காட்டுகின்ற எழுத்துக்கள் 'இடை நிலை' எனப்படும்.

| | | | |
|---|---|---|---|
| உழுதான் | உழு | + த் | + ஆன் |
| உண்டான் | உண் | + ட் | + ஆன் |
| கற்றான் | கல் | + ற் | + ஆன் |
| ஓடினான் | ஓடு | + இன் | + ஆன் |

**த், ட், ற், இன்—இந்நான்கு இடை நிலைகளும் இறந்த காலத்தைக் காட்டுவனவாகும்.**

படிக்கிறாள் — படி + கிறு + ஆள்
பாடுகின்றாள் — பாடு + கின்று + ஆள்

'கிறு', 'கின்று' என்பன இரண்டும் நிகழ்காலத்தைக் காட்டும் இடைநிலைகள் ஆகும்.

தைப்பாள் — தை + ப் + ஆள்
உழுவான் — உழு + வ் + ஆன்

ப், வ் என்பன இரண்டும் எதிர்காலத்தைக் காட்டும் இடைநிலைகள் ஆகும். **காலத்தை இடைநிலைகளால் கண்டு கொள்ளலாம்.**

## பயிற்சி

1. கீழ்வரும் வாக்கியங்களிலுள்ள வினைச் சொற்களைக் கால முறைப்படி எடுத்துக் கீழ்வரும் கட்டங்களில் எழுதுக:-

   1. குடிலன் கோட்டையைக் கட்டினான்
   2. சீவகவழுதி திருநெல்வேலிக்குச் சென்றான்
   3. சிதம்பரநாதனார் உருசியா செல்கிறார்.
   4. மீனாட்சிசுந்தரனார் சென்னைக்கு வருகிறார்.
   5. வரதராசனார் இங்கிலாந்துக்குச் செல்வார்.
   6. நேரு ஐக்கிய நாட்டுச் சபைக்குச் சென்றார்.
   7. இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தை இயற்றினார்.
   8. அருளப்பன் கூலிக்கு வேலை செய்வான்.
   9. மதுரைமுத்து உடற்பயிற்சி ஆசிரியராய் இருக்கிறார்.
   10. திருவிழாவிற்கு எல்லாரும் வருவார்கள்.
   11. வ. உ. சிதம்பரனார் சிறையில் வாடினார்.
   12. மக்கள் நலமாக வாழ்கின்றனர்.

| வாக்கிய எண் | இறந்தகால வினைமுற்று | நிகழ்கால வினைமுற்று | எதிர்கால வினைமுற்று |
|---|---|---|---|
| 1 | கட்டினான் | — | — |
| 2 | | | |
| 3 | | | |
| 4 | | | |
| 5 | | | |
| 6 | | | |
| 7 | | | |
| 8 | | | |
| 9 | | | |
| 10 | | | |
| 11 | | | |
| 12 | | | |

## வினாக்கள்

1. வினைச் சொல்லாவது யாது?
2. காலமாவது யாது?
3. காலம் எத்தனை வகைப்படும்?
4. காலத்தைக் காட்டுவது எது? எவ்வாறு?
5. இறந்தகால வினைச்சொற்கள் மூன்று எழுதுக.
6. நிகழ்கால வினைச்சொற்கள் மூன்று எழுதுக.
7. எதிர்கால வினைச்சொற்கள் மூன்று எழுதுக.

## 3. முற்று

கோவலன் வந்தான்.

மாதவி ஆடினாள்.

மேலேயுள்ள தொடர்களில் வந்தான், ஆடினாள் என்பன கோவலன், மாதவி என்ற இருவருடைய தொழிலைத் தெரிவிக்கின்றன.

வந்தான்—முன்னரே வந்த செய்தியைத் தெரிவிக்கிறது.

ஆடினாள்—முன்னரே ஆடின செய்தியைத் தெரிவிக்கிறது. என்ன காலம்? இறந்த காலம்.

வந்தான் என்ற சொல் என்ன திணை? உயர் திணை. என்ன பால்? ஆண்பால்.

ஆண்பால் என்பதை எவ்வாறு தெரிந்து கொண்டாய்? வந்தான் என்ற சொல்லின் கடைசியில் உள்ள 'ஆன்' என்ற விகுதியே உயர்திணை என்பதையும், ஆண்பால் என்பதையும் அறிவித்தது அன்றோ? அவ்வாறே ஆடினாள் எனபதில் 'ஆள்' என்ற விகுதியே உயர்திணைப் பெண்பால் என்பதைக் காட்டுகிறது.

வந்தான்

ஆடினாள்.

இத்தொடர்களினால் வருதலாகிய தொழிலையும், ஆடுதலாகிய தொழிலையும் அறிகிறோம்.

வந்தான், ஆடினாள் என்ற சொற்கள் செயல் நடந்துபோன காலத்தைத் தெரிவிக்கின்றன. (இறந்தகாலம்)

வந்தான் : உயர்திணை, ஆண்பால்.

ஆடினாள் : உயர்திணை, பெண்பால்.

இங்ஙனம் தொழிலையும் காலத்தையும் காட்டுவதோடு திணை பால் காட்டும் விகுதியும் பெற்றுப் பொருள் முடிந்து நிற்கும் சொல் முற்றுவினை எனப்படும். இதனை வினைமுற்று என்றும் சொல்லுவர்.

(உ-ம்) 1. மாணவன் பாடம் படித்தான்.

2. மாணவி படம் வரைந்தாள்.

3. மக்கள் கூட்டமாக வந்தனர்.

4. பசு பால் கறந்தது.

5. கன்றுகள் துள்ளி ஓடின.

6. நான் இலக்கணம் படித்தேன்.

7. நாங்கள் சிதம்பரம் சென்றோம்.

8. நீ ஆற்றில் குளித்தாய்.

9. நீங்கள் கோயிலுக்குச் சென்றீர்கள்.

மேலே தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூவகை இடங்களில் ஒருமை பன்மை ஐந்து பால்களிலும் வரும் வினை முற்றுக்களுக்கு எடுத்துக்காட்டுகள் கொடுக்கப்பட்டுள்ளன. இவை ஒவ்வொன்றும் மூன்று காலங்களிலும் வரும்.

## பயிற்சி

மாணவன் பாடம் படித்தான்.

மாணவன் பாடம் படிக்கிறான்.

மாணவன் பாடம் படிப்பான்.

இவ்வாறே வரைந்தாள், வந்தனர், கறந்து, ஓடின, படித்தேன், சென்றோம், குளித்தாய், சென்றீர்கள் என்னும் சொற்களையும், மூன்று காலங்களிலும் அமைத்து எழுதினால் (9 × 3 = 27) இருபத்தேழு வகையாக வினைமுற்று அமையும் என்பதை அறிந்துகொள்ளலாம். தனித் தனியே எடுத்து எழுதுக.

### வினாக்கள்

1. முற்று வினையாவது யாது?
2. வினைமுற்று எவற்றை உணர்த்தும்?
3. வினைமுற்று எத்தனை வகைப்படும்?
4. ஐந்து பால்களுக்கும் ஐந்து வினைமுற்றுக்கள் கூறுக.

## 4. எச்சம்

என்னிடம் **படித்த** பையன் **வந்து** சென்றான்.

மேற்கண்ட வாக்கியத்தில் 'சென்றான்' என்னும் வினைச்சொல் பொருள் முடிவை உணர்த்தி நிற்கின்றது. அது வினைமுற்றாகும். படித்த என்பதும், வந்து என்பதும் வினைச்சொற்களே ஆகும்.

படி + த் + அ = படித்த. படி—பகுதி, த்—இறந்த கால இடைநிலை, அ—விகுதி. அ என்னும் விகுதியினால் திணையேனும், பாலேனும், இடமேனும் தெரியவில்லை. அதோடு படித்த என்னும் சொல்லினால் வாக்கியத்தின் பொருளும் முடிவடையவில்லை. ஆகையால் படித்த என்னும் சொல் **எச்சம்** எனப்படும். 'வந்து' என்ற சொல்லும் பொருள் முடிவைக் காட்டவில்லை. அதுவும் எச்சமாகும்.

**விகுதியினால் திணை, பால், இடங்களைக் காட்டாததும், பொருள் முடிவு அடையாததும் ஆகிய வினைச்சொல் எச்சம் எனப்படும்.**

**எச்சங்கள் பெயரெச்சம், வினையெச்சம் என இரு வகைப்படும்.**

1. பெயரெச்சம் —செய்த............
செய்கின்ற......
செய்யும்.........

2. வினையெச்சம் —செய்து...........
செய..............
செயின்..........

## (i) பெயரெச்சம்

பாரதிதாசன் பாடிய பாட்டு

இத்தொடரில் உள்ள பாடிய என்ற வினைச்சொல் பொருள் முடியாமல் நிற்கின்றது. இவ்வாறு பொருள் முடியாமல் நிற்கும் வினை, எச்ச வினை ஆகும். பாடிய என்பது, பாட்டு என்ற பெயர்ச் சொல்லைச் சேர்த்தால் பொருள் முற்றுப் பெறுகிறது.

ஆகவே, தன்னளவில் கருத்து முடிவு பெறுமல் வேறொரு பெயரைக் கொண்டு முடிவடையும் எச்சம் **பெயரெச்சம்** எனப்படும்.

## (ii) வினையெச்சம்

மயில் மகிழ்ந்து ஆடியது.

இத்தொடரில் உள்ள மகிழ்ந்து என்ற வினைச் சொல் பொருள் முடியாமல் இருக்கின்றது. இவ்வாறு பொருள் முடியாமல் நிற்கும் வினை, எச்சவினையாகும். மகிழ்ந்து என்பது, ஆடியது என்ற வினைச்சொல்லைச் சேர்த்தால் பொருள் முற்றுப் பெறுகிறது.

ஆகவே, தன்னளவில் பொருள் முடிவு பெறாமல், மற்றொரு வினையைக் கொண்டு முடிவடையும் வினையே **வினையெச்சம்** எனப்படும்.

## பயிற்சி

1. கீழ்வரும் சொற்களில் காணும் முற்று எச்சச் சொற்களைப் பிரித்து எழுதுக:-

உறங்கினான்; உறங்கி, விழித்தான்; விழித்து, படித்தான், படித்து வென்றான்; வென்று, உயர்ந்தான்.

2. கீழ்வரும் வாக்கியங்களில் காணும் பெயரெச்ச வினையெச்சச் சொற்களைத் தனித்தனியே எடுத்து எழுதுக:-

1. பூக்கள் பூத்துக் குலுங்கின
2. காய் காய்த்துத் தொங்கியது.
3. பழம் பழுத்து விழுந்தது.
4. படித்த மாணவனை தேற்றினான்.
5. பாடின பெண் வந்தாள்.
6. நான் பிறந்த ஊர் சிதம்பரம்.
7. உறங்கி எழுந்த பையன்.
8. நாய் குரைத்துப் பாய்ந்தது.
9. பையன் துடித்து அலறினான்.
10. தாய், அழுத குழந்தையை அணைத்துக் கொண்டாள்.

## வினாக்கள்

1. எச்சமாவது யாது?
2. பெயரெச்சமாவது யாது?
3. வினையெச்சமாவது யாது?

# உள்ளுறை

பக்கம்

## இலக்கணம்

### க. எழுத்து



### உ. சொல்

பக்கம்

## மொழிப் பயிற்சி



## கட்டுரை

# கழகச் செந்தமிழ் இலக்கணம்

## எட்டாம் வகுப்பு



### மொழியும் இலக்கணமும்

உலகில் வாழும் மக்கள் தம் உணர்ச்சிகளையும் கருத்துக்களையும் பிறர்க்கு அறிவிக்கத் துணையாயிருக்கும் கருவி **மொழி** என்று சொல்லப்படும்.

மொழிகள் இவ்வுலகில் தொள்ளாயிரத்துக்குமேல் வழங்குகின்றன. எனினும் **உயர்தனிச் செம்மொழிகள்** என்று சிறப்பித்துக் கூறப்படுவன சிலவே. அவற்றுள் நம் நாட்டுத் **தமிழ் மொழியும்** ஒன்றாகும்.

தமிழ்மொழி மிகவும் தொன்மையுடையது; இலக்கணம், இலக்கியம் ஆகிய நூல்கள் பல தோன்றி வளம் நிரம்பப் பெற்றது; பல நாட்டினராலும் பாராட்டும் புகழ் பெற்றது.

தமிழ்மொழியின் இலக்கணம் **எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி** என ஐந்து வகைப்படும்.

எழுத்துக்கள் இத்தனை; அவை இன்ன இன்ன முறையில் தொடர்ந்து நிற்கும் என்று எழுத்துக்களின் இயற்கையை எடுத்துரைப்பது **எழுத்திலக்கணம்** ஆகும்.

சொற்கள் இத்தனை; அவை இவ்வாறு தொடர்ந்து நிற்கும் என்று சொல்லின் இயற்கையைக் கூறுவது **சொல் இலக்கணம்** ஆகும். இவ்வாறே மற்றை இலக்கணங்களும் அமைந்திருக்கும்.

எழுத்துக்களும் சொற்களும் இலக்கண முறைப்படி அமைந்திருந்தால் நமது கருத்தும், உணர்ச்சியும் பிறர்க்கு எளிதில் விளங்கும். ஆதலால் இலக்கணம் நமக்கு இன்றியமையாதது ஆகும்.



# ௧. எழுத்து

## 1. எழுத்தும் வகையும்

சொல்லுக்கு முதற்காரணமாகத் தோன்றும் ஒலியே எழுத்து எனப்படும். மக்களிடம் தோன்றும் தும்மல், இருமல், முற்குதல் முதலிய ஒலிகள் சொல்லுக்கு முதற் காரணம் ஆகாமையால் அவை எழுத்துக்கள் எனப்படா.

ம, ண்—என்ற இரண்டு ஒலிகளும் இயைந்து மண் என்ற சொல் தோன்றுவதற்கு முதற்காரணமாய் நின்றன. இவ் வொலிகளுக்கு வடிவம் அமைத்து எழுதுவதால் அவை எழுத்து எனப் பெயர் பெற்றன.

எழுத்துக்கள் முதல் எழுத்து என்றும், சார்பு எழுத்து என்றும் இருவகைப்படும். முதன்மையாக உள்ள எழுத்துக்கள் முதலெழுத்து என்றும், அவற்றைச் சார்ந்து தோன்றிய எழுத்துக்கள சார்பு எழுத்து என்றும் பெயர் பெற்றன.

நன்னூற் சூத்திரம் :

> 'மொழிமுதற் காரணம் ஆம்அணுத் திரளொலி
> எழுத்தது முதல்சார்பு எனஇரு வகைத்தே.' (1)

## 2. முதல் எழுத்து

உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டும் மெய்யெழுத்துக் கள் பதினெட்டும் ஆக முப்பது எழுத்துக்களும் முதலெழுத் துக்கள் எனப்படும்.

(i) உயிர் எழுத்துக்கள். அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என்பன.

(ii) மெய் எழுத்துக்கள்: க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் என்பன.

ந-சூ: 'உயிரும் உடம்பும்ஆம் முப்பதும் முதலே.' (2)

## 3. சார்பு எழுத்து

உயிர்மெய், ஆய்தம், உயிரளபெடை, ஒற்றளபெடை, குற்றியலுகரம், குற்றியலிகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக் குறுக்கம், மகரக்குறுக்கம், ஆய்தக் குறுக்கம் என்ற பத்தும் சார்பெழுத்துகள் ஆம்.

(i) உயிர்மெய் என்பது, உயிரும் மெய்யும் கூடிய எழுத்து.

(ii) ஆய்தம் என்பது, மூன்று புள்ளி வடிவாகிய எழுத்து.

(iii) உயிரளபெடை என்பது, நெட்டெழுத்துச் செய்யுட்களில் அளபெடுத்து (நீண்டு ஒலித்து) நிற்பது.

(iv) ஒற்றளபெடை என்பது, சில மெய்யெழுத்துச் செய்யுட்களில் நீண்டு ஒலிப்பது.

(v) குற்றியலுகரம் என்பது, குறுகிய ஒலியுடைய 'உ' என்ற எழுத்து

(vi) குற்றியலிகரம் என்பது, குறுகிய ஒலியுடைய 'இ' என்ற எழுத்து

(vii) ஐகாரக் குறுக்கம் என்பது, குறுகிய ஒலியுடைய 'ஐ' என்ற எழுத்து.

(viii-x) ஔகாரக் குறுக்கம், மகரக் குறுக்கம், ஆய்தக் குறுக்கம் என்பனவும் அவ்வாறே குறுகிய ஓசையை யுடையன எனக் காண்க.

நூ-கு 'உயிர்மெய் ஆய்தம் உயிரளபு ஒற்றளபு
அஃகிய இ உ ஐ ஔ மஃகான்
தனிநிலை பத்தும் சார்பெழுத்து ஆகும்.' (3)

## 4. குற்றியலுகரம்

சொல்லின் கடைசியில் வல்லின மெய்யின்மேல் ஏறி நிற்கும் உகரம் குற்றியலுகரம் எனப்படும். விடு, மடு—

என்பனபோல ஒரு குற்றெழுத்துக்குப் பின் வல்லினமெய் யின்மேல் ஏறி நிற்கும் உகரம் குற்றியலுகரம் ஆகாது.

குற்றியலுகரம் தனக்கு அயலில் உள்ள எழுத்தை நோக்கி ஆறு வகையாகப் பிரிக்கப்படும். அவை: நெடிற் றொடர், ஆய்தத்தொடர், உயிர்த்தொடர், வன்றொடர், மென்றொடர், இடைத்தொடர் என்பன.

**உதாரணம்:**

நெடிற்றொடர்க் குற்றியலுகரம்—நாகு, காசு, காடு, காது.

ஆய்தத்தொடர்க் குற்றியலுகரம்—எஃகு, கஃசு, பஃது, அஃது.

உயிர்த்தொடர்க் குற்றியலுகரம்—வரகு, பலாசு, பகடு, எருது.

வன்றொடர்க் குற்றியலுகரம்—கொக்கு, கச்சு, பட்டு, உப்பு.

மென்றொடர்க் குற்றியலுகரம்—சங்கு, பஞ்சு, கண்டு, பந்து

இடைத்தொடர்க் குற்றியலுகரம்—செய்து, மார்பு, மாழ்கு, தெள்கு.

## குற்றியலிகரம்

குற்றியலுகரம் நிலைமொழியாக நிற்க யகர மெய்யை முதலாகக்கொண்ட வருமொழி புணரும்போது அந்த உகரம் இகரமாக வேறுபடும். அது குற்றியலிகரம் ஆம். அன்றியும் 'மியா' என்ற அசைச்சொல்லின் மகரமெய்யின் மேல் ஏறி நிற்கும் இகரமும் குற்றியலிகரம் ஆகும்.

**உதாரணம்:**

நாகு + யாது = நாகியாது, வரகு + யாது = வரகியாது; கேண்மியா, சென்மியா.

### 5. மாத்திரை

**மாத்திரை என்பது ஒலியின் அளவைக் குறிப்பது:**

இயல்பாக ஒருமுறை கண் இமைக்கும் கால அளவு அல்லது ஒருமுறை கைநொடிக்கும் கால அளவு மாத்திரை எனப்படும்.

நெட்டெழுத்து இரண்டு மாத்திரையும், குற்றெழுத்து ஒரு மாத்திரையும் ஒலிக்கும். உயிர்மெய் எழுத்துக்கள் மெய்யின்மேல் ஏறிநின்ற உயிரின் அளவே ஒலிக்கும். உயிரளபெடை மூன்று மாத்திரை ஒலிக்கும். ஐகாரக் குறுக்கமும், ஔகாரக் குறுக்கமும் ஒற்றளபெடையும் ஒரு மாத்திரை ஒலிக்கும். மெய்யெழுத்து, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகியவை அரை மாத்திரை ஒலிக்கும். மகரக் குறுக்கமும், ஆய்தக் குறுக்கமும் கால் மாத்திரை ஒலிக்கும். அவ்வவ்வெழுத்துக்களை உச்சரித்துக் காண்க.

---

## உ. சொல்

### 1. பதமாவது யாது?

ஓர் எழுத்துத் தனித்து நின்றேனும் பல எழுத்துக்கள் தொடர்ந்து நின்றேனும் பொருளை யுணர்த்துவது **பதம்** ஆகும். (பதம் - சொல்).

### 2. ஓரெழுத் தொருமொழி

"பூ" என்பது ஓர் எழுத்து. இது மலர் என்னும் பொருளை யுணர்த்துகின்றது. இதுபோலவே ஆ, ஈ, கா, கை, போ, வா என்ற எழுத்துக்களும் தனித்து நின்று பொருளைத் தருகின்றன.

இவ்வாறு ஓர் எழுத்துத் தனித்து நின்று பொருளைத் தருமாயின் அது **ஓரெழுத்தொருமொழி** எனப்படும்.

## 3. பகாப்பதம்—பகுபதம்

மண், மரம், நட, வாள்—இப் பதங்களில் ஒன்றையும் பிரிக்க இயலாது. பிரித்தால் பொருள் தராது.

கூனி, கண்ணன், படித்தான், உண்டனன்—இவற்றை முறையே, கூன் + இ; கண் + அன்; படி + த் + த் + ஆன்; உண் + ட் + அன் + அன் எனப் பிரிக்கலாம். அவை பிரித்தாலும் பொருள் தரும்.

பகுதி விகுதி முதலிய உறுப்புக்களாகப் பிரிக்கப் படாத பதம் பகாப்பதம் எனவும், பிரிக்கப்படும் பதம் பகுபதம் எனவும் பெயர்பெறும். (பகா - பிரிக்கப்படாத) (பகு - பிரிக்கப்படுகின்ற).

## 4. பகுபத உறுப்புக்கள்

பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் என்ற ஆறும் பகுபத உறுப்புக்கள் ஆகும். அவற்றுள்,

**பகுதி** என்பது, சொல்லின் அடிப்படையாய் முதலில் நிற்பது.

**விகுதி** என்பது, சொல்லின் கடைசியில் நிற்பது.

**இடைநிலை** என்பது, பகுதி விகுதி ஆகிய இரண்டுக்கும் இடையில் நிற்பது.

**சாரியை** என்பது, சார்ந்து நிற்பது; அது பெரும்பாலும் விகுதிக்கு முன்னால் வரும்.

**சந்தி** என்பது, மேற்கூறிய நான்கும் சந்திக்கும்போது (கூடும்போது) தோன்றும் எழுத்து. இது பெரும்பாலும் பகுதிக்கும் இடைநிலைக்கும் இடையில் வரும்.

**விகாரம்** என்பது, பகுதி முதலிய உறுப்புக்களில் உள்ள எழுத்து வேறுபடுவது.

உதாரணம் :

படித்தான்—படி - பகுதி. ஆன் - விகுதி.
த் - இடைநிலை. த் - சந்தி.
ஓடினான்—ஓடு-பகுதி. அன்-விகுதி. இன்-
இடைநிலை. அன் - சாரியை.

இவ்வாறு பகுதி முதலியன பிரித்து உறுப்புக்களை அறிக.

நு - ரு 'பகுதி விகுதி இடைநிலை சாரியை
சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்' (4)

## 5. ஆகுபெயர்

'தாமரைபோன்ற முகம்'—இச் சொற்றொடரில் உள்ள தாமரை என்பது அதன் முதலுக்கு (கொடிக்கு) ஆகாமல் அதன் சினையாகிய பூவுக்கு ஆகிவந்தது.

ஒரு பொருள் அல்லது முதலின் பெயர் அதனோடு தொடர்பு உடைய உறுப்பிற்குப் பெயராக வருவது பொருளாகு பெயர் அல்லது முதலாகு பெயர் எனப்படும்.

"ஊர் உறங்கிற்று"—இச் சொற்றொடரில் உள்ள "ஊர்" என்ற இடப்பெயர் அவ்விடத்தில் வாழும் மக்களுக்கு ஆகிவந்தது.

' தாமரைபோன்ற முகம்" என்றால் தாமரைப் பூப்போன்ற முகம் என்றும், "ஊர் உறங்கிற்று" என்றால் ஊரில் உள்ள மக்கள் உறங்கினர் என்றும் பொருள் தோன்றுதல் காண்க.

ஒரு பொருளுக்கு இடப்பட்ட இயற்பெயர் அதனை யுணர்த்தாது அதற்கு உரிமையுடைய மற்றொரு பொருளுக்கு ஆகிவருவது ஆகுபெயர் ஆகும். அது பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில், அளவை, சொல், தானி, கருவி,

**காரியம்**, **கருத்தன்** முதலிய பெயர்களிலிருந்து தோன்றும் அது **பொருளாருபெயர்** முதலாகப் பலவகைப்படும். ஆகு பெயர் பழையகாலம் முதலாக வழங்கப்பட்டு வருவது ஆகும்.

ந - சூ : 'பொருள்முதல் ஆறோடு அளவைசொல் தானி
கருவி காரியம் கருத்தன் ஆதியுள்
ஒன்றன் பெயரான் அதற்குஇயை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன ஆகு பெயரே.' (5)

## 6. தொழிற் பெயர் விகுதிகள்

உலகத்தில் உள்ள பலவகை உயிர்ப்பொருள்கள் செய்யும் தொழிலைக் காட்டும் பெயர் **தொழிற்பெயர்** எனப் படும். இப்பெயர்க்கு வரும் விகுதிகள் பல.

**உதாரணம்:**

நட + **தல்** = நடத்தல், உண் + அல் = உண்ணல், ஓடு + அம் = ஓட்டம், கொல் + ஐ = கொலை, நட + **கை** = நடக்கை, பார் + **வை** = பார்வை, போ + கு = போக்கு, நினை + **பு** = நினைப்பு, பணி + உ = பணிவு, மற + **தி** = மறதி, உணர் + சி = உணர்ச்சி, மற + **வி** = மறவி, விக்கு + உள் = விக்குள், நோ + **காடு** = நோக்காடு, கோள் + **பாடு** = கோட்பாடு, தோன்று + அரவு = தோற்றரவு, வா + **ஆனை** = வாரானை, பொறு + **மை** = பொறுமை, உண் + ப + **து** = உண்பது ஆகிய எல்லாம் தொழிற் பெயர்களாம். கடைசியிற் பிரித்துக் காட்டியவை விகுதிகள் ஆகும்.

தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, உள், காடு, பாடு, அரவு, ஆனை, மை, து என்ற பத்தொன்பதும் **தொழிற்பெயர் விகுதிகள்** என்று சொல்லப்படும்.

## 7. பண்புப்பெயர் விதிகள்

குணத்தை யுணர்த்தும் பெயர்கள் பண்புப் பெயர்கள் என்று கூறப்படும். செம்+மை=செம்மை, சிறு+மை=சிறுமை எனப் பெரும்பாலும் மை விகுதியே பெற்று நிற்கும்.

உதாரணம் :

தொல்+லை=தொல்லை, மாண்+சி=மாட்சி, மாண்+பு=மாண்பு, குழ+உ=குழவு, நல்+கு=நன்கு, நல்+றி=நன்றி, நல்+று=நன்று, நல்+அம்=நலம், நல்+நர்=நன்னர் எனச் சிறுபான்மை இவ் விகுதிகளையும் பெற்று நிற்கும்.

மை, ஐ, சி, பு, உ, கு, றி, று, அம், நர்—இவைகள் பண்புப்பெயர் விகுதிகள் என்று கூறப்படும்.

## 8. முதனிலைத் தொழிற் பெயர்

முதனிலை என்பது பகுதி.

அடிபட்டான், உதைபட்டான், பற்றுவிட்டான், உரைசெய்தான், குத்துண்டான்—இச் சொற்றொடர்களில் முதலில் நிற்கும் அடி, உதை, பற்று, உரை, குத்து என்ற சொற்கள் தொழிற்பெயர்களின் முதனிலைகள். இவை விகுதியின்றி நின்றன. அடித்தல், உதைத்தல் என விகுதியைச் சேர்த்தால் இவை விகுதிபெற்ற தொழிற்பெயர் ஆவது காண்க.

இவ்வாறு, அடி, உதை, பற்று, உரை, குத்து என முதனிலைமட்டும் நின்று தொழிற்பெயர்ப் பொருளை யுணர்த்துவன முதனிலைத் தொழிற்பெயர்கள் எனப்படும்.

## 9. முதனிலை திரிந்த தொழிற்பெயர்

உண்ணுதல், பெறுதல், கெடுதல், விடுதல், கொள்ளுதல் ஆகியவை தொழிற்பெயர்கள். இவைகளின் முதனிலை

உண், பெறு, கெடு, விடு, கொள் என்பன. உண் என்பது முதனிலை ஊண் எனவும், பெறு என்பது பேறு எனவும், கெடு என்பது கேடு எனவும், விடு என்பது வீடு எனவும், கொள் என்பது கோள் எனவும் வேறுபட்டும் வரும். அவை **முதனிலை திரிந்த தொழிற்பெயர்கள்** எனப்படும்.

**ஊண், பேறு, கேடு, வீடு, கோள்** இவை போல்வன **முதனிலை திரிந்த தொழிற்பெயர்**களாம்.

## 10. வினையாலணையும் பெயர்

'கண்ணன் உண்டான்' என்ற சொற்றொடரில் கண்ணன் என்பது பெயர்; உண்டான் என்பது வினைமுற்று. உண்ட கண்ணன் உறங்குகிறான். **உண்டவன** உறங்கினான் என்று கண்ணனுக்கு "உண்டவன்" எனப் பெயரிட்டு உறங்கினான் என்று முடிக்கின்றோம். பின் அவன் எழுகின்றான். **உறங்கினவன்** எழுந்தான் என்கின்றோம். 'கருடன் பறந்தது'. இதில் பறந்தது என்பது வினைமுற்று. **பறந்தது** மறைந்தது—இதில் பறந்தது என்பது பெயர், மறைந்தது என்பது வினைமுற்று **மறைந்தது** வெளிப்பட்டது என்ற போது மறைந்தது என்பது பெயர், வெளிப்பட்டது என்பது வினைமுற்று.

இவ்வாறே ஒரு வினைமுற்று, பெயர் ஆகி, மற்றொரு வினைமுற்றைக்கொண்டு முடியும்போது அது **வினையாலணையும் பெயர்** எனப்படும். அது வேற்றுமையுருபுகளையும் ஏற்கும்.

**உண்டவன்** உறங்கினான், **உறங்கினவன்** எழுந்தான், **பறந்தது** மறைந்தது, **மறைந்தது** வெளிப்பட்டது—இவற்றுள், உண்டவன், உறங்கினவன், பறந்தது, மறைந்தது என்பவை **வினையாலணையும் பெயர்கள்** எனக் காண்க.

வினையால் அணையும் பெயர் என்பது வேறு; வினைப் பெயர் என்பது வேறு. **வினைப்பெயர்** - தொழிற்பெயர். **வினையால் அணையும் பெயர்** - தொழிலால் ஒரு பொருளுக்கு இடப்படும் பெயர்.

## 11. தொழிற்பெயர்க்கும் வினையாலணையும் பெயர்க்கும் வேறுபாடு

ஆடல், பாடல், கூடுதல், உண்ணல், உறங்கல்: தொழிற் பெயர்கள். ஆடியவன், பாடியவள், கூடியவர், உண்டவன், உறங்கியவன் : வினையாலணையும் பெயர்கள்.

ஆடல் என்பது ஒருவன் செய்யும் தொழிலை யுணர்த்துகிறது. ஆடியவன் என்பது தொழில் செய்த ஒருவனை யுணர்த்துகிறது. மற்றவைகளும் இவ்வாறே யுணர்த்தும்.

ஒரு தொழிலுக்குப் பெயராய் வருவது தொழிற்பெயர் எனவும், தொழில் செய்வோர்க்குப் பெயராய் வருவது வினையாலணையும் பெயர் எனவும் வேறுபாடு காண்க.

## 12. வேற்றுமை

### (1) முதல் வேற்றுமை

கண்ணன் வந்தான். கண்ணன் என்ற பெயர், வந்தான் என்ற வினைமுற்றைக் கொண்டு முடிந்தது.

கண்ணன் அவன். இது அவன் என்ற பெயரைக் கொண்டு முடிந்தது.

கண்ணன் எவன்? இது எவன் என்னும் வினாவைக் கொண்டு முடிந்தது.

இவ்வாறு ஒரு பெயர் வேறுபடாமல் நின்று வினைமுற்றையாவது, பெயரையாவது, வினாவையாவது கொண்டு முடியும். இவ்வாறு எழுவாயாக நிற்கும் பெயர் **முதல் வேற்றுமை** எனப்படும். அது **எழுவாய் வேற்றுமை** என்றும் சொல்லப்படும்.

நூ-சூ: 'எழுவாய் உருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினாக்கொளல் அதன்பய னிலையே.' (6)

### (ii) இரண்டாம் வேற்றுமை

இரண்டாம் வேற்றுமையின் உருபு 'ஐ' என்பது. ஆக்கல், அழித்தல், அடைதல், நீத்தல், ஒத்தல், உடைமை என்னும் ஆறும் இதன் பொருள் ஆகும்.

கோயில் + ஐ = கோயிலைக் கட்டினான். இதில் 'கோயில்' ஆக்கப்படு பொருள்

கோட்டை + ஐ = கோட்டையை இடித்தான். இதில் 'கோட்டை' அழிக்கப்படு பொருள்.

ஊர் + ஐ = ஊரையடைந்தான். இதில் 'ஊர்' அடையப்படுபொருள்.

வாழ்வு + ஐ = வாழ்வைத் துறந்தான். இதில் 'வாழ்வு' நீக்கப்படுபொருள்.

புலி + ஐ = புலியை யொத்தான். இதில் 'புலி' ஒக்கப்படு பொருள்.

பொன் + ஐ = பொன்னை யுடையான். 'பொன்' உடைமைப்பொருள்.

இவ்வாறு பெயரில் "ஐ" என்னும் உருபு சேர்ந்து செயப்படுபொருளாக வேறுபடுத்துவது இரண்டாம் வேற்றுமையாம்.

நூ - சூ : 'இரண்டா வதன் உருபு ஐயே அதன்பொருள்
ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல்
ஒத்தல் உடைமை ஆதி யாகும்' (7)

### (iii) மூன்றும் வேற்றுமை

மூன்றும் வேற்றுமையின் உருபுகள் ஆல், ஆன், ஒடு, ஓடு என்பன.

கருவி, கருத்தா, உடனிகழ்ச்சி என்பன அதன் பொருளாகும்.

ஆல், ஆன் என்பன கருவி கருத்தாப் பொருளையும், ஒடு, ஓடு என்பன உடனிகழ்ச்சிப் பொருளையும் உணர்த்தும்.

வாள் + ஆல் = வாளால் வெட்டினன் } கருவிப் பொருள்.
வாள் + ஆன் = வாளான் வெட்டினன் }

அரசன் + ஆல் = அரசனாற் கோயில் கட்டப்பட்டது } கருத்தாப் பொருள்.
அரசன் + ஆன் = அரசனாற் கோயில் கட்டப்பட்டது }

ஆசிரியன் — ஒடு = ஆசிரியனொடு மாணாக்கன் வந்தான் } உடனிகழ்ச்சிப் பொருள்.
ஆசிரியன் + ஓடு = ஆசிரியனோடு மாணாக்கன் வந்தான் }

ந - சூ : 'மூன்று வதனுருபு ஆல்ஆன் ஒடுஓடு
கருவி கருத்தா உடனிகழ்வு அதன்பொருள்." (8)

## (IV) நான்காம் வேற்றுமை

ஏழை + கு = ஏழைக்குக் கொடுத்தான். இதில் 'கு' என்ற உருபு நின்று கொடைப் பொருளை யுணர்த்திற்று.

பாம்பு + கு = பாம்புக்குப் பகை கருடன். பகைப் பொருள்.

இராமன் + கு = இராமனுக்கு நண்பன் குகன். நட்புப் பொருள்.

அரசர் + கு = அரசர்க்குத் தக்கது அணி. தகுதியுடைய பொருள்.

ஆடை + கு = ஆடைக்கு நூல் வாங்கினன். முதற் காரணகாரியப் பொருள்.

கூலி + கு = கூலிக்கு வேலை செய்தான். நிமித்த காரண காரியப் பொருள்.

தருமன் + கு = தருமனுக்குத் தம்பி வீமன். முறைப் பொருள்.

இவ்வாறு 'கு' என்ற உருபு நின்று கொடை, பகை, நட்பு, தகுதி, முதற்காரணம், நிமித்தகாரணம், முறை என்னும் பொருளைத் தந்தால் அது நான்காம் வேற்றுமையாம்.

ந - சூ: 'நான்கா வதற்கு உருபு ஆகும் குவ்வே
கொடை பகை நேர்ச்சி தகவுஅது ஆதல்
பொருட்டுமுறை ஆதியின் இதற்குஇது எனல்
பொருளே.' (9)

## (v) ஐந்தாம் வேற்றுமை

| | |
|---|---|
| மலை + இல் = மலையில் வீழ் அருவி<br>மலை + இன் = மலையின் வீழ் அருவி | மலையிலிருந்து அருவி நீங்குவதால் நீக்கப் பொருள் |
| காக்கை + இல் = காக்கையிற் கரியது களாம்பழம்<br>பால் + இன் = பாலின் வெளிது கொக்கு | காக்கையைப்போல, பாலைப்போல என்று பொருள் தருவதால் ஒப்புப்பொருள் |
| மதுரை + இல் = மதுரையில் வடக்குத் தில்லை<br>மதுரை + இன் = மதுரையின் வடக்குத் தில்லை | எல்லை காட்டுவதால் எல்லைப்பொருள் |
| கல்வி + இல் = கல்வியிற் பெரியன் கம்பன்<br>கல்வி + இன் = கல்வியிற் பெரியன் கம்பன் | கல்வி காரணமாகக் கம்பன் பெரியன் என்று கூறுவதால் ஏதுப் பொருள். |

இவ்வாறு இல், இன் என்ற உருபுகள் வந்து, நீங்கல், ஒப்பு, எல்லை, ஏது என்ற பொருளை யுணர்த்துவது ஐந்தாம் வேற்றுமையாம்.

ந - சூ: 'ஐந்தா வதன்உருபு இல்லும் இன்னும்
நீங்கல்ஒப்பு எல்லை ஏதுப் பொருளே.' (10)

## (VI) ஆறும் வேற்றுமை

ஆறும் வேற்றுமைக்கு, அது, ஆது, அ என்பன உருபுகள். உடைய என்பது சொல் உருபு. இவற்றுள், அது, ஆது என்னும் இரண்டும் ஒருமையிலும், அ என்பது பன்மையிலும் வரும். உடைய என்பது இரண்டுக்கும் பொதுவாக வரும்.

இவ்வேற்றுமையின் பொருள் கிழமைப்பொருள். அது தற்கிழமை, பிறிதின்கிழமை என இரண்டு வகைப்படும்.

தற்கிழமைப் பொருள் என்பது தன்னோடு ஒற்றுமை யுடையது. வேறாகப் பிரிக்கப்படாதது. எனது கை; சிறுவனது முகம்; பசுவினது வால்—இவை பிரிக்கப் படாதன. பிறிதின்கிழமை என்பது தன்னின் வேறாக இருப்பது. கண்ணனது புத்தகம், சிறுவனது குடை, முருகனது வேல்—இவை தன்னின் வேறாகப் பிரிக்கப் படுபவை.

தற்கிழமை ஐந்து வகைப்படும்; அவை: பண்பு, உறுப்பு, ஒன்றன் கூட்டம், பலவின் கூட்டம், (திரிபின் ஆக்கம்) ஒன்று திரிந்து ஒன்றாதல் என்பன.

1. முருகன் + அது = முருகனது வெற்றி. இது பண்பு
2. முருகன் + அது = முருகனது தலை. உறுப்பு
3. மக்கள் + அது = மக்களது கூட்டம். ஒன்றன் கூட்டம்
4. விலங்கு + இன் + அது = விலங்கினது தொகுதி. பலவின் கூட்டம்
5. நெல் + அது = நெல்லது பொரி. ஒன்று வேறுபட்டு மற்றொரு பொருளாயது.

} தற்கிழமை

பிறிதின்கிழமை மூன்று வகைப்படும்; அவை: பொருள், இடம், காலம் என்பன.

1. முருகன் + அது = முருகனது வேல். பொருள்
2. முருகன் + அது = முருகனது நிலம். இடம்
3. முருகன் + அது = முருகனது பிறந்த நாள். காலம்

} பிறிதின் கிழமை

தன் + ஆது = தனாது மனை
நின் + ஆது = நினாது தலை
} — ஆது உருபு

நின் + அ = நின தாள்கள்
என் + அ = என கைகள்
} — அ உருபு

ந - சூ: 'ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்
பன்மைக்கு அவ்வும் உருபாம் பண்பு உறுப்பு
ஒன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்
திரிபின் ஆக்கம் ஆம்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.' (11)

## (vii) ஏழாம் வேற்றுமை

ஏழாம் வேற்றுமையின் உருபு இல், இடம், கண் முதலியன. அதன் பொருள் இடப்பொருள்.

இடப்பொருள் தற்கிழமை, பிறிதின்கிழமை என இரண்டு வகைப்படும். பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற ஆறும் தற்கிழமை இடப்பொருளிலும், பிறிதின்கிழமை இடப்பொருளிலும் வரும்.

**உதாரணம்:**

1. மணியின்கண் உள்ளது ஒளி—தற்கிழமை
மரத்தின்கண் உள்ளது கிளி—பிறிதின்கிழமை
பொருள் இடமாயிற்று.

2. ஊரின்கண் உள்ளது வீடு—தற்கிழமை
தொழுவத்தின்கண் உள்ளது மாடு—பிறிதின் கிழமை
இடம் இடமாயிற்று.

3. ஆண்டின்கண் உள்ளது திங்கள்—தற்கிழமை
காரின்கண் கொன்றை மலரும்—பிறிதின்கிழமை
காலம் இடமாயிற்று.

4. கையின்கண் உள்ளது விரல்—தற்கிழமை
தோளின்கண் உள்ளது மாலை—பிறிதின்கிழமை
சினை இடமாயிற்று.

5. செம்மையின்கண் உள்ளது அறம்—தற்கிழமை
இளமையின்கண் சேர்ந்தது செல்வம்—பிறிதின் கிழமை
குணம் இடமாயிற்று.

6. ஓடுதலின்கண் உள்ளது விரைவு—தற்கிழமை
ஆடலின்கண் அமைந்தது பாட்டு—பிறிதின் கிழமை
தொழில் இடமாயிற்று.

ந - சூ: 'ஏழன் உருபுகண் ஆதி ஆகும்
பொருள்முதல் ஆறும் ஓர்இரு கிழமையின்
இடனாய் நிற்றல் இதன்பொருள் என்ப.' (12)

## (VIII) எட்டாம் வேற்றுமை

குழந்தாய்! வா. இதில் குழந்தை என்ற பெயர் குழந்தாய் என ஈறு வேறுபட்டு அழைப்புப்பொருளைத் தந்தது.

மன்ன! வா. மன்னன் ஈறுகுறைந்து நின்றது.

மன்னன் + ஏ = மன்னனே! வா. ஈற்றில் ஓர் எழுத்து மிக்கது.

மன்னன்! வா. இயல்பாய் நின்றது.

மக்காள் வாருங்கள்! ஈற்றயலெழுத்து வேறுபட்டது.

இவ்வாறு பெயர்ஈறு வேறுபட்டும், குறைந்தும் மிகுந்தும், இயல்பாக நின்றும் ஈற்றுக்கு அயலெழுத்து வேறுபட்டும் அழைப்புப்பொருள் தந்தால் அது **எட்டாம் வேற்றுமையாம்.**

ந - சூ: 'எட்டன் உருபே எய்துபெயர் ஈற்றின்
திரிபு குன்றல் மிகுதல் இயல்புஅயல்
திரியும் ஆம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முகம் ஆகத் தான்அழைப் பதுவே.' (13)

## 13. வினைச்சொல் இலக்கணம்

கொடி ஆடுகிறது.
குதிரை கனைத்தது.
வண்டு பறந்தது.

இவைகளில், கொடி, குதிரை, வண்டு என்பன பெயர்ச் சொற்கள். ஆடுகிறது, கனைத்தது, பறந்தது என்பன அவற்றின் தொழிலை உணர்த்துகின்ற சொற்கள்.

இவ்வாறு ஒரு தொழில் நிகழ்வதைக் குறிக்கும் சொல் வினைச்சொல் எனப்படும். **செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படுபொருள்** என்ற ஆறும் வினைச் சொல்லில் புலப்படும்.

**உண்டான்**—இதில் உண்டவன் ஒருவன் எனச் செய்பவன் தோன்றிற்று. உண்ணுதற்குக் கருவியாகிய கை, வாய், உண்கலம் இவைகளும் தோன்றின. உண்ணும் இடம் ஒன்று உண்டு என நிலம் தோன்றிற்று. உண்ணல் என்ற தொழில் நிகழ்ந்தது எனச் செயல் தோன்றிற்று. இறந்தகாலம் தோன்றிற்று. உண்ணப்பட்டது சோறு எனச் செயப்படுபொருளும் தோன்றியது.

இவ்வாறும் வெளிப்படையாகத் தோன்றும் வினைச் சொல் தெரிநிலை வினைச்சொல் ஆகும்.

செய்பவன் முதலிய ஆறும் பெறாது சில வினைச் சொற்கள் செயப்படுபொருள் முதலியன குறைந்தும் வரும்

ந - சூ: 'செய்பவன் கருவி நிலம்செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே.' (14)

## 14. தெரிநிலை வினைமுற்று

கண்ணன் உண்டான்.
மாடு மேய்ந்தது.
மாணவன் படித்தான்.

இவற்றில், உண்டான், மேய்ந்தது, படித்தான் என்ற வினைச்சொற்கள் காலமும் தொழிலும் வெளிப்படையாகத் தெரியும்படி வந்தன. இவ்வினைச் சொற்கள் பொருள் முடிந்தும் நிற்கின்றன. ஆகவே இவை தெரிநிலை வினை முற்றுக்கள் எனப்படும்.

## 15. குறிப்பு வினைமுற்று

சாத்தன் பொனனன். இதில் சாத்தன் முன் பொன்னை யுடையவனாயிருந்தானெ, இருக்கின்றான், இருப்பான் எனக் குறிப்பாக வினை தோன்றுகிறது. பொன் என்ற பொருட் பெயர் அடியாகத் தோன்றியது இது. ஊரன், ஆதிரை யான், கண்ணன், சினத்தன், ஆடலன் என்பன முறையே இடம், காலம், உறுப்பு, குணம், தொழில் என்ற பெயர்களை அடிப்படையாகக்கொண்டு தோன்றின.

இவ்வாறு பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற அறுவகைப் பெயர்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றிச் செய்பவனை (வினைமுதலை) மட்டும் வெளிப்படையாகக் காட்டுவது குறிப்பு வினைமுற்று ஆம்.

நூ - சூ. 'பொருள்முதல் ஆறினும் தோற்றிமுன் ஆறனுள் வினைமுதல் மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே.' (15)

## 16. செய்யும் என்னும் வினைமுற்று

சாத்தன் உண்ணும்: இதில் உண்ணும் என்ற வினை முற்று உண்பான் எனப்பொருள் பட்டு ஆண்பாலையுணர்த்தியது.

சாத்தி உண்ணும்: உண்பாள் எனப் பொருள்பட்டுப் பெண்பாலை யுணர்த்தியது.

மாடு தின்னும்: இதில் தின்னும் என்பது தின்னுகிறது எனப் பொருள்பட்டு அஃறிணை யொன்றன்பாலை யுணர்த்தியது

மாடுகள் தின்னும்: தின்கின்றன, தின்பன எனப் பொருள் தந்து பலவின்பாலை யுணர்த்தியது.

உண்ணும், தின்னும் என்பனபோல வரும் வினைமுற்றுக்கள் செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்கள். இவ் வினைமுற்று தன்மைக்கும், முன்னிலைக்கும், பலர்பாற் படர்க்கைக்கும் வராது.

ந - சூ: 'பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்
செல்லாது ஆகும் செய்யுமென் முற்றே.' (16)

## 17. இடைச்சொல் இலக்கணம்

வேற்றுமையுருபு, வினைவிகுதி, சாரியை, உவமையுருபு, தமக்கென்று பொருளுடைய சில சொற்கள், இசைநிறை, அசைநிலை, குறிப்பாற் பொருளுணர்த்துவன என இடைச்சொல் எட்டுவகையாகப் பிரிக்கப்படும். அவை பெயர்ச்சொல், வினைச்சொற்களின் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் ஆக வந்து நிற்கும். பெயரும் ஆகாமல் வினையும் ஆகாமல் நடுநிலையாகிய ஒரு சொல் ஆதலால் இடைச்சொல் எனப் பெயர்பெற்றது.

உதாரணம்:

(1) வேற்றுமை யுருபுகள் ஐ, ஆல், கு, இன், அது, கண் இவை போல்வன.

(2) வினைவிகுதிகள் அன், ஆள், அர், ஆர் முதலியவைகள்.

(3) சாரியைகள் அன், ஆன், இன், அல், அற்று, இற்று முதலியவை.

(4) உவமையுருபுகள் போல, புரைய, அன்ன, இன்ன இவை போல்வன.

(5) தமக்கெனப் பொருள் உடையவை, ஏ, ஓ, உம், கொல் முதலியவை.

(6) செய்யுளில் ஓசையை நிறைப்பதற்காக வருவன இசைநிறை.

(7) செய்யுளின் ஈற்றில் அசையாக நிற்பன அசைநிலை.

(8) ஐயோ! அவன் இறந்துவிட்டான். 'ஐயோ' இரக்கக் குறிப்பு இடைச்சொல்.

ஆ! ஆ! என்ன அழகு. இதில் ஆ ஆ என்பது வியப்புக் குறிப்பு

ஓ ஓ பெரியன். ஓ ஓ என்பது புகழ்ச்சிக் குறிப்பு.

சீ சீ கொடியன். சீ சீ என்பது இகழ்ச்சிக் குறிப்பு.

இவ்வாறு குறிப்புக் காட்டுவனவெல்லாம் குறிப்புப் பொருளைத் தரும் இடைச்சொல்.

## 18. ஏ, ஓ, உம், கொல் இடைச்சொற்கள்

### (1) ஏகார இடைச்சொல்

**உதாரணம்:**

இவன் + ஏ = இவனே கள்வன். பலருள் ஒருவனைப் பிரித்துக் காட்டுவதற்காக "ஏ" வந்தது —**பிரிநிலை**

சாத்தன் + ஏ = சாத்தனே கொண்டான் என்பதில் 'ஏ' வினாப்பொருளைத் தந்ததால், —**வினா**

நிலனே, நீரே, தீயே, வளியே, வானே எனப் பூதங்கள் ஐந்து. இதில் நிலமும், நீரும், தீயும், வளியும், வானும் என ஏகாரம் எண்ணுப் பொருளில் வந்தது. —**எண்**

"அண்ணே! அடியேன் இடரைக் களையாயே." களையாய்+ஏ. இதில் ஏகாரம் பாட்டின் இறுதியில் பொருளின்றி அசையாய் நின்றது. —ஈற்றசை

நானே செய்தேன், நான்+ஏ, இதில் ஏகாரம் நான்தான் செய்தேன் எனத் துணிவுப் பொருளை யுணர்த்திற்று. —தேற்றம்

'ஏ ஏ இவள் ஒருத்தி பேடியோ என்றார்.' இதில் முதலில் நின்ற ஏ, ஏ என்ற எழுத்துக்கள் பாட்டின் இசையை நிறைப்பதற்காக நின்றன. —இசைநிறை

ஏகார இடைச்சொல். பிரிநிலை, வினா, எண், ஈற்றசை, தேற்றம், இசைநிறை என்ற ஆறு பொருளைக் காட்டி வரும்.

ந - சூ: 'பிரிநிலை வினாஎண் ஈற்றசை தேற்றம்
இசைநிறை யெனஆறு ஏகா ரம்மே." (17)

(ii) ஓகார இடைச்சொல்

**உதாரணம்:**

படிக்கவோ வந்தான் அவன். படிக்க+ஓ: இந்த ஓகாரம் படிப்பதற்கு வந்தவன் அல்லன், விளையாட வந்தவன் போலத் தெரிகிறது என்று ஒழிந்த சொற் பொருளைத் தருகின்றது. —ஒழியிசை

நாளை நீ வருவாயோ? வருவாய்+ஓ: வினாப் பொருள் தந்தது. —வினா

ஓ ஓ பெரியன், ஓ ஓ கொடியன்! இதில் ஓகா ரங்கள் முறையே உயர்வையும் இழிவையும் சிறப்பித்து நின்றன. —சிறப்பு

நானோ எடுத்தேன்? நான்+ஓ: நான் எடுத்திலேன் என எதிர்மறைப் பொருளைத் தருகின்றது. —எதிர்மறை

ஆமோ, பெண்ணோ, அலியோ என்று காண முடியாத கடவுள்! இதில் நின்ற ஓகாரங்கள் வெளிப்படையாகப் பொருளைத் தெரிவித்து நிற்கின்றன.

—தெரிநிலை

"ஓ ஓ தமக்கு ஓர் உறுதியுணரார்ரோ!" ஓகாரங்கள் கெட்டுப்போன மனிதர்களைக் குறித்து இரங்குதற் பொருளில் வந்தது.

—கழிவு

"காணியவாரியேரோ." வாரியின் + ஓ: இது பாட்டின் ஈற்றில் பொருள் இன்றி அசையாய் நின்றது.—அசைநிலை

இவனோ அப்பொருளைக் கவர்ந்தான். இவன் + ஓ: இது பலருள் நின்ற ஒருவனைப் பிரித்துக் காட்ட வந்தது.

—பிரிநிலை

இவ்வாறு ஒழியிசை, வினா, சிறப்பு, எதிர்மறை தெரிநிலை, கழிநிலை, அசைநிலை, பிரிநிலை என்ற எட்டு வகையான பொருளில் ஓகார இடைச்சொல் வரும்.

நூ: 'ஒழியிசை வினாச்சிறப்பு எதிர்மறை தெரிநிலை
கழிவுஅசை நிலைபிரிப்பு எனஎட்டு ஓவே.' (18)

(iii) உம் இடைச்சொல்

உதாரணம் :

'நான்மறக்கினும் சொல்லும்நா நமச்சிவாயவே'—மறக்கின் + உம்: இது நான் மறக்கமாட்டேன் என எதிர்மறைப் பொருளைத் தந்தது.

—எதிர்மறை

குறவரும் ஏறாத குன்றம். மலையேறிப் பழகிய குறவரும் ஏறப்படாத உயர்வுடைய குன்றம் என உயர்வு தோன்றியதால் உயர்வு சிறப்பு.

புலையனும் விரும்பாத உடம்பு. ஊன் எல்லாவற்றையும் தின்னும் புலையனும் இவ் வுடம்பைத் தின்ன விரும்பமாட்டான், என உடம்பின் இழிவு தோன்றியதால் இழிவு சிறப்பு.

இவ் விரண்டும் சிறப்பு ஆகும்.

இது, பளிங்காகவும் இருக்கலாம் வைரமாகவும் இருக்கலாம். இதில் இரண்டில் ஒன்றைத் துணிந்து கூற இயலாது என ஐயம் தோன்றுகிறது. —ஐயம்

சீதையைக் காணுமல் இராமனும் வருந்தினன். இச் சொற்றொடர் இலக்குமணனும் வருந்தினன் முதலில் எனப் பொருள் தந்தால் இறந்தது தழீஇய எச்சம் ஆம். இனி இலக்குமணனும் வருந்துவான் எனப் பொருள் தந்தால் எதிரது தழீஇய எச்சம் ஆம். இவ் விரண்டும், —எச்சம்

இந்த மாட்டிற்கு நான்கு கால்களும் ஒடிந்தன.
—முற்று

பாலும் பழமும் தேனும் கொண்டு வந்தான். மூன்று என எண்ணுவதற்கு வந்தது —எண்

இவ்வுருவம் ஆணும் அன்று பெண்ணும் அன்று. இதில் அலி என்பது தெரிய நின்றது. —தெரிநிலை

நெல் முளைத்துப் பயிரும் ஆயிற்று. ஆக்கப் பொருளைத் தந்தது. —ஆக்கம்

இவ்வாறு எதிர்மறை, சிறப்பு, ஐயம், எச்சம், முற்று, எண், தெரிநிலை, ஆக்கம் என்ற எட்டுப் பொருளிலும் உம் இடைச்சொல் வரும்.

ந - சூ : 'எதிர்மறை சிறப்புஐயம் எச்சமுற்று அளவை
தெரிநிலை ஆக்கமோடு உம்மை எட்டே.' (19)

(IV) "கொல்" இடைச்சொல்

அவன் பொய்யன் கொல், மெய்யன் கொல். இது பொய்யனே மெய்யனே எனப் பொருள் தந்தது.
—ஐயம்

கற்றதனால் ஆய பயன் என் கொல். இது பொருளின்றி அசையாய் நின்றது. —அசைநிலை

இவ்வாறு "கொல்" என்ற இடைச் சொல் ஐயம் அசைநிலையாகிய இரண்டு பொருளில் வரும்.

ந - சூ: 'கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே.' (20)

## 19. உரிச்சொல் இலக்கணம்

உரிச்சொல் என்பது குணப்பண்பு, தொழிற்பண்பு என்ற இரண்டினையும் காட்டும் சொல். அது ஒரு பண்பை யுணர்த்தும்; அல்லது பல பண்புகளையும் உணர்த்தும்; பெயர்ச்சொல், வினைச்சொல்லை விட்டு நீங்காம லிருக்கும்; செய்யுட்கு உரிமையுடையதாகும்.

## 20. ஒருகுணந் தழுவிய உரிச்சொல்

**உதாரணம் :**

"காமுறுவர் சாலப் பலர்." இதில் "சால" என்பது மிகுதி என்ற பொருளைத் தந்தது.

"உறுவளி தூக்கும்." இதில் "உறு" என்பதும் மிகுதி என்ற பொருளைத் தந்தது. (உறுவளி = மிகுந்த காற்று.)

"தவச் சேய் நாட்டார் ஆயினும்." "தவ" என்பதும் அப்பொருளையே தந்தது. (தவச்சேய் நாட்டார் = மிகவும் தூரத்தில் உள்ள நாட்டில் உள்ளவர்.)

"நனி பேதையே நயனில் கூற்றம்." நனி என்பதும் அப்பொருளையே தந்தது. (நனிபேதையே = மிகவும் அறியாமையுடையாய்.)

"நோய் கூரப் புல்லென்றிசினே." "கூர" என்பதும் அப்பொருளையே தந்தது. (நோய்கூர = நோய் மிகுதியாக.)

"கழி கண்ணோட்டம்." "கழி" என்பதும் அப்பொருளையே தந்தது (கழி கண்ணோட்டம் = மிகுந்த தாட்சணியம்.)

மேற்காட்டிய கவிகளில் வந்துள்ள 'சால' என்பதும், 'உறு' என்பதும், 'தவ' என்பதும், 'நனி' என்பதும், 'கூர' என்பதும், 'கழி' என்பதும் மிகுதி என்ற ஒரு பொருளைத் தந்தன. ஆதலால் இவைகள் ஒரு குணம் தழுவிய உரிச்சொற்களாம்.

ந - சூ: 'சால உறுதவ நனிகூர் கழிமிகல்.' (21)

## 21. பலகுணம் தழுவிய உரிச்சொல்

**உதாரணம் :**

கடிநகர் —காவலையுடைய நகர் (கடி - காவல்)

கடி நுனைப் பகழி —கூர்மையான முனையையுடைய பகழி (கடி - கூர்மை)

கடிமாலை சூடி —மணம் பொருந்திய மாலை சூடி (கடி - மணம்)

கண்ணாடியன்ன கடிமார்பன் —கண்ணாடி போன்ற விளக்கமான மார்புடையவன் (கடி - விளக்கம்)

கடி அரமகளிர் —அச்சத்தைத் தரும் தெய்வப் பெண்கள் (கடி - அச்சம்)

கடிமாமிசைப் பூத்து —சிறப்பாகிய மாமரத்தின் மேல் பூத்து (கடி - சிறப்பு)

எம் அம்பு கடி விடுதும் —எம் அம்பை விரைவாக விடுவோம் (கடி - விரைவு)

கடி ஊண் —மிகுதியான உணவு (கடி - மிகுதி)

கடி மணம் —புதுமையாகிய திருமணம் (கடி - புதுமை)

கடி முரசு —ஒலிக்கின்ற முரசு
(கடி - ஒலி)

கடி என்றார் —நீக்கு என்று கூறினர்
(கடி - நீக்கு)

கடி வினை —மன்றல் ஆகிய தொழில்
(கடி - மன்றல்)

கடி மிளகு தின்ற —காரமாகிய மிளகைத் தின்ற
(கடி - கார்ப்பு)

மேற்காட்டிய செய்யுள் அடிகளில் கடி என்பது பல பொருளில் வந்திருப்பதால் பல குணம் தழுவிய உரிச்சொல் எனக் காண்க.

நூ - ரூ: 'கடிஎன் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்கம் அச்சம் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை ஆர்த்தல்
வரைவே மன்றல் கரிப்பின் ஆகும்.' (22)

(விரை - மணம்.) (ஆர்த்தல் - ஒலித்தல்.) (வரைவு - நீக்கம்.) (மன்றல் - கலியாணம்.)

---

# ௩. பொது

## 1. வழக்கு

சொற்களை வழங்கவேண்டிய முறைப்படி வழங்குதல் வழக்கு எனப்படும். அது இயல்பு வழக்கு, தகுதி வழக்கு என இருவகைப்படும்.

## 2. இயல்பு வழக்கு—தகுதி வழக்கு

### (i) இயல்பு வழக்கு

**இயல்பு வழக்கு என்பது இலக்கணம் உடையது, இலக்கணப்போலி, மரூஉ என மூவகைப்படும்.**

நிலம் பரந்தது, நீர் குளிர்ந்தது, காற்று வீசிற்று. இவை நிலம், நீர், காற்று என்ற எழுவாய்க்குத் தகுதியாக, பரந்தது, குளிர்ந்தது, வீசிற்று என்ற பயனிலைகளைப் பெற்று இலக்கண அமைதியுடன் வந்துள்ளன. ஆதலால், இவை இலக்கணமுடையன.

**இலக்கணப் போலி** என்பது இலக்கணம் இல்லை எனினும், இலக்கணம் உடையதுபோல அறிஞரால் தொன்று தொட்டு வழங்கப்பட்டு வருவதாகும்.

இல் + முன் என்பது **முன்றில்** என்றும்,
நகர் + புறம் என்பது **புறநகர்** என்றும்,
ஊர் + உள் என்பது **உள்ளூர்** என்றும்,
பொது + இல் என்பது **பொதியில்** என்றும்,
கோ + இல் என்பது **கோயில்** என்றும்,

இலக்கணத்தின்படி பொருந்தாமல் முன்பின்னாக வந்து வழங்குகின்றன.

இவை போல்வன இலக்கணப் போலி.

**மரூஉ** என்பது சில எழுத்துக்கெட்டும், சில எழுத்துத் திரிந்தும் சொற்கள் (மருவி) வேறுபட்டு வழங்குவதாகும்.

அருமருந்து + அன்ன = அருமருந்தன்ன — **அருமந்த** என்றும்,
மலையமான் + நாடு = மலையமானாடு — **மலாடு** என்றும்,
சோழன் + நாடு = சோழநாடு — **சோணாடு** என்றும்,
பாண்டியன் + நாடு = பாண்டியநாடு — **பாண்டிநாடு** என்றும்,
ஆதன் + தந்தை = ஆதன்றந்தை — **ஆந்தை** என்றும்,
என் + தந்தை = என்றந்தை — **எந்தை** என்றும்,
வழங்கப்படுகின்றன.

இவை மரூஉ மொழிகள்.

மேற்காட்டப்பட்ட இலக்கணமுடையது, இலக்கணப் போலி, மரூஉ என்ற மூன்றும் இயல்பு வழக்காம். [எந்தப் பொருட்கு எந்தச் சொல் அமைந்ததோ அந்தப் பொருளை அந்தச் சொல்லால் வழங்குவதால் இது இயல்பு வழக்கு ஆகும்.]

## (ii) தகுதி வழக்கு

ஒரு பொருளுக்கு இயல்பாய் அமைந்த சொல்லாற் கூறுவது தகுதியன்று என அதனை விலக்கி, வேறு ஒரு தகுதியான சொல்லாற் கூறுவது தகுதி வழக்கு எனப்படும்.

இடக்கர் அடக்கல், மங்கலம், குழூஉக்குறி—எனத் தகுதி வழக்கு மூன்று வகைப்படும்.

**உதாரணம் :**

மலங் கழுவி வருவோம் என்பதை
—கால்கழுவி வருவோம் என்றும்,
பீளை கழுவி வருவோம் என்பதை
—கண் கழுவி வருவோம் என்றும்,
எச்சில் கழுவி வருவோம் என்பதை
—வாய்பூசி வருவோம் என்றும்

மறைத்துப் பேசுகின்றனர். இவை இடக்கர் அடக்கல். இடக்கர் = மறைக்கப்படுஞ் சொல். அடக்கல் = வெளிப்படாமல் மறைத்துக் கூறுதல்.

வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி.
(துஞ்சிய - செத்த)

அரசன் திருமுகம் வந்தது. (திருமுகம் - ஓலை)

வெள்ளாடு மேய்ந்தது. (வெள்ளாடு - கரிய ஆடு)

நன்காடு சேர்ந்தனன். (நன்காடு - சுடுகாடு)

நல்லபாம்பு கடித்தது. (நல்லபாம்பு - கொடிய பாம்பு)

இவ்வாறு மங்கலமில்லாத சொல்லை மறைத்து மங்கலச் சொல்லாற் கூறுவது மங்கல வழக்கு எனப்படும்.

பறி வாங்கி வந்தோம்
சொல் விளம்பி பருகுவோம்
காரை உடுப்போம்

இவற்றில் உள்ள பறி என்பது பொற்கொல்லர் பொன்னுக்கு வழங்கும் பெயர். சொல்விளம்பி என்பது வேடர்களுக்கு வழங்கிய பெயர். காரை என்பது ஆடைக்கு ஆனைப்பாகர் வழங்கிய பெயர்.

இவைபோல்வன குழூஉக் குறி.

குழூஉக்குறி = ஒரு கூட்டத்தார் தமக்குள் வழங்குஞ் சொல்.

மேற்காட்டப்பட்ட இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக் குறி என்ற மூன்றும் தகுதிவழக்காம். இப் பொருளை இச் சொல்லாற் கூறுவது தகுதியன்று என மறைத்துத் தகுதி யுடைய சொல்லாற் கூறப்படுவது தகுதி.

ந - சூ: 'இலக்கணம் உடையது இலக்கணப் போலி
மரூஉஎன்று ஆகும் மூவகை இயல்பும்
இடக்க ரடக்கல் மங்கலம் குழூஉக்குறி
எனுமூத் தகுதியோடு ஆறும் வழக்கியல்.' (23)



## 3. தொகைநிலைத் தொடர்

பெயர்ச் சொல்லோடு பெயர்ச் சொல்லும் வினைச் சொல்லும் புணரும்போது இடையில் வேற்றுமை யுருபு வினையுருபு முதலிய உருபுகள் மறைந்து நிற்கத் தொடர்ந்து ஒரு மொழிபோல் பிளவுபடாமல் நிற்பது **தொகைநிலைத் தொடராம்.**

அது வேற்றுமைத்தொகை, வினைத்தொகை, பண்புத் தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன் மொழித்தொகை என ஆறு வகைப்படும்.

ந - சூ: 'பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளின் அவற்றின் உருபுஇடை
ஒழிய இரண்டு முதலாத் தொடர்ந்துஒரு
மொழிபோல் நடப்பன தொகைநிலைத் தொடர்ச்
சொல்.' (24)

**உதாரணம்:**

**பால் குடித்தான்**—இதில் இரண்டாம் வேற்றுமை உருபு ஆகிய 'ஐ' என்பது இடையில் மறைந்து நின்றது. பால்+ஐ=பாலை என விரித்துக்கொள்க.

இவ்வாறே மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு ஆகிய வேற்றுமை யுருபு மறைந்து நிற்குந் தொடர்மொழிகளும் **வேற்றுமைத் தொகையாம்.**

**கொல்யானை**—இதில் காலங்காட்டும் இடைநிலையும் பெயரெச்ச விகுதியும் இடையில் மறைந்து நின்றது. கொன்ற, கொல்கின்ற, கொல்லும் என விரித்துக் காண்க. இதுபோல்வன **வினைத்தொகையாம்.**

**கருங்குதிரை**—இதில் ஆகிய என்னும் பண்பு உருபு மறைந்து நின்றது. கருமையாகிய குதிரை என விரித்துக் கொள்க. இதுபோல்வன **பண்புத் தொகையாம்.**

**ஆயன் கண்ணன்**—இதில் ஆயன் ஆகிய கண்ணன் என இரண்டு பெயர்களும் ஒட்டி நின்று ஒருவனை யுணர்த்தியது. இவ்வாறு இருபெயர் ஒட்டி நிற்பன **இரு பெயரொட்டுப் பண்புத் தொகையாம்.**

**பவளவாய்**—இதில் 'போன்ற' 'போலும்' என்ற உவமவுருபு இடையில் மறைந்து நின்றது. பவளம்போன்ற வாய், பவளம்போலும் வாய் என விரித்துக்கொள்க. இது போல்வன **உவமைத் தொகை**யாம்.

**பால்பழம் கொடுத்தான்**—இதில் 'உம்' என்ற இடைச் சொல் மறைந்து நின்றது. பால் + உம் = பாலும் பழமும் என விரித்துக் காண்க. இதுபோல்வன **உம்மைத் தொகை**யாம்.

**பொற்றொடி வந்தாள்**—இதில் ' உடையவள் ' என அல்லாத மொழி புறத்தே மறைந்து நின்றது. பொன்னாற் செய்த தொடியினை உடையவள் என விரித்துக் காண்க. இதுபோல்வன **அன்மொழித் தொகை**யாம்.

மேற்காட்டிய ஆறும் தொகைநிலைத் தொடர்கள் ஆகும்.

ந - சூ: 'வேற்றுமை வினைபண்பு உவமை உம்மை
அன்மொழி எனஅத் தொகை ஆறு ஆகும்.' (25)

## 4. தொகாநிலைத் தொடர்

**தொகாநிலைத் தொடர்**—என்பது நிலைமொழியும் வருமொழியும் புணரும்போது இடையில் ஒன்றும் மறையாமல் அவ்வாறே நிற்பது.

இது, வினைமுற்றுத்தொடர், பெயரெச்சத்தொடர், வினையெச்சத்தொடர், எழுவாய்த்தொடர், விளித்தொடர், வேற்றுமையுருபுத் தொடர், இடைச்சொல் தொடர், உரிச்சொல்தொடர், அடுக்குத்தொடர் என ஒன்பது வகைப படும்.

**உண்டான் சாத்தன்**—இதில் உண்டான் என்ற வினைமுற்று நின்று சாத்தன் என்ற பெயரைத் தொடர்ந்தது; இதுபோல் வருவன **வினைமுற்றுத் தொடர்**.

உண்ட சாத்தன்—உண்ட என்ற பெயரெச்சம் சாத்தன் என்ற பெயரைத் தொடர்ந்தது.
**பெயரெச்சத் தொடர்.**

உண்டு வந்தான்—உண்டு என்ற வினையெச்சம் வந்தான் என்ற வினைமுற்றைத் தொடர்ந்தது.
**வினையெச்சத் தொடர்.**

சாத்தன் உண்டான்—இதில் சாத்தன் என்ற எழுவாய் உண்டான் என்ற பயனிலையைத் தொடர்ந்தது.
**எழுவாய்த் தொடர்**

சாத்தா வா!—இதில் சாத்தா என்ற விளிப்பெயர் வா—என்ற சொல்லைத் தொடர்ந்தது.
**விளித்தொடர்.**

மரத்தை வெட்டினான்-ஐ உருபு
வாளால் எறிந்தான்-ஆல் உருபு
ஏழைக்கு ஈந்தான்-கு உருபு
மலையின் இறங்கினான்-இன் உருபு
சாத்தனது கை-அது உருபு
மணியின்கண் ஒளி-கண் உருபு

ஐ முதலிய ஆறு உருபுகளும் இடையில் நின்று தொடர்ந்தன. **வேற்றுமை யுருபுத் தொடர்.**

அது கொல்—அது என்ற சுட்டு இடைச்சொல் முன்னின்று தொடர்ந்தது. —**இடைச் சொற்றொடர்.**

நனிபேதை—நனி என்ற உரிச்சொல் நின்று தொடர்ந்தது. —**உரிச்சொற்றொடர்.**

பாம்பு பாம்பு—இதில், பாம்பு என்ற சொல் பின்னும் அடுக்கி வந்தது. —**அடுக்குத்தொடர்.**

நூ-சூ: ‘முற்றுஈ ரெச்சம் எழுவாய் விளிப்பொருள்
ஆறுஉருபு இடைஉரி அடுக்குஇவை தொகாநிலை.’ (26)

# ௪. புணர்ச்சி

## 1. புணர்ச்சி என்பது யாது?

பொன்+மலர். பொன்மலர் என்னும் இரு சொற்களுள் முதலில் நிற்கும் சொல் 'பொன்' என்பது. அது **நிலைமொழி** எனப்படும். அதன் பின்னர் வரும் சொல் 'மலர்' என்பது. அது **வருமொழி** எனப்படும்.

பொன்+மலர்=பொன் மலர். பொன் மலர் என்பதில் நிலைமொழியும் வருமொழியும் சேர்ந்தன. இவ்வாறு நிலைமொழி ஈறும் வருமொழி முதலும் ஒன்றுபடுதல் **புணர்ச்சி** எனப்படும்.

## 2. இயல்பு—விகாரம்

### (i) இயல்பு

**உதாரணம் :**

பொன் + மணி = பொன்மணி
சுடு + வெயில் = சுடுவெயில்

நிலைமொழி ஈறும் வருமொழி முதலும் வேறுபடாமல் புணர்ந்தன. இது **இயல்பு புணர்ச்சி** எனப்படும்.

### (ii) விகாரம்

**க. தோன்றல் :**

பூ + கொடி = பூங்கொடி
மா + காய் = மாங்காய்

நிலைமொழிக்கும் வருமொழிக்கும் இடையே "ங்" என்ற மெய் தோன்றியது. **தோன்றல் விகாரம்**

**உ. திரிதல் :**

கள் + குடம் = கட்குடம்
சொல் + பொழிவு = சொற்பொழிவு

நிலைமொழி ஈற்றில் நின்ற "ள்" ட் ஆகவும், "ல்" ற் ஆகவும் திரிந்தன. **திரிதல் விகாரம்**

கெடுதல் :

மரம் + வேர் = மரவேர்
குணம் + வேறுபாடு = குணவேறுபாடு
} நிலைமொழி ஈற்றில் நின்ற மகரமெய் கெட்டது.

**கெடுதல் விகாரம்.**

தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் மூன்றும் **விகாரப்புணர்ச்சி** எனப்படும்.

பனை + காய் = பனங்காய் பனை என்பதன் ஈற்றில் உள்ள ஐகாரம் கெட்டு, அம் தோன்றி அம் என்பதில் உள்ள மகரமெய் நகர மெய்யாகத் திரிந்தது. இவ்வாறு ஒரு புணர்ச்சியில் மூன்று விகாரங்கள் வருதலும் உண்டு

## 3. மெய்யீற்றின் முன் உயிர் (பொது-சிறப்பு)

### (i) பொது

உதாரணம் :

மரம் + ஏறினன் = மரமேறினன்
பால் + இனிமை = பாலினிமை
} நிலைமொழியீற்றின் மெய்மேல் வருமொழியுயிர் ஏறி முடிந்தது.

மெய்யீற்றின்முன் வரும் உயிரெழுத்து அம் மெய்யின்மேல் ஏறி உயிர்மெய் யெழுத்தாய் நிற்கும். இப் புணர்ச்சி இயல்பு புணர்ச்சியாம்

ந - சூ : 'உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே.' (27)

### (ii) சிறப்பு

பொன் + ஒளி = பொன்னொளி
தண் + அளி = தண்ணளி
மண் + உலகம் = மண்ணுலகம்
} நிலைமொழியீற்றில் நின்ற மெய் இரட்டியது.

ஒரு குற்றெழுத்துக்குப் பின் நிலைமொழியீற்றில் நின்ற மெய் வருமொழி முதலில் உயிரெழுத்து வந்தால் இவ்வாறே இரட்டித்து நிற்கும்.

ந - சூ : 'தனிக்குறில் முன்ஒற்று உயிர்வரின் இரட்டும்.' (28)

## 4. உடம்படுமெய்

**உதாரணம்:**

மணி + ஒளி = மணியொளி
தீ + எரிந்தது = தீயெரிந்தது
வலை + எடுத்தான் = வலை யெடுத்தான்

நடுவில் "ய்" என்ற மெய் தோன்றியது. யகர வுடம்படு மெய்.

நிலைமொழி ஈற்றில் இ, ஈ, ஐ என்ற உயிர்கள் நிற்க வருமொழி முதலில் உயிரெழுத்து வந்தால் அவை புணரும்போது யகர வுடம்படுமெய் இடையில் தோன்றும்.

(அ) பல + அணி = பலவணி
(ஆ) பலா + அடி = பலாவடி
(உ) குழு + எழுந்தது = குழு வெழுந்தது
(ஊ) பூ + அலங்கல் = பூவலங்கல்
(ஏ) ஏ + எய்தான் = ஏவெய்தான்
(ஒ) நொ + அரசு = நொவ்வரசு
(ஓ) நோ + உள்ளம் = நோவுள்ளம்

இடையில், "வ்" என்ற மெய் தோன்றியது வகர வுடம் படுமெய்.

நிலைமொழி ஈற்றில் இ, ஈ, ஐ என்ற மூன்றும் அல்லாத மற்றையுயிர்களின் முன் வருமொழி முதலில் உயிரெழுத்துக்கள் வந்தால் வகர வுடம்படுமெய் இடையில் தோன்றும்.

அவனே + அழகன் = அவனேயழகன்
சே + அடி = சேவடி
சே + அடி = சேயடி

அவனே என்பதன் முன் உயிர் வர "ய்" தோன்றியது
சே—இதில் ஏ என்பதன் முன் உயிர்வர யகரமும் தோன்றியது; வகரமும் தோன்றியது.

"ஏ" என்ற எழுத்தின்முன் உயிர் எழுத்துக்கள் வந்தால் யகர வுடம்படுமெய்யும் தோன்றும்; வகரவுடம்படு மெய்யும் தோன்றும்.

**ந - சூ:** **" இ ஈ ஐவழி யவ்வும் ஏனை**
**உயிர்வழி வவ்வும் ஏமுன்இவ் விருமையும்**
**உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்."** (29)

## 5. உயிர்முன் வல்லினம்

உதாரணம் :

(அ) வர + கண்டான் = வரக்கண்டான்
(ஆ) பலா + பழம் = பலாப்பழம்
(இ) கிளி + கண்ணி = கிளிக்கண்ணி
(ஈ) தீ + பொறி = தீப்பொறி
(உ) புழு + கூடு = புழுக்கூடு
(ஊ) பூ + கொய்கை = பூக்கொய்கை
(ஏ) தே + குடம் = தேக்குடம்
(ஐ) குவளை + கண் = குவளைக்கண்
(ஓ) கோ + கிடந்தது = கோக்கிடந்தது

இயல்பாக நின்ற உயிரெழுத்துக்களின் முன் வல்லினம் வர அந்த வல்லின மெய்யே மிக்குப் புணர்ந்தது.

மரம் + கிளை = மர + கிளை
= மரக்கிளை
கடாம் + களிறு = கடா + களிறு
= கடாக்களிறு

மரம் என்பதில் "ம்" கெட்டு மர என நின்று வல்லினத்தோடு புணர்ந்தது.

கடாம் என்பதும் அவ்வாறே புணர்ந்தது. இவை இயல்பான உயிர் ஈறு அல்ல. இவை விதி ஈறு எனப்படும்.

இவ்வாறு இயல்பாகவும் விதியாகவும் நின்ற உயிரெழுத்துக்களின் முன் வல்லினம் வந்தால் அவ் வல்லின மெய் மிக்கு முடியும்.

ந - சூ : 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
கசதப மிகும்வித வாதன மன்னே.' (30)

சென்ற + கண்ணன் = சென்ற கண்ணன்
வந்தன + குதிரைகள் = வந்தன குதிரைகள்
ஆ + பெரியது = ஆ பெரியது
ஓடு + கால் = ஓடு கால்

வல்லினம் மிகாமல் இயல்பாக நின்றது.

**'விதவாதனமன்' என்றதனால் பெயரெச்சம், வினைமுற்று, ஓரெழுத்தொரு மொழி, வினைத்தொகை இவற்றின் முன்வரும் வல்லினம் மிகாது.**

## 6. குற்றியலுகரப் புணர்ச்சி—குற்றியலிகரப் புணர்ச்சி

**உதாரணம் :**

| | |
|---|---|
| காசு + அமைத்தான் = காசமைத்தான்<br>எஃகு + இலங்கும் = எஃகிலங்கும்<br>வரகு + உயர்ந்தது = வரகுயர்ந்தது<br>கொக்கு + இறகு = கொக்கிறகு<br>சங்கு + ஊர்ந்தது = சங்கூர்ந்தது | நிலைமொழியீற்றில் உள்ள குற்றியலுகரங் கெட்டு மெய்யீறாக நிற்க, வருமொழி முதலில் வந்த உயிர் அம்மெய்யின்மேல் ஏறி முடிந்தது. |

இவ்வாறு குற்றியலுகரம் வருமொழி முதலில் உயிர் வரும்போது தான் ஏறிநின்ற மெய்யை விட்டோடும். பின் வருமொழியில் உள்ள உயிர் அம் மெய்யின்மேல் ஏறி முடியும். இது குற்றியலுகரப் புணர்ச்சியாம்.

### (1) குற்றியலிகரப் புணர்ச்சி

| | | |
|---|---|---|
| காசு + யாது | = காசியாது | நிலைமொழியீற்றில் நின்ற குற்றியலுகரம் யகரத்தை முதலாகவுடைய வருமொழி வந்து புணரும்போது இகரமாகத் திரிந்தது. |
| எஃகு + யாது | = எஃகியாது | |
| வரகு + யாது | = வரகியாது | |
| கொக்கு + யாது | = கொக்கியாது | |
| சங்கு + யாது | = சங்கியாது | |
| மார்பு + யாது | = மார்பியாது | |

இவ்வாறு யகரம் வரும்போது குற்றியலுகரம் இகரமாகத் திரிந்து நிற்கும். இது குற்றியலிகரப் புணர்ச்சியாகும்.

நு - சூ: 'உயிர்வரின் உக்குறள் மெய்விட்டு ஓடும்
யவ்வரின் இய்யாம் முற்றும்அற்று ஒரோவழி.' (31)

# ரு. யாப்பு

## 1. யாப்பின் உறுப்புக்கள்

யாப்பு என்பது செய்யுள்: கவி, பாட்டு, பா என்பனவும் அதனையே யுணர்த்தும். யாப்பிற்கு உறுப்புக்களாவன எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்பன.

## 2. அசை—சீர்

### (1) அசை

ஓர் எழுத்துத் தனித்து நின்றாவது சில எழுத்துக்கள் கூடி நின்றாவது அசைத்து (ஒலித்து) நிற்பது அசையாம். அது நேரசை, நிரையசை என இருவகைப்படும்.

### நேர் அசை

உதாரணம் :

க. குற்றெழுத்துத் தனித்து நின்றது

கண். குற்றெழுத்து மெய்யடுத்து நின்றது.

கா. நெட்டெழுத்துத் தனித்து நின்றது.

கார். நெட்டெழுத்து மெய்யடுத்து நின்றது.

இவ்வாறு குறில் தனித்தும், குறில் மெய்யடுத்தும், நெடில் தனித்தும், நெடில் மெய்யடுததும் நேரசை நான்கு வகையாக வரும்.

### நிரை அசை

கனி. குற்றெழுத்து இரண்டு சேர்ந்து நின்றன.

கரம். குற்றெழுத்து இரண்டு சேர்ந்து மெய்யடுத்து நின்றன.

கனா. குற்றெழுத்தும் நெட்டெழுத்தும் சேர்ந்து நின்றன.

கடாம். குற்றெழுத்தும் நெட்டெழுத்தும் சேர்ந்து மெய்யடுத்து நின்றன.

இவ்வாறு குறில் இணைந்தும், குறில் இணைந்து மெய் யடுத்தும் குறில் நெடில் இணைந்தும், குறில் நெடில் இணைந்து மெய்யடுத்தும் நான்கு விதமாக நிரையசை வரும்.

## (11) சீர்

மேற்காட்டப்பட்ட நேர், நிரை என்ற அசைகளில் ஒன்று தனித்து நிற்பினும், இரண்டு மூன்று சேர்ந்து நிற் பினும் சீர் என்று சொல்லப்படும். ஓரசைச்சீர், ஈரசைச் சீர், மூவசைச்சீர் என்பன முறையே அவற்றின் பெயர் களாம்.

| ஓரசைச்சீர் | வாய்பாடு |
|---|---|
| நேர் | —நாள் |
| நிரை | —மலர் |

| ஈரசைச்சீர் | | வாய்பாடு |
|---|---|---|
| நேர் | நேர் | —தேமா |
| நிரை | நேர் | —புளிமா |
| நிரை | நிரை | —கருவிளம் |
| நேர் | நிரை | —கூவிளம் |

| மூவசைச்சீர் | | | வாய்பாடு |
|---|---|---|---|
| நேர் | நேர் | நேர் | —தேமாங்காய் |
| நிரை | நேர் | நேர் | —புளிமாங்காய் |
| நிரை | நிரை | நேர் | —கருவிளங்காய் |
| நேர் | நிரை | நேர் | —கூவிளங்காய் |
| நேர் | நேர் | நிரை | —தேமாங்கனி |
| நிரை | நேர் | நிரை | —புளிமாங்கனி |
| நிரை | நிரை | நிரை | —கருவிளங்கனி |
| நேர் | நிரை | நிரை | —கூவிளங்கனி |

ஈரசைச்சீர் நான்கும் இயற்சீர் என்றும், ஆசிரியவுரிச் சீர் என்றும், அகவற்சீர் என்றும் பெயர்பெறும். அவற்

றுள் முன்னின்ற இரண்டும் மாச்சீர் என்றும், பின்னின்ற இரண்டும் விளச்சீர் என்றும் பெயர்பெறும்.

மூவசைச் சீர் எட்டில் முன்னின்ற நான்கும் காய்ச்சீர் என்றும், வெண்பாவுரிச்சீர் என்றும் பெயர்பெறும். பின்னின்ற நான்கும் கனிச்சீர் என்றும், வஞ்சியுரிச்சீர் என்றும் பெயர்பெறும்.

---

# ௫. அணி

## 1. இயல்பு நவிற்சி

அணி என்பது செய்யுட்கு அழகுதந்து நிற்பது. அவ்வணி பலவகைப்படும்.

ஒரு பொருளின் இயற்கையை (தன்மையை) உள்ள படியே எடுத்துக் கூறுவது **இயல்பு நவிற்சியணியாம்.**

(எ-டு.) 'அப்பூருஞ் செஞ்சடைமேல் அம்புலியைப் பார்த்துப் [பார்த்(து)
எப்போதுஞ் சீத்துப் பூத்(து) என்னவே—தப்பாது
வாலங்காட் டாநிற்கும் வாயங்கா வாநிற்கும்
ஆலங்காட் டான்பூண் அரா.'

இக் கவியில், திருவாலங்காட்டில் வீற்றிருக்கும் சிவ பெருமான் ஆபரணமாகப் பூண்டிருக்கும் பாம்பு சடை மேலிருக்கும் சந்திரனைப் பார்த்துச் சீத்துப் பூத்து என்று சீறி வாலையாட்டும்; வாயைத் திறக்கும் எனப் பாம்பின் இயற்கையை விளக்கியிருப்பது காண்க.

## 2. உயர்வு நவிற்சி

ஒரு பொருளின் சிறப்பைக் கூறும்போது உள்ளவாறு கூறாமல் மிகவும் உயர்த்திக் கூறுவது (உலக நடையைக் கடந்து புகழ்ந்து கூறுவது) **உயர்வு நவிற்சியணியாம்.**

(எ - டு.) 'அகழும் இஞ்சியும் அண்டத்தின்
அடிமுடி காறும்
புகுதும் என்றுதம் ஆற்றலான்
முரணுபு புகுங்கால்
இகலும் வெஞ்சினச் சேடனோ
டிராகுவென் றுரைக்கும்
நிகரில் பாம்புகள் நெறியிடைக்
காண்டலும் நின்ற.'

இக் கவியில், அகழியும் கோட்டை மதிலும் அடியை யும் வானத்தின் முடியையும் பார்ப்பதற்கு வலிமையுடன் புகுவோம் என்று மாறுபட்டுச் சென்றன என்றும், வழி யில் ஆதிசேடன் என்ற பாம்பையும், இராகு என்ற பாம்பை யுங் கண்டவுடன் அதற்குக் கீழும் மேலும் போகாமல் நின்றன என்றும் புகழ்ந்திருப்பது காண்க. ஆதிசேடன் இருக்கும் இடம்வரையும் அகழி ஆழ்ந்திருக்கிறது என்ப தும், இராகு மண்டலம் வரையும் மதில் உயர்ந்திருக்கிறது என்பதும் இங்கு அளவிறந்த புகழ்ச்சி.

## 3. உவமையணி—உருவகவணி (பொது)

### (1) உவமையணி

குணம், தொழில், பயன் என்பவற்றைக் காரணமாகக் கொண்டு ஒரு பொருளோடு ஒரு பொருளையும், பல பொரு ளோடு பல பொருளையும் ஒப்புமையாக்கிக் கூறுவது **உவமையணியாம்.**

(எ - டு.) 'பால்போலும் இன்சொற் பவளம்போற் [செந்துவர்வாய்
சேல்போற் பிறழுந் திருநெடுங்கண்—மேலாம்
புயல்போற் கொடைக்கைப் புனனாடன் கொல்லி
அயல்போலும் வாழ்வ தவர்.'

இதிற் பால்போலும் இன்சொல் என்பதும், பவளம் போற் செந்துவர்வாய் என்பதும், குணம் காரணமாக வந்த

உவமை. சேல்போற் பிறழுந் திருநெடுங்கண் என்பது பிறழ்தல் ஆகிய தொழில் காரணமாக வந்த உவமை. புயல் போற் கொடைக்கை என்பது கொடைப்பயன் காரணமாக வந்த உவமை.

## (11) உருவகவணி

உவமானப் பொருளையும் உவமேயப் பொருளையும் வேற்றுமையின்றி ஒரு பொருளாகக் கூறுவது **உருவக வணி.**

(எ - டு.) 'அங்கைம்மலரும் அடித்தளிரும் கண்வண்டும்.'

இதில் மலர்போன்ற கை என்றால் உவமை. தளிர் போன்ற அடி என்றால் உவமை வண்டுபோன்ற கண் என்றால் உவமை. இவை இங்கு கைம்மலர், அடித்தளிர், கண்வண்டு என ஒரு பொருளாகவே இயைத்து உரைத்திருப்பது காண்க.

கையாகிய மலர் எனவும், அடியாகிய தளிர் எனவும், கண்ணாகிய வண்டு எனவும் விரித்துப் பொருள் கொள்ள வேண்டும்.

---

# மொழிப் பயிற்சி

## 1. வாக்கியம்—பொது இலக்கணம்

**உதாரணம் :**

(1) முருகன் பழத்தைத் தின்றான்.
(2) கமலம் நேற்று வந்தாள்.
(3) வள்ளி மானைத் துரத்தினாள்.

(1) இவைகளில் 'முருகன்' என்பது எழுவாய். 'தின்றான்' என்பது பயனிலை. 'பழத்தை' என்பது செயப்படுபொருள்.

(2) 'கமலம்' என்பது எழுவாய். 'வந்தாள்' என்பது பயனிலை. செயப்படுபொருள் இல்லை.

(3) 'வள்ளி' என்பது எழுவாய். 'துரத்தினாள்' என்பது பயனிலை. 'மானை' என்பது செயப்படுபொருள்.

கமலம் நேற்று வந்தாள் என்பதுபோலச் சில வாக்கியங்களில் செயப்படுபொருள் இல்லாமல் எழுவாய், பயனிலை என்னும் இரண்டும் மட்டுமே இருக்கும்.

மேற்காட்டப்பட்டவைபோல எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் என்னும் மூன்றும் அமைந்து சொற்கள் கோவையாகத் தொடர்ந்து கருத்துக்களைத் தெளிவாக விளக்குவது சொற்றொடர் எனப்படும். அது வாக்கியம் என்றும் கூறப்படும்.

அது **தனி வாக்கியம், தொடர் வாக்கியம், கலவை வாக்கியம்** என மூவகைப்படும்.

### (i) தனி வாக்கியம்

ஓர் எழுவாய், ஒரு பயனிலை, ஒரு செயப்படுபொருள் அமைந்திருப்பது **தனிவாக்கியம்** ஆகும். சில வாக்கியங்கள்

செயப்படுபொருள் இல்லாமலும் வரும் எழுவாயும் மறைந்து பயனிலைமட்டும் நிற்கும் வாக்கியங்களும் உண்டு.

1. நளன் அன்னத்தைக் கண்டான்

இதில், 'நளன்' என்பது எழுவாய்; 'கண்டான்' என்பது பயனிலை; 'அன்னத்தை' என்பது செயப்படு பொருள். மூன்றும் அமைந்திருக்கின்றன.

2. தாமரை மலர்ந்தது

இதில், 'தாமரை' என்பது எழுவாய்; 'மலர்ந்தது' என் பது பயனிலை. இவ்வாக்கியத்தில் செயப்படுபொருள் இல்லை.

3. 'வருக வருக' வாருங்கள், வாருங்கள்

புதியவர் ஒருவர் ஊரிலிருந்து வருகிறார்; அவரைக் கண்டவர் 'வருக வருக' என்றாவது, 'வாருங்கள் வாருங்கள்' என்றாவது கூறுகின்றார். 'நீவிர்' என்ற எழுவாய் அங்கு மறைந்து நிற்கிறது இவ்வாறு எழுவாய் மறைந்து பயனிலை மட்டும் நின்றாலும் தனி வாக்கியம் ஆகும்.

படி, செல்:

ஒருவன் தன்முன் நிற்பவனை நோக்கி, "நீ படி." "நீ செல்" என்று சொல்லாமல் 'படி,' 'செல்' என்று மட்டும் ஏவுகிறான். படி, செல் என்ற ஏவல் வினைமுற்றுக்கள் நீ படி, நீ செல் என்று எழுவாய்ப் பொருளையுந் தந்து நிற் கின்றன. ஆதலால் படி, செல், என்பன போன்ற ஏவல் வினைமுற்றுக்களும் தனி வாக்கியங்கள் ஆம்.

## (ii) தொடர் வாக்கியம்

ஓர் எழுவாய் நின்று பல பயனிலை, பல செயப்படு பொருள்கொண்டு இறுதியில் முடிவது தொடர் வாக்கியம் ஆம். அது வினையெச்சங்கள் அடுக்கி இறுதியில் ஒரு முற்றுப் பயனிலையைக் கொண்டு முடியும்

**உதாரணம் :**

கண்ணன் காட்டிலிருந்த காடையைப் பிடித்துக் கூட்டிலடைத்து அதற்கு வேண்டும் இரை போட்டு வளர்த்தான்.

இதில், 'கண்ணன்' என்னும் ஓர் எழுவாய்க்குப் "பிடித்து" என்பதும், "அடைத்து" என்பதும், "போட்டு" என்பதும், "வளர்த்தான்" என்பதும் பயனிலைகளாயின.

'காடை' என்பதும், 'இரை' என்பதும் செயப்படு பொருள்கள் ஆயின.

இவ்வாறு ஓர் எழுவாய், பல பயனிலை, பல செயப்படு பொருள்கொண்டு முடிவது தொடர் வாக்கியம் எனப்படும்.

கண்ணன் காட்டிலிருந்த காடையைப் பிடித்தான்; கூட்டில் அடைத்தான்; உணவு ஊட்டினான்; வளர்த்தான்.

எனப் பிரித்துக் 'கண்ணன்' என்ற எழுவாய்க்குப் பல பயனிலைகளும், பல செயப்படுபொருள்களும் அமைந்திருப்பதைக் காண்க.

வயலில் நெற்பயிரை ஒரு பசு மேய, உடையவன் கண்டு அடிக்க, வழியில் வந்தவன் இடித்துக்கூற விடுத்துச் சென்றான்.

'ஒரு பசு' என்பதும், 'உடையவன்' என்பதும், 'வந்தவன்' என்பதும் எழுவாய்கள்.

'மேய', 'அடிக்க', 'கூற', 'சென்றான்' என்பன பயனிலைகள்.

'நெற்பயிர்', 'பசு' செயப்படுபொருள்கள்.

வயலில் நெற்பயிரை ஒரு பசு மேய்ந்தது.

உடையவன் கண்டு அடித்தான்.

வழியில் வந்தவன் இடித்துக் கூறினான்.

உடையவன் பசுவை விடுத்துச் சென்றான்.

இவ்வாறு பல எழுவாய், பல பயனிலை, பல செயப்படு பொருள் பெற்றுவரும் தொடர்வாக்கியமும் உண்டு.

## (iii) கலவை வாக்கியம்

ஒரு தலைமை வாக்கியமும், அதனையடுத்துச் சார்பு வாக்கியமும் கலந்து நிற்பது **கலவை வாக்கியம்** எனப்படும்

**உதாரணம்:**

1. தொல்காப்பிய முனிவர் 'சார்பெழுத்து மூன்று' என்று கூறியுள்ளார்.
2. திருவள்ளுவர் 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்று கூறுகின்றார்.
3. ஆசிரியர் ஒரு மாணவனை நோக்கி 'நீ ஒழுங்காகப் படி' என்று சினந்து கூறினார்.

இவற்றுள் முதல் வாக்கியத்தில் '**தொல்காப்பிய முனிவர் கூறியுள்ளார்**' என்பது தலைமை வாக்கியம். '**சார்பெழுத்து மூன்று**' என்பது சார்பு வாக்கியம். இவ்விரண்டும் சேர்ந்து வந்தன; ஆதலால் இது **கலவை வாக்கியம்**.

இரண்டாவது வாக்கியத்தில் '**திருவள்ளுவர் கூறுகின்றார்**' என்பது தலைமை வாக்கியம். '**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்**' என்பது சார்பு வாக்கியம். இவ்விரண்டும் சேர்ந்து நின்றன.

மூன்றாவது வாக்கியத்தில் '**ஆசிரியர் சினந்து கூறினார்**' என்பது தலைமை வாக்கியம். '**நீ ஒழுங்காகப் படி**' என்பது சார்பு வாக்கியம்.

இவ்வாறு கலந்து நின்றதனால் இது **கலவை வாக்கியம்** ஆகும். இன்னும் பல வேறு வகைப்படத் தலைமை வாக்கியமும் சார்பு வாக்கியமும் கலந்து நிற்பன எல்லாம் **கலவை வாக்கியம்** என்றே கூறப்படும். இன்னவாறுதான் கலந்து நிற்கும் என வரையறுத்துக் கூறமுடியாது.

## 2. வாக்கியப் பொருத்தம்

வாக்கியங்கள் எல்லாம் திணைப் பொருத்தம், பாற் பொருத்தம், எண் பொருத்தம், இடப் பொருத்தம் முதலியவை அமைந்திருக்கவேண்டும்.

உயர்திணை ஆண்பால் எழுவாயாக இருந்தால பயனிலையும் உயர்திணை ஆண்பாலாக இருக்கவேண்டும். பெண்பாலாக இருந்தால் பயனிலையும் பெண்பாலாக இருக்க வேண்டும். எழுவாய் பலர்பாலாக இருந்தால் பயனிலையும் பலர்பாலாக இருக்கவேண்டும்.

எழுவாய் அஃறிணை ஒன்றன்பாலாக இருந்தால் பயனிலையும் அஃறிணை ஒன்றன்பாலாக இருக்கவேண்டும். எழுவாய் பலவின்பாலாக இருந்தால் பயனிலையும் அவ்வாறே இருக்கவேண்டும்.

எழுவாய் தன்மை ஒருமையாக இருந்தால் பயனிலையும் தன்மை ஒருமையாக இருக்கவேண்டும். எழுவாய் தன்மைப் பன்மையாக இருந்தால் பயனிலையும் அவ்வாறே இருக்க வேண்டும்.

எழுவாய் முன்னிலை யொருமையாக இருந்தால் பயனிலையும் முன்னிலை யொருமையாகவே இருக்கவேண்டும். எழுவாய் முன்னிலைப் பன்மையாக இருந்தால் பயனிலையும் அவ்வாறே இருக்கவேண்டும்.

எழுவாய்க்குத் தக்கவாறு பயனிலையை யமைப்பது தான் வாக்கியப் பொருத்தமாகும்.

**திணைப் பொருத்தம்:**

| எழுவாய் | பயனிலை |
|---|---|
| ஆறுமுகம் | படித்தான் |
| கமலம் | வந்தாள் |
| அவர் | சென்றார் |

இவைகளில் எழுவாய்களாகிய ஆறுமுகம், கமலம், அவர் என்ற சொற்கள் உயர்திணையாகும். படித்தான், வந்

தாள், சென்றார் என்ற பயனிலைச் சொற்களும் உயர்திணை யாக வந்தன.

இவ்வாறு உயர்திணை எழுவாய்க்கு உயர்திணைப் பயனிலையே வருவது திணைப் பொருத்தமாகும்.

மாடு வந்தது
குதிரைகள் ஓடின

இவைகளில் மாடு, குதிரைகள் என்னும் அஃறிணை எழுவாய்களுக்கு வந்தது, ஓடின என்னும் அஃறிணைப் பயனிலைகள வந்தன

இங்ஙனம், அஃறிணை எழுவாய்க்கு அஃறிணைப் பயனிலைகள் வருதல் திணைப்பொருத்தம் ஆகும்.

**எண் பொருத்தம்:**

வேலன் வந்தான் —உயர்திணை ஒருமை
மன்னர் வந்தார் —உயர்திணைப் பன்மை
மாடு வந்தது — அஃறிணை ஒருமை
மாடுகள் வந்தன — அஃறிணைப் பன்மை

மேற்காட்டிய உதாரணங்களில் வேலன் என்ற உயர் திணை ஒருமை எழுவாய்க்கு வந்தான் என்ற உயர்திணை யொருமைப் பயனிலையும், மன்னர் என்ற உயர்திணைப் பன்மை எழுவாய்க்கு வந்தார் என்ற உயர்திணைப் பன்மைப் பயனிலையும் வந்தன.

இவ்வாறு வருதல் உயர்திணை எண்பொருத்தம் ஆகும்.

மாடு என்ற அஃறிணை யொருமை எழுவாய்க்கு வந்தது என்ற அஃறிணை யொருமைப் பயனிலையும், மாடுகள் என்ற அஃறிணைப் பன்மை எழுவாய்க்கு வந்தன என்ற அஃறிணைப் பன்மைப் பயனிலையும் வந்தன. இவ்வாறு வருதல் அஃறிணை எண்பொருத்தமாகும்.

**கண்ணன் படித்தான்**—கண்ணன் எழுவாய்; உயர்திணை ஆண்பால் படித்தான் என்ற பயனிலை உயர்திணை ஆண் பால் வினைமுற்று.

இரண்டும் பொருத்தமாக அமைந்து நிற்கின்றன.

கண்ணன் என்ற எழுவாயுடன், படித்தாள், படித் தார், படித்தது, படித்தன, படித்தேன், படித்தோம், படித்தாய், படித்திர் என்ற பயனிலைகளைச் சேர்த்தாற் பொருந்தாது.

## 3. எழுத்துப் பிழைகளும் திருத்தமும்

லகரம், ளகரம், ழகரம் என்ற மூன்று எழுத்துக்களையும் ரகரம், றகரம் என்ற இரண்டு எழுத்துக்களையும் நகரம், ணகரம், னகரம் என்ற மூன்று எழுத்துக்களையும் தனித் தனி நன்றாக உச்சரித்துப் பழகவேண்டும். பெரும்பாலும் இவ்வெழுத்துக்களைப் பிழைபட உச்சரிப்பதும் பிழைபட எழுதுவதும் மாணவர்கட்கு இயல்பு.

ஆதலால் இவ் வெழுத்துக்கள் அமைந்த சொற்களைப் பிழையின்றித் திருத்தமாக எழுதவும் பேசவும் பழக வேண்டும்.

லகரமும் ளகரமும்

| பிழை | திருத்தம் |
|---|---|
| விளை பேசினுன் | விலை பேசினுன் |
| மளை ஏறினுன் | மலை ஏறினுன் |
| பள் தேய்த்தான் | பல் தேய்த்தான் |
| நள்ளவன் அவன் | நல்லவன் அவன் |
| உடல் மெளிந்திருந்தான் | உடல் மெலிந்திருந்தான் |
| வில்லை வலைத்தான் | வில்லை வளைத்தான் |
| பயிர்க்குக் கலை யெடுத்தார் | பயிர்க்குக் களையெடுத்தார் |
| விலையும் பயிர் | விளையும் பயிர் |
| அவர்கல் | அவர்கள் |

### ளகரமும் ழகரமும்

| வாளைப்பழம் | வாழைப்பழம் |
|---|---|
| தாளப்பூ | தாழம்பூ |
| இல்வாள்க்கை | இல்வாழ்க்கை |
| சூள்ச்சி | சூழ்ச்சி |
| வாழால் வெட்டினான் | வாளால் வெட்டினான் |
| தாழாண்மை | தாளாண்மை |
| தேழ் கடித்தது | தேள் கடித்தது |
| காழியம்மை | காளியம்மை |

### ரகரமும் றகரமும்

| கை விறல் | கைவிரல் |
|---|---|
| காட்டில் மறங்கள் வளரும் | காட்டில் மரங்கள் வளரும் |
| தீ எறிந்தது | தீ எரிந்தது |
| ஆற்றில் கறைத்த புளி | ஆற்றில் கரைத்த புளி |
| வேலை நிருத்தினான் | வேலை நிறுத்தினான் |
| சோரு வெந்தது | சோறு வெந்தது |
| மனம் வேருபட்டான் | மனம் வேறுபட்டான் |
| சூராவளி | சூறாவளி |

### னகரமும் நகரமும்

| னக்கீரர் ஒரு புலவர் | நக்கீரர் ஒரு புலவர் |
|---|---|
| பொருனை நதி | பொருநை நதி |
| புந்னை மரம் | புன்னை மரம் |
| கந்நம் வைத்தான் | கன்னம் வைத்தான் |

### ணகரமும் னகரமும்

| கணிந்த பழம் | கனிந்த பழம் |
|---|---|
| இணிய சொல் | இனிய சொல் |
| நண்மை செய்தான் | நன்மை செய்தான் |
| வனக்கம் உரைத்தான் | வணக்கம் உரைத்தான் |
| உனர்ச்சி பெருகியது | உணர்ச்சி பெருகியது |
| சிறியது அனு | சிறியது அணு |

இவ்வாறு மேற்காட்டிய பிழைகளையும் திருத்தங்க
யும் கண்டு பிழைகளை நீக்கி எழுதப் பயில்க.

எழுத்து மாறினால் பொருளும் வேறுபடும். அடியி
காட்டும் சொல் பொருள் வேறுபாடு காண்க

| லகரம் | ளகரம் | ழகரம் |
|---|---|---|
| அலை = நீரில் வரும் அலை | அளை = புற்று, மலைக் குகை | அழை = கூப்பிடு |
| அலகு = பறவைகளின் மூக்கு, அளவு | அளகு = பெண் பறவை | அழகு = வனப்பு |
| கலை = படிக்கும் கல்வி | களை = நீக்கு | கழை = மூங்கில் |
| விலை = விற்றல் | விளை = பயிர் விளைவது | விழை = விருப்ப |
| வலை = மீன் பிடிக்கும் வலை | வளை = எலி, நண்டு முதலியவை இருக்கும் துளைகள் | வழை = சுரபுன்னை மரம் |
| தலை = முதன்மை, தலையென்னும் உறுப்பு | தளை = விலங்கு, கட்டு | தழை = இலை |

| ரகரம் | றகரம் |
|---|---|
| விரல் = கை கால்களில் உள்ள விரல்கள் | விறல் = வெற்றி |
| அரம் = இரும்பைத் தேய்க்கும் கருவி | அறம் = தருமம் |
| கரை = அழை, கரைத்து விடு | கறை = களங்கம் |
| மரு = மணம் | மறு = குற்றம், களங்கம் |
| தெரு = வீதி | தெறு = துன்பப்படுத்து, வருத்து என்ற ஏவல். |
| செரு = போர் | செறு = வயல் |

| ணகரம் | னகரம் |
|---|---|
| கண்ணன் = திருமால் | கன்னன் = பாண்டவருடன் பிறந்தவன் |
| கணை = அம்பு | கனை = நெருக்கம், ஒலி |
| புணை = மரக்கலம் | புனை = அலங்காரஞ் செய் |
| பணி = பாம்பு, ஆபரணம், வேலை | பனி = குளிர்ச்சி, பனிநீர் |
| தணி = நீக்கு | தனி = ஒன்ருக நிற்பது |
| மணை = பலகை | மனை = வீடு |

## மற்றப் பிழைகள்

கொன்டை, தன்டை என்பன பிழை. கொண்டை, தண்டை என்பன திருத்தமாகும். டகரத்திற்குமுன் மூன்று சுழி ணகரந்தான் வரும். இருசுழி னகரம் வராது.

பணின்தான் வாழ்ன்தான் எனபன பிழை. தகர வெழுத்துக்குமுன் அதற்கு இனமாகிய நகர வெழுத்துத் தான் வரும். இருசுழி னகரமெய் வராது. ஆகலால், பணிந் தான், வாழ்ந்தான் என்பன திருத்தம் ஆகும்.

நிந்ருன், கொந்ருன் என்பன பிழை. நின்ருன், கொன் ருன் என எழுதுவதே திருத்தமாகும். றகரத்திற்குமுன் நகரமெய் வராது. அதற்கு இனமாகிய னகரமே வரும்.

குன்ரு, கன்ரு என்பன பிழையாம் குன்று எனவும் கன்று எனவும் எழுதுவதுதான் திருத்தம். இருசுழி னகரத்திற்குப்பின் வல்லின றகரமே வரும். இடையின ரகரம் வராது.

கற்ப்பார், விற்க்கும் சிற்ப்பம் என எழுதுவது பிழை. வல்லினமாகிய றகர மெய்க்குப்பின் ஒரு மெய்யெழுத்தும் நில்லாது. கற்பார், விற்கும், சிற்பம் என்று எழுதுவது தான் சரி.

## 4. வாக்கிய முடிவுப் பிழைகளும் திருத்தமும்

(1) இராமன் நேற்று வருவான். இதில் நேற்று என்ற இறந்த காலத்துக்கு எதிர்கால முடிவு கொடுக்கப் பட்டிருக்கிறது. காலம் பிழைபட்டது. நேற்று என்பதற்கு ஏற்றது அன்று; இராமன் நேற்று வந்தான் என்பதே பிழை படாத முடிவு ஆகும்.

(2) அண்ணா! நில்; நானும் வந்தேன். இதில் வந்தேன் என்பது இறந்தகால வினைமுற்று. நில் என்று சொல்லி அப்போதுதான் அவன் வருகிறான் ஆதலால் வந்தேன் என்று இறந்தகால முடிவு கூறியது பிழை. வருகிறேன் என்று முடிப்பதுதான் சரி.

(3) அரசன் உலகை ஆண்டது. இதில் அரசன் உயர்திணை ஆண்டது என்ற பயனிலை அஃறிணைக்குரியது. ஆதலால் முடிவு சரியன்று. அரசன் உலகை ஆண்டான் என்பதே பிழையில்லாத முடிவு ஆகும்.

(4) பசு வந்தான் இதில் பசு என்பது அஃறிணைப் பொருள். வந்தான் என்பது உயர்திணைக்குரிய வினை முற்று. ஆதலால், இம்முடிவு பிழையானது. பசு வந்தது என்பதுதான் பிழையில்லாத முடிவு ஆகும்.

(5) கிளிகள் பறந்தது. இதில் கிளிகள் என்பது பன்மைப்பெயர்: பறந்தது என்பது ஒருமை வினை. இம் முடிவு பொருத்தமில்லை. கிளிகள் பறந்தன என்பதுதான் பிழையில்லாத முடிவு

(6) பூனை வந்தன. இதில் பூனை என்பது ஒருமைப் பெயர்; வந்தன எனப் பன்மை முடிவு கொண்டது பிழை. பூனை வந்தது என்பதுதான் பொருத்தமான முடிவு.

(7) நான் படித்தான். இதில் நான் என்பது தன்மை யொருமைப் பெயர்; படித்தான் படர்க்கை யாண்பாற்குரிய வினைச்சொல். நான் என்பதற்கேற்றதன்று. ஆதலால்

பிழைபட்டது. நான் படித்தேன் என்று கூறுவதே பொருத்தமானது

(8) நாம் படித்தார். இதில் நாம் என்பது தன்மைப் பன்மை. அதற்குப் பொருத்தமான பயனிலையில்லை. ஆதலால் இது இடப்பிழை. நாம் படித்தோம் என்று திருத்தினால் பொருத்தம் ஆம்.

(9) நீ வருவோம். இதில் நீ என்னும் முன்னிலை யொருமை எழுவாய்க்கு, 'வருவோம்' என்ற தன்மைப் பன்மைப் பயனிலை கொடுத்து முடித்திருக்கிறது. நீ வருவாய் என முன்னிலை யொருமைப் பயனிலை கொடுத்து முடிப்பதுதான் சரி.

(10) நீவிர் கொடுப்பார். இதில் நீவிர் என்ற முன்னிலைப் பன்மை யெழுவாய்க்குக் 'கொடுப்பார்' என்ற படர்க்கைப் பலர்பாற் பயனிலை கொடுத்திருக்கிறது. முடிவு பிழை. நீவிர் கொடுப்பீர் என முன்னிலைப் பன்மைப் பயனிலை வருவது சரியானது.

இவ்வாறு எழுவாய்க்கு ஏற்ற பயனிலையமைத்து முடிக்கவேண்டும். எழுவாய் உயர்திணையாயின் பயனிலையும் உயர்திணையாக இருத்தல் வேண்டும். அஃறிணையாயின் அதுவும் அவ்வாறே அமைதல் வேண்டும்; இது திணைப் பொருத்தம் ஆகும்.

எழுவாய் ஆண்பாலாயின் பயனிலையும ஆண்பாலாக இருத்தல் வேண்டும். பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் இவற்றுள் எது எழுவாயாயினும் பயனிலையும் அவ்வாறே யமைதல் வேண்டும். பாற்பொருத்தம் இது.

ஒருமை பன்மை மாறுபடாமல் பொருந்தி வருவது எண்பொருத்தம் ஆகும். தன்மை முன்னிலை படர்க்கை ஆகிய இடம் அவ்வாறு பொருந்தி அமைவது இடப் பொருத்தம் ஆகும். ஆய்ந்து பொருத்தமாக வாக்கியம் அமைத்துக் கொள்க.

## 5. வாக்கிய மாற்றம்

### தனி வாக்கியங்களைத் தொடர்வாக்கியமாக மாற்றுதல

சேரன் செங்குட்டுவன் வடநாடு சென்றான்

சேரன் செங்குட்டுவன் வடநாட்டு மன்னருடன் போர்புரிந்தான்

சேரன் செங்குட்டுவன் வெற்றி பெற்றான்

சேரன் செங்குட்டுவன் தன் ஊருக்கு மீண்டு வந்தான்.

**இவை தனி வாக்கியங்கள்.** இவற்றைத் தொடர் வாக்கியங்களாக மாற்ற வேண்டுமாயின், முதலில் ஓர் எழுவாயும் இறுதியில் ஒரு வினைமுற்றும் வைத்துக்கொண்டு மற்றை வினைமுற்றுக்களை யெல்லாம் வினையெச்சமாக்கினால் **தொடர் வாக்கியம்** ஆகும்.

சேரன் செங்குட்டுவன், வடநாடு சென்று, மன்னர்களுடன் போர்புரிந்து, வெற்றிபெற்றுத் தன் ஊருக்கு மீண்டு வந்தான்.

### தொடர் வாக்கியத்தைத் தனி வாக்கியங்களாக மாற்றுதல்

நாட்டில் மழைபெய்து, உணவுப்பொருள்கள் விளைந்து, மக்கள் எல்லாரும் பசிப்பிணி நீங்கிச் செழித்து வாழ்கின்றனர்.

**இது தொடர் வாக்கியம்.** இதனைத் தனி வாக்கியமாக மாற்றவேண்டுமாயின் முதலில் வினையெச்சங்களை யெல்லாம் வினைமுற்றாக்கித் தனித்தனி ஒருவாக்கியமாக நிறுத்த வேண்டும்.

*(1)* நாட்டில் மழை பெய்தது

*(2)* உணவுப்பொருள்கள் விளைந்தன

(3) மக்கள் எல்லோரும் பசிப்பிணி நீங்கினர்.
(4) மக்கள் எல்லோரும் செழித்து வாழ்கின்றனர்.

இதுவே தொடர் வாக்கியத்தைத் தனிவாக்கியமாக மாற்றும் விதம்.

## கலவை வாக்கியத்தைத் தனி வாக்கியங்களாக மாற்றுதல்

கோவலன் கண்ணகியை நோக்கி, "மதுரைக்குப் போவோம் வா" என்று கூறினான். இது கலவை வாக்கியம்.

இதனைத் தனி வாக்கியங்களாக மாற்றவேண்டுமாயின் 'நோக்கி' என்னும் வினையெச்சத்தை முற்றாக்க வேண்டும்.

கோவலன் கண்ணகியை நோக்கினான்.

மதுரைக்குப் போவோம் வா என்று கூறினான்.

இதுவே கலவை வாக்கியத்தைத் தனி வாக்கியங்களாக மாற்றும் விதம்.

நாவல் மரத்தில் ஏறியிருந்த ஒரு சிறுவன் ஔவையாரை நோக்கி, "சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா?" என்று கேட்க, "சுடாத பழமே போடு" என்றாள். இது நீளமான கலவை வாக்கியம்.

இதனையும் எச்சங்களையெல்லாம் வினைமுற்றாக்கித் தனி வாக்கியங்களாக மாற்றலாம்.

(1) நாவல் மரத்தில் ஏறியிருந்தான் ஒரு சிறுவன்.
(2) சிறுவன் ஔவையாரை நோக்கினான்.
(3) சிறுவன் "சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா?" என்று கேட்டான்.
(4) ஔவையார் "சுடாத பழமே போடு" என்று சொன்னாள்.

இவ்வாறே வாக்கியங்களை மாற்றியமைக்கும் வழிகளையறிந்து மாற்றுக.

## 6. நிறுத்தக் குறிகள்

உரைநடைகளைப் படிக்கும்போது சொற்றொடர்களில் உள்ள பொருளை மாறுபாடின்றித் தெளிவாக எல்லாரும் அறிந்துகொள்வதற்காகப் பல இடங்களில் நிறுத்திப் படிக்கவேண்டும். அவ்வாறு நிறுத்தவேண்டிய இடங்கள் தோன்றுவதற்காக இடப்படும் அடையாளங்கள் நிறுத்தக் குறிகள் எனப்படும். அவை முற்றுப்புள்ளி, முக்காற்புள்ளி, அரைப்புள்ளி, காற்புள்ளி, வினாக்குறி, விளிக்குறி, உணர்ச்சிக்குறி, மேற்கோட்குறி எனப் பலவகைப்படும்.

### (i) முற்றுப்புள்ளி (.)

ஒரு சொற்றொடர் அல்லது வாக்கியம் முடிவு பெற்ற இடத்தில் முற்றுப்புள்ளி இடவேண்டும். பயிர் விளைந்தது. "விளைந்தது" என்ற வினைமுற்று, பொருள் முடிவு பெற்றதைக் காட்டுகின்றது. ஆதலால், அதன்பின் முற்றுப்புள்ளி வைக்கவேண்டும்.

### (ii) முக்காற்புள்ளி (:)

ஆசிரியர் பின்வருமாறு வினவுகின்றார்: இவ்வாறு முதலிற் கூறிப் பின் விளக்கம் வருதால், "வினவுகின்றார்" என்ற வினைமுற்றின்பின் முக்காற்புள்ளி யிடுதல் வேண்டும். சிறிய தலைப்புக்களின் பின்னும் முக்காற்புள்ளி யிடலாம்.

### (iii) அரைப்புள்ளி (;)

பூமி உருண்டையானது; பரப்புடையது; வலிமை யுடையது; எப்போதும் சுழல்வது.

இவ்வாறு தொடர் வாக்கியத்தில் ஒவ்வொரு பகுதியிலும் அரைப்புள்ளியிடுதல் வேண்டும். வாக்கியம் முடிவு பெற்ற இடத்தில்மட்டும் முற்றுப்புள்ளி இடவேண்டும்.

### (iv) காற்புள்ளி (,)

செங்குட்டுவன் வடநாடு சென்று, அந்நாட்டு மன்னர்களோடு போர்புரிந்து வெற்றிபெற்று மீண்டான்.

### (viii) மேற்கோட்குறி (“ ”)

(1) தந்தை மைந்தனை நோக்கி, “ஏன் நீ வாடி யிருக்கின்றாய்?” என்று வினவினார்.

(2) கண்ணன் தினையைப் பார்த்து, “அப்புறம் செல்” என்றான்.

(3) ஒரு கள்ளன், “பாம்பே பாம்பின் கால் அறியும்” என்ற பழமொழிப்படி மற்றொரு கள்ளனை அறிவான்.

(4) திருவள்ளுவர், “எண்ணென்ப ஏனை எழுத் தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழும் உயிர்க்கு” என்று கூறினார்.

(5) முருகன் “நான் விளையாடச் செல்வேன்” என்று கூறி வெளியிற் சென்றான்.

இவ்வாறு வினவும்போதும், கட்டளையிடும்போதும், பழமொழிகள் முதலியவற்றை மேற்கோளாக எடுத்தாளும் போதும், பிறர் கூற்றை ஒருவன் நேர்கூற்றாகக் கொண்டு மொழியும்போதும் மேற்கோட்குறி யிடப்படும்.

## 7. வல்லெழுத்து மிகும் இடங்களும் மிகா இடங்களும்

### (i) வல்லினம் மிகும் இடங்கள்

அ + காடு = அக்காடு
இ + காடு = இக்காடு
உ + காடு = உக்காடு
எ + போது = எப்போது

இவ்வாறு அ, இ, உ என்ற சுட்டெழுத்தின்முன் வரும் வல்லினம் மிகும்; எ என்னும் வினாவின்முன் வரும் வல்லினமும் மிகும்.

அந்த + காக்கை = அந்தக் காக்கை
இந்த + கழுகு = இந்தக் கழுகு
எந்த + பூனை = எந்தப் பூனை
அப்படி + செய்தான் = அப்படிச் செய்தான்
இப்படி + பேசினான் = இப்படிப் பேசினான்
எப்படி + பார்க்கமுடியும் = எப்படிப் பார்க்க முடியும்

அந்த இந்த என்ற சுட்டிடைச் சொற்களின் முன்னும், எந்த என்னும் வினா இடைச்சொல்லின் முன்னும், அப்படி இப்படி எப்படி என்ற சொற்களின் முன்னும் வல்லினம் மிகும்.

சொன்னபடி + செய்தான் = சொன்னபடி செய்தான்
உண்ணும்படி + சோறிட்டான் = உண்ணும்படி சோறிட்டான்.

இவ்வாறு படி என்ற சொல் வினைச்சொல்லுடன் சேர்ந்து நின்றால் அதற்கு முன்வரும் வல்லினம் மிகாது.

கொக்கு + தலை = கொக்குத் தலை
பட்டு + துணி = பட்டுத்துணி
கச்சு + கட்டில் = கச்சுக் கட்டில்

இவ்வாறு வன்றொடர்க் குற்றியலுகரத்தின் முன் வரும் வல்லினம் மிகும்.

நிலா + காலம் = நிலாக்காலம்
மணி + கொடி = மணிக்கொடி
ஈ + சிறகு = ஈச்சிறகு
விழு + குடி = விழுக்குடி

இவைபோல நிலைமொழியீற்றில் உயிரெழுத்து நின்று வருமொழி முதலில் வல்லினம் வந்தால் மிகும்.

உலகு + ஐ = உலகைப் புரந்தான்
என் + ஐ = என்னைக் கண்டான்
ஏழை + கு = ஏழைக்குக் கொடுத்தான்
அரசர் + கு = அரசர்க்குத் தக்கது

இரண்டாம் வேற்றுமையுருபு ஆகிய ஐ விரிந்து நின்ற போதும் நான்காம் வேற்றுமையுருபு ஆகிய கு விரிந்து நின்றபோதும் வரும் வல்லினம் மிக்கது.

அங்கு + கண்டேன் = அங்குக் கண்டேன்
இங்கு + சென்றேன் = இங்குச் சென்றேன்
ஆங்கு + போனான் = ஆங்குப் போனான்
ஈங்கு + தேடினான் = ஈங்குத் தேடினான்
ஆண்டு + போந்தான் = ஆண்டுப் போந்தான்

இவ்வாறு, அங்கு, இங்கு, எங்கு, ஆங்கு, ஈங்கு, யாங்கு, ஆண்டு, ஈண்டு, யாண்டு என்ற சொற்களின் முன் வரும் வல்லினம் மிகும்.

அவ்வகை, இவ்வகை, எவ்வகை என்ற சொற்களின் முன் வரும் வல்லினம் மிகும்.

அவ்வகை + பேச்சு = அவ்வகைப் பேச்சு
இவ்வகை + காட்சி = இவ்வகைக் காட்சி
எவ்வகை + சூழ்ச்சி = எவ்வகைச் சூழ்ச்சி

எனக் காண்க.

யானை + கோடு = யானைக்கோடு
மலை + குகை = மலைக்குகை
வாழை + பழம் = வாழைப்பழம்

எனச் சில வேற்றுமைத் தொகையிலும்,

ஆடி + திங்கள் = ஆடித்திங்கள்
சாரை + பாம்பு = சாரைப்பாம்பு

என இரு பெயரொட்டுப் பண்புத் தொகையிலும்,

தீமை + குணம் = தீமைக்குணம்

எனப் பண்புத் தொகையிலும்,

பனை + கை = பனைக்கை
குவளை + கண் = குவளைக்கண்

என உவமைத் தொகையிலும் வல்லினம் மிகுந்து வரும்.

உண்ணாத + குதிரை = உண்ணாத குதிரை

என்று ஈறுகெடாத எதிர்மறைப் பெயரெச்சத்தின் முன் இயல்பாக நிற்கும்.

உண்ணா + குதிரை = உண்ணாக் குதிரை

என ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாயின் வரும் வல்லினம் மிகும்.

போய் + கண்டான் = போய்க்கண்டான்
மெய் அன்றி + பேசான் = மெய்யன்றிப் பேசான்
ஊண் இன்றி + களித்தான் = ஊண் இன்றிக் களித்தான்.
இனிமை ஆக + பாடினான் = இனிமையாகப் பாடினான்
கண் என + காத்தான் = கண் எனக் காத்தான்
தேட + புறப்பட்டான் = தேடப்புறப்பட்டான்
வாடி + கலங்கினான் = வாடிக் கலங்கினான்

ய் என்ற விகுதியுடைய வினையெச்சம், அன்றி, இன்றி என்ற எதிர்மறை வினையெச்சம், செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம், இகர விகுதிபெற்ற இறந்தகால வினையெச்சம் இவற்றின்முன் வந்த வல்லினம் மிகும்.

திரு + பாதம் = திருப்பாதம்
உடு + கணம் = உடுக்கணம்
} குறிலைச் சார்ந்துவரும் முற்றியலுகரத்தின் முன் வல்லினம் மிக்கது.

| | |
|---|---|
| நிலா + கதிர் = நிலாக்கதிர்<br>இரா + பகல் = இராப்பகல் | குறிலைச் சார்ந்து வரும் ஆகாரவீற்றுப் பெயர்முன் வல்லினம் மிக்கது. |
| தீ + பற்றியது = தீப்பற்றியது<br>பூ + பறித்தான் = பூப்பறித்தான்<br>ஈ + கால் = ஈக்கால் | ஓரெழுத்தொரு மொழிகளின் பின் வல்லினம் மிக்கது. |

## (1) வல்லினம் மிகா இடங்கள்

| | |
|---|---|
| அது + கொடியது = அது கொடியது<br>இது + புதியது = இது புதியது<br>எது + படித்தனை = எது படித்தனை | அது, இது, எது என்ற சுட்டு வினாவின் முன் வந்த வல்லினம் மிகாது. |

யாது, எது, அவை, இவை, எவை, யாவை, அத்தனை, இத்தனை, எத்தனை, அவ்வளவு, இவ்வளவு, எவ்வளவு என்பவற்றின் முன்னும் வல்லினம் மிகாது.

| | |
|---|---|
| அவன் + ஆ = அவனா வந்தவன்?<br>அது + ஓ = அதுவோ நின்றது?<br>நான் + ஏ = நானே செயவேன்? | ஆ, ஓ, ஏ என்ற வினாப் பொருளைக் காட்டும் எழுத்துக்களின் முன் வல்லினம் மிகாது |

கண்ணி + கட்டினன்
குருவி + பிடித்தான்

என இரண்டாம் வேற்றுமைத் தொகையிலும்,

அரசன் + ஒடு = அரசனொடு சென்றான்
அரசன் + ஓடு = அரசனோடு சென்றான்

என மூன்றாம் வேற்றுமை யுருபாகிய ஒடு, ஓடு என்பதற்கு முன்னும்,

கண்ணகி + கணவன் = கண்ணகி கணவன்
மாதவி + புதல்வி = மாதவி புதல்வி

என உயர்திணைப் பெயர்களின் முன்னும் வரும் வல்லினம் இயல்பு ஆகும்.

சாத்தன் + அது + தலை = சாத்தனது தலை
கொற்றன் + உடைய + தோள் = கொற்றனுடைய தோள்

என ஆறும் வேற்றுமை யுருபுகளின் முன்னும்,

காக்கை + கரைந்தது = காக்கை கரைந்தது
குருவி + கூப்பிட்டது = குருவி கூப்பிட்டது

என எழுவாய்த் தொடரிலும்,

மன்னு + தருவாய் = மன்னு தருவாய்
அண்ணலே + கொடுப்பாய் = அண்ணலே கொடுப்பாய்

என விளித்தொடரிலும்,

ஊறு + காய் = ஊறு காய்
ஆடு + பாம்பு = ஆடு பாம்பு

என வினைத்தொடரிலும்,

கனி + கற்கண்டு + சீனி = கனி கற்கண்டு சீனி
மாடு + புலி + கரடி = மாடு புலி கரடி

என உம்மைத்தொகையிலும்,

படித்த + சாத்தன் = படித்த சாத்தன்
படிக்கின்ற + சாத்தன் = படிக்கின்ற சாத்தன்
உண்ட + கண்ணன் = உண்ட கண்ணன்
உண்கின்ற + கண்ணன் = உண்கின்ற கண்ணன்

எனப் பெயரெச்சத்தின் முன்னும்,

வந்தது + பசு = வந்தது பசு

நின்றன + காளைகள் = நின்றன காளைகள்

பாய்ந்தது + புலி = பாய்ந்தது புலி

பாய்ந்தன + புலிகள் = பாய்ந்தன புலிகள்

என வினைமுற்றுக்களின் முன்னும்,

உண்டு + போனான் = உண்டு போனான்

நினைந்து + தேடினான் = நினைந்து தேடினான்

விரைந்து + சென்றான் = விரைந்து சென்றான்

வந்து தங்கினான் = வந்து தங்கினான்

என உகர விகுதிபெற்ற செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சங்களின் முன்னும் வரும் வல்லினம் இயல்பாக நிற்கும்.

இரு + கோடு = இரு கோடு

ஒரு + கோடு = ஒரு கோடு

ஆறு + கால் = ஆறு கால்

எழு + புலி = எழு புலி

என எண்ணுப்பெயர் முன்னும் வல்லினம் மிகாது.

# பயிற்சிகள்

I

1. முதல் எழுத்துக்கள் எவை?
2. சார்பு எழுத்துக்கள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?
3. குற்றியலுகரம் என்பது யாது?
4. குற்றியலுகரம் எத்தனை வகைப்படும்? எவ்வாறு?
5. பாட்டு, [illegible], அஃது, [illegible] இவை என்ன தொடர்க் குற்றியலுகரங்கள்?
6. எது குற்றியலிகரம் எனப்படும்?
7. ஒரு மாத்திரை, இரண்டு மாத்திரை உடைய எழுத்துக்கள் எவை?
8. உயிரளபெடைக்கு மாத்திரை எவ்வளவு?
9. கால் மாத்திரை ஒலிக்கும் எழுத்துக்கள் எவை?
10. எவ்வெழுத்துக்கள் அரை மாத்திரை ஒலிக்கும்?

II

1. ஓரெழுத்து ஒருமொழிகள் எவை?
2. பகுபத உறுப்புக்கள் எத்தனை? எவை?
3. வளர்ந்தான், பாடினன், சென்றாள், நிறகிறார், வருவார்—இவற்றுக்கு உறுப்பிலக்கணம் தருக.
4. ஆகுபெயர் எனப் பெயர்வரக் காரணம் என்ன?
5. மதுரை வென்றது; பாதிரி மலர்ந்தது—இவை என்ன ஆகுபெயர்கள்? எவ்வாறு?
6. தல், அல், கை, சி என்ற தொழிற் பெயர் விகுதிகளை அமைத்து உதாரணங்கள் தருக.
7. தொல்லை, மாட்சி, நலம், நன்னர்—இவற்றில் அமைந்த பண்புப் பெயர் விகுதிகளை எடுத்து எழுதுக.
8. அடி, உதை, பற்று, உரை என்பன முதனிலைத் தொழிற் பெயர்கள். இவைகட்கு அப்பெயர் எப்படி வந்தது?

9. ஊண், பேறு, கேடு, வீடு என்ற முதனிலை திரிந்த தொழிற் பெயர்கள் திரிவதற்கு முன் எவ்வாறு இருக்கும்?

10. பாடினவனைக் கூப்பிடு, நின்றவனுக்குக் கொடுத்தான், உறங்கினவன் அலறினான்—இவற்றில் எவை வினையாலணையும் பெயர்கள்? ஏன் அப்பெயர் பெற்றன?

11. தொழிற் பெயர்க்கும் வினையாலணையும் பெயர்க்கும் உள்ள வேறுபாடு யாது?

12. வேற்றுமை எத்தனை வகைப்படும்? அவை எவை?

13. முதல் வேற்றுமை எவற்றைக் கொண்டு முடியும்?

14. ஊரை அடைந்தான், வாழ்வைத் துறந்தான்—இவற்றில் உள்ள 'ஐ' உருபு எப்பொருள்களைத் தந்தது?

15. மூன்றும் வேற்றுமையின் உருபுகள் எவை? அவற்றின் பொருள்கள் யாவை?

16. கொடைப்பொருள், முறைப் பொருள், தகுதிப்பொருள்—இவற்றை உதாரணம் காட்டி விளக்குக. இவை எந்த வேற்றுமைக்கு உரியவை?

17. "பாலின் வெளிது கொக்கு, மதுரையின் வடக்குத் தில்லை"—இவற்றில் உள்ள உருபையும் பொருளையும் விளக்கி எழுதுக.

18. தற்கிழமை, பிறிதின்கிழமை—இவற்றை விளக்கி உதாரணங்கள் தருக.

19. நெல்லது பொரி, முருகனது நிலம்—இவ்வுதாரணங்களில் வந்த உருபையும் பொருள்களையும் எழுதுக.

20. ஏழாம் வேற்றுமையின் உருபுகள் எவை?

21. பெயர்ச்சொல் விளி ஏற்கும்போது என்ன என்ன மாறுதல்களை அடையும்?

22. வினைச்சொல் எதனை உணர்த்தும்?

23. தெரிநிலை வினைச்சொல்லில் எவை ஆறும் வெளிப்படையாகத் தோன்றும்?

24. உண்டான், மேய்ந்தது—இவற்றைத் தெரிநிலை வினைமுற்று என்று ஏன் கூறுதல் வேண்டும்?

25. குறிப்பு வினைமுற்று எவற்றை அடிப்படையாகக் கொண்டு தோன்றும்?

26. செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று எவற்றோடு பொருந்தி வாராது?

27 இடைச்சொல் என்று பெயர்வரக் காரணம் என்ன?
28. எவை எவை இடைச்சொற்களாக வரும்?
29 குறிப்புப் பொருளைத் தரும் இடைச்சொற்களை எடுத்து எழுதுக
30. ஏகார இடைச்சொல் எவ்வெப் பொருளில் வரும்?
31 ஒகார இடைச்சொல் எத்தனை பொருளில் வரும்? அவற்றுள் எவையேனும் இரண்டற்கு உதாரணங்கள் தருக.
32 எதிர்மறை, இழிவு சிறப்பு, ஆக்கம், முற்று—என்னும் பொருள்களில் வந்த உம்மைகளை உதாரணங் காட்டி விளக்குக
33 கொல் என்னும் இடைச்சொல் எவ்வெப் பொருளில் வரும்?
34. ஒரு குணம் தழுவிய உரிச்சொல் என்றால் என்ன?
35. ஒரு குணம் தழுவிய உரிச்சொற்கள் எவை?
36. "கடி" என்னும் உரிச்சொல் தரும் பொருள்களில் எவையேனும் நான்கினை எழுதுக

III

1. இயல்பு வழக்கு எத்தனை வகைப்படும்? அவை யாவை?
2. தகுதி வழக்கு—என்னும் பெயர் எதனால் வந்தது?
3 மரூஉ மொழி, குழூஉக்குறி—இவற்றை உதாரணம் காட்டி விளக்குக.
4. புறநகர், எந்தை, துஞ்சினான், நன்காடு—இவை எவற்றுக்கு உதாரணங்களாக வந்தன?
5. கொல்யானை, ஆயன் கண்ணன், பொற்றொடி வந்தாள், பவளவாய்—இவற்றை என்ன என்ன தொகை என விளக்கி எழுதுக.
6 தொகாநிலைத் தொடர் எத்தனை வகைப்படும்? அவை யாவை?
7. உண்டான் சாத்தன்; உண்டு வந்தான், பாம்பு பாம்பு—இவை எத் தொடர்களுக்கு உதாரணங்கள்? விளக்கி எழுதுக.

## IV

1. புணர்ச்சி எத்தனை வகைப்படும்? அவை எவை?
2. விகாரப் புணர்ச்சியின் வகைகளை உதாரணங் காட்டி விளக்குக.
3. மரமேறினான், பாலினிமை, காலொடிந்தது—இவற்றைப் பிரித்துப் புணர்ந்த விதத்தை எழுதுக.
4. கண்ணொளி, மண்ணுலகம், கலமிறந்தான்—இவை புணரும்போது இடையில் ஒற்று இரட்டியது ஏன்?
5. யகர உடம்படுமெய் எவ்விடத்தில் வரும்?
6. வகர உடம்படுமெய் எவ்விடத்தில் வரும்?
7. இயல்பு சுறு, விதி சுறு—இவற்றை விளக்குக.
8. எவற்றின் முன் வல்லினம் மிகும்?
9. எவற்றின் முன் வல்லினம் மிகாது?
10. குற்றியலுகரத்தின் முன் உயிர் வந்தால் எவ்வாறு புணரும்?
11. காரியாது, சங்கியாது, மரப்பியாது, கொக்கியாது—இவற்றைப் பிரித்துப் புணர்ந்த விதியை எழுதுக. இப்புணர்ச்சி என்ன பெயர் பெறும்?

## V

1. செய்யுளின் உறுப்புக்கள் எவை?
2. எவை நேரசை எனப்படும்? எவை நிரையசை எனப்படும்?
3. சீர் எத்தனை வகைப்படும்? அவை எவை?
4. ஈரசைச் சீர்களின் வாய்ப்பாடுகளை எழுதுக.
5. ஈரசைச் சீருக்குள்ள வேறு பெயர்கள் எவை?
6. மூவசைச் சீருக்குள்ள வேறு பெயர்களை எழுது.

## VI

1. இயல்பு நவிற்சி அணி என்றால் என்ன?
2. எது உயர்வு நவிற்சி அணி எனக் கூறப்படும்?
3. எவற்றைக் காரணமாகக் கொண்டு உவமை கூறப்படும்?
4. அங்கைம்மலர், அடித்தளிர், கண்வண்டு—இவை எவ்வணியின் பாற்படும்? எவ்வாறு?
5. உவமைக்கும் உருவகத்துக்கும் உள்ள வேறுபாடு யாது?
6. மலர்க்கை, அடித்தளிர், பவளவாய், முகமதி—இவற்றைப் பிரித்துப் பொருள் எழுதுக. இவற்றுள் எவை உவமைகள்? எவை உருவகங்கள்?

## VII

1. வாக்கியத்தின் உறுப்புக்கள் எவை?
2. தனிவாக்கியம் என்பது யாது? அதில் எத்தனை உறுப்புகள் அமைந்திருக்கும்?
3. தொடர் வாக்கியம் எவ்வாறு வரும்? உதாரணங்கள் தருக.
4. கலவை வாக்கியத்தில் எவை கலந்து இருக்கும்?
5. வாக்கியங்கள் எப்பொருத்தங்களையுடையனவாய் இருத்தல் வேண்டும்?
6. மாணவர் எப்பொருத்துக்களைப் பிழைபட எழுதுகின்றார்கள்?
7. பின் வரும் வாக்கியங்களில் உள்ள பிழைகளைத் திருத்துக :—

   அ. நேற்று என்னுடன் வந்தவர் நான்கு பேர்.
   ஆ. அவர்களிடத்தில் புத்தகங்கள் இருந்தது.
   இ. பாடம் படித்தவர் தோறும் நன்றாக எழுதுவர்.
   ஈ. வணக்கம் ஐயா, என்று மாணவன் உரைத்தான்.

8. பின்வரும் வாக்கிய முடிவுப் பிழைகளைத் திருத்துக :

   அ. வேலன் நாளைக்கு வந்தான்.
   ஆ. கந்தன் புத்தகம் எடுத்துக் கொண்டு ஓடியது.
   இ. நீவிர் வந்தார்.
   ஈ. நாம் படித்தேன்.
   உ. குதிரைகள் ஓடிற்று.

9. பின்வரும் தனி வாக்கியங்களைத் தொடர்வாக்கியமாக மாற்றுக —

   வரதன் கடைக்குச் சென்றான். வரதன் புத்தகங்கள் வாங்கினான். வரதன் குடையை வைத்துவிட்டான். வரதன் வீட்டிற்கு வந்தான்.

10. பின்வரும் கலவை வாக்கியத்தைத் தனி வாக்கியங்களாக மாற்றுக :—

    சோழ மன்னன் கம்பரை நோக்கி இராமாயணத்தைத் தமிழில் பாடித் தருக என்று கேட்க, கம்பர் விரைவில் பாடித் தருகிறேன் என்றார்.

11. நிறுத்தக் குறிகள் எவை? அவற்றை ஏன் இடுதல் வேண்டும்?

12. பின்வரும் உரைநடைப் பகுதியில் தக்க இடங்களில் நிறுத்தக் குறிகளை இடுக :—

தமிழ்நாட்டு இளைஞர்களே நீங்கள் உங்கள் தாய்மொழியினிடத்துப் பற்றுக்கொள்ளுங்கள் தமிழ் நூல்களை வாங்கிப் படித்து அறிவைப் பெருக்கிக்கொள்ளுங்கள் வெளிநாட்டு அறிஞர் போற்றிப் படித்து மகிழும் தமிழ்நூல்களை இந்நாட்டிலே பிறந்து தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட நீங்கள் கல்லாதிருப்பதுவும் அதனிடத்துப் பற்றுக் கொள்ளாதிருப்பதுவும் வியப்பாயிருக்கிறது இவ்வாறு நீங்கள் வாளாயிருப்பது நன்று நன்று என்று சொற்பொழிவாளர் நேற்றுக் கூறினர்.

13. அ + பலகை, இ + குரங்கு, உ + கரடி, எ + புத்தகம்—இவை எவ்வாறு புணரும்? இதனால் தெரியும் விதி என்ன?

14. அந்தப் பையன், இந்தக்கிணறு, எப்படிப் போனான்—இவற்றைப் பிரித்துப் புணர்ந்த விதத்தை எழுதுக.

15. வன்றொடர்க் குற்றியலுகரத்தின் முன் வரும் வல்லினம் எவ்வாறு புணரும்?

16. கல்லைக் குத்தினான், சொல்லைத் தட்டினான், கிளைக்குத் தாவினான், பள்ளிக்குச் சென்றான்—மேற்கண்ட சொற்றொடர்களில் வந்த உருபுகளை எடுத்து எழுதுக. இவ்வுதாரணங்களால் நீங்கள் தெரிந்துகொள்ளும் புணர்ச்சி விதிகள் எவை?

17. கார்த்திகைத் திங்கள், நன்மைச் செயல், உண்ணுக் குதிரை, வாராத களிறு—இவ்வுதாரணங்களால் தெரிந்து கொள்ளும் புணர்ச்சி விதிகள் எவை?

18. எந்த எந்த வினையெச்சங்களின் முன்வரும் வல்லினம் மிகும்?

19. செரு + பறை, திரு + பதி, பலா + காய், தை + திங்கள்—இப்புணர்ச்சிகளால் தெரிந்துகொள்ளும் விதிகள் எவை?

20. அது சிறிது, எது படித்துறை, அதுவோ சென்றது? நானே செய்தேன்? மாடு புலி—இப்புணர்ச்சிகளில் வலி மிக வில்லை. ஏன்?

21. சில எண்ணுப் பெயர்களின் முன் வலிமிகாது என்பதற்கு உதாரணங்கள் தருக.